# பாரதிதாசன்

பதிப்பாசிரியர்

**டாக்டர் ந. கடிகாசலம்**

முதுநிலை ஆராய்ச்சியாளர்

மொழிபெயர்ப்புத் துறை



**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

**சி. பி. டி. வளாகம், தரமணி, சென்னை-600 113**

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | — | BHARATHIDASAN |
| Editor | — | Dr. N. GHADIGACHALAM<br>SENIOR RESEARCH FELLOW<br>Dept. of Translation<br>International Institute of<br>Tamil Studies, Madras-113 |
| Publisher & Copyright | — | INTERNATIONAL INSTITUTE<br>OF TAMIL STUDIES<br>MADRAS-600 113 |
| Publication Number | — | 155 |
| Language | — | TAMIL & ENGLISH |
| Edition | — | First |
| Date of Publication | — | 10-4-1991 |
| Paper used | — | MANDYA D. DEMY 15.4 Kg |
| Size of the Book | — | 21 × 14 Cms |
| Printing types used | — | 10, 12 Points |
| Number of Pages | — | xvi+174 |
| Price | — | Rs. 27/- |
| Printers | — | R. K. M. Enterprises<br>40-B, Pattunoolkaran Thottam<br>Mylapore, Madras-600 004 |
| Binding | — | Card Board |
| Artist | — | Subha |
| Subject | — | A Comparative Study of<br>Bharathidasan and other<br>Poets |

# முன்னுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் கடந்த பல ஆண்டுகளாகத் திங்கள் கருத்தரங்கைத் தொடர்ந்து நடத்தி வருகிறது. 1974 நவம்பர் முதல் 1984 ஆகஸ்டு வரை இலக்கியக் கொள்கை எனும் பொதுத் தலைப்பில் இக்கருத்தரங்கு நடைபெற்றது. இதில் படிக்கப் பெற்ற 119 கட்டுரைகளில் தெரிவு செய்யப் பெற்ற 102 கட்டுரைகள் தமிழ் இலக்கியக் கொள்கை எனும் தலைப்பில் ஒன்பது தொகுதியாக நூல் வடிவம் பெற்றது குறிப்பிடத்தக்கது. அதன் பின்னர், நோக்கமும் பயனும், தமிழகக் கலைச் செல்வங்கள், தமிழாராய்ச்சியில் எழும் சிக்கல்கள் ஆகிய பொதுத் தலைப்புகளில் இக்கருத்தரங்கு நடைபெற்றது.

பாவேந்தர் பாரதிதாசன் நூற்றாண்டு விழாவைப் பயனுள்ள முறையில் கொண்டாட விரும்பிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் திங்கள்தோறும் பாவேந்தரின் படைப்புகளைப் பிறநாட்டு, பிறமொழிக் கவிஞர்தம் படைப்புகளோடு ஒப்பிட்டு ஆராய்வ தென முடிவெடுத்தது. இக்கருத்தரங்க அமைப்பாளர் பணி என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. பாவேந்தர் பற்றிய ஒப்பாய்வு 1990 ஏப்பிரல் முதல் 199 ஏப்பிரல் வரை நிகழ்த்தப்பெற்றது. இக்கருத்தரங்கில் படிக்கப்பெற்ற ஒப்பாய்வுக் கட்டுரைகள் **பாரதிதாசன்** எனும் நூலாக இப்போது உருப்பெற்றுள்ளன.

பாரதிதாசனும் கிளாட்மெக்கேயும் எழுச்சிக் கவிஞர்கள்; இனம், சினம், கண்டனம் ஆகியவற்றை மீறிய புரட்சிக் கவிஞர்கள். தமிழ் மறுமலர்ச்சிக்குப் பாரதிதாசனும், ஹார்லம் மறுமலர்ச் சிக்கு (அமெரிக்க) கறுப்புக் கவிஞர் மெக்கேயும் ஆற்றிய தொண்டு புகழ்ந்துரைக்கத்தக்கது. மானுட நேயத்திற்கு இவ்விரு கவிஞர் களும் கலங்கரை விளக்குகளாக ஒளி வீசுகின்றனர்.

சமுதாயம் ஏற்றம் பெறவேண்டும் என விழைந்த பாரதிதாசனும் பைரனும், மாற்றம் பெறவே எழுதிய காரணத்தால் புரட்சிக் கவிஞர்கள் ஆகின்றனர். பாரதிதாசன்—சமுதாயப் புரட்சிக் கவிஞர்; பைரன்—அரசியல் புரட்சிக் கவிஞர். இருவருமே எதிர்நீச்சல் போட்டுத்தான் எழுத்துலகில் இடம் பெற்றனர். போர் வீரன் கையில் உள்ள வாள் போல் தங்கள் எழுதுகோல் பயனுற உழைக்க வேண்டும் என்ற வேட்கையுடன் எழுதினர்.

பாரதிதாசன் தமிழக மக்களின் பிரதிநிதியாகவும், வால்ட் விட்மன் அமெரிக்க மக்களின் பிரதிநிதியாகவும் விளங்குகின்றனர். தம் காலத்தே கண்ட உண்மைகளை ஒளிவுமறைவின்றி எடுத்துரைப்பதில் இருவரும் இணையானவர்களே. இவ்விருவரும் கவிதை உலகில் புதுப் புரட்சியைக் கற்பனைக்கு எட்டாத மூர்க்கத்தோடும் வேகத்தோடும் கொண்டு செலுத்தினர். இயற்கையை அன்னையாகக் கண்டு மகிழ்ந்த பாரதிதாசனும் வால்ட் விட்மனும் கூனிக் கிடக்கும் மானுடத்தை நிமிர்த்த முயன்ற முரட்டுக் கவிஞர்களாவர்.

தமிழ் மொழியில் பிற மொழிச் சொற்கள் கலந்து விடாமல் தடுக்க வேண்டும் என்பதில் முனைப்புடன் இருந்தவர் பாரதிதாசன். அதுபோலவே அயரிய மொழித் தூய்மைக்காக அயராது பாடுபட்டவர் வில்லியம் பட்லர் யேட்சு. சமகாலத்தில் நிலவிய சிறுமைகளைக் கண்டு அவர்கள் கொதித்தெழுந்தனர். நாடு மட்டுமல்ல மனித உள்ளங்களும் அடிமைத் தளையின்றி, சுதந்திரமாக இருத்தல் வேண்டும் என்று பாரதிதாசனும் யேட்சும் விழைந்தனர்.

இறைமை மனித இயற்கைக்கு மாறானது எனக் கருதும் இராபர்ட் ஃபிராஸ்ட் போலவே, பாரதிதாசனும் மனித சமுதாயத்திற்கு இறைமை எதிரானது என எடுத்துரைக்கிறார்.

தன்மதிப்புத் தன்மை இவ்விருவரிடமும் குடிகொண்டிருந்தது. பாரதிதாசன், இயற்கையில் இன்புறும் கவிஞர். ஃபிராஸ்ட்டின் இயற்கை பற்றிய எண்ணங்கள் கசப்பான இனிப்பு மாத்திரைகளாகும். பாரதிதாசனும் இராபர்ட் ஃபிராஸ்ட்டும் உலக மக்களை ஒன்றுபடச் செய்யும் இணைப்புப் பாலமாகக் குறுக்குச் சுவர் இல்லாத நாட்டெல்லைகளைக் கருதினர்.

பாரதிதாசனும் ஜீவனானந்ததாசும் சமுதாய சீர்திருத்தக் கருத்துகளைப் பாடியவர்கள். தமிழ்நாட்டின் முன்னேற்றத்திற்காகத் தமது உயிரையும் கொடுக்கத் துணிந்தவர் பாரதிதாசன். இந்தப் பேரண்டத்தைப் பாடிய கவிஞரான ஜீவனானந்த தாசின் உயிரும் ஆன்மாவும் வங்காள மண்ணில்தான் நிலைத்திருக்கின்றன. மரபு வழிப்பட்ட இலக்கணத்தைப் பாரதிதாசன் போற்றிப் பாதுகாத்தார். ஆனால், ஜீவனானந்ததாசோ அதை உடைத்தெறிந்தார்.

பாரதிதாசன் பாடல்களும், இந்தியக் கவிஞர்களான நிராலா, ஜெயசங்கர் பிரசாத், ஹரிவம்சராய் பச்சன், மகாதேவி வர்மா, சுமித்ரானந்தன் பந்த், சச்சிதானந்த ஹீராநன், பாரதேந்து ஹரிச்சந்திரர், மைதிலி சரண்குப்தா ஆகியோர்தம்

பாடல்களும் ஒத்திருப்பதை பாரதிதாசனும் இந்திக் கவிஞர்களும் கட்டுரை புலப்படுத்துகிறது. தெற்கு—வடக்கு என்றாலும் கவியுள்ளம் ஒன்றே. தமிழ் மொழியை அன்னையாகப் போற்றுவது போல இந்தி மொழியை அன்னையாகப் போற்றும் பண்பு இன்னும் வளரவில்லை என்பது சுட்டத்தக்கது.

பாரதிதாசனும் உருசியக் கவிஞர் தாராசு செவ்சென்கோவும் உலகளாவிய புகழுக்கு உரிய மக்கள் கவிஞர்கள்; கொடுமைக்கு ஆளான மக்களுக்காகக் குரல் கொடுத்தவர்கள். அடிமைச் சேற்றில் ஆழ்ந்த மக்கள், தாங்கள் வாழ்கின்ற மண் தங்களுக் குரியது என்பதையே மறந்து விட்டபோது, அவர்களைத் தட்டி எழுப்பிய கவிஞர்களாக பாரதிதாசனும் செவ்சென்கோவும் விளங்குகின்றனர்.

பாரதிதாசனும் கீட்சும் புனைவியல் கவிஞர்கள் என்பது சிறப்பு நிலையிலமைந்த ஒப்பாய்வாகும். வாழ்க்கையின் சாதாரணத் துவத்திலிருந்து தப்பித்து வாழ்க்கையின் பிரும்மாண்டமான அழகைக் கண்டு, கேட்டு, உண்டு, உயர்த்து, உற்று ஐம்புலன்க ளாலும் சுவைத்தவர்கள் தாம் புனைவியல் கவிஞர்கள். அழகுத் தத்துவத்தைப் பாடிய மாபெருங்கவிஞர்களாகப் பாரதிதாசனும் கீட்சும் சிறந்து விளங்குகின்றனர். 'மானுடசமுத்திரம் நானென்று கூவு' என வேறெந்தக் கவிஞனும் பாடாதது குறிப்பிடத்தக்கது.

இயற்கையைப் பாடிய கவிஞர்கள் என்ற நிலையில் பாரதிதாசனும் வோர்ட்ஸ்வொர்த்தும் ஒப்பிடத் தக்கவர்கள். வோர்ட்ஸ்வொர்த் இயற்கையை வருணிப்பது என்பது ஆழ்ந்த நம்பிக்கையின் விளைவாகத் தென்படுகிறது; ஆனால், பாரதி தாசனோ வெறும் கவிதை வருணனை உத்தியாகக் கையாள் கிறார். இயற்கையோடு ஒன்றிப் போகும் வேளையில் உலகச் சுமைகளிலிருந்து விடுபட்டிருப்பது போன்று வோர்ட்ஸ்வொர்த் உணர்கிறார். கொள்ளை இன்பம் தரும் கருவூலமாக இயற்கை பாரதிதாசனுக்கு விளங்குகிறது.

பாரதிதாசனும் மலையாளக் கவிஞர்களும் சில கோணங்களில் ஒன்றுபடக் கவிதை புனைந்திருப்பதைக் காண முடிகிறது. சங்ஙம்புழயின் இயற்கை வருணனை பாரதிதாசனின் இயற்கை வருணனையோடு ஒப்பிடத்தக்கது. மலையாளத்தில் முப்பெருங் கவிஞர்களான வள்ளத்தோள், உள்ளூர், குமாரன் ஆசான் ஆகியோர்தம் படைப்புகள் பாரதிதாசன் படைப்புகளோடு ஒப்பிட்டு ஆராயத்தக்கவை. சில வேளையில் அவை மாறுபட்டு விளங்குவதையும் மறுப்பதற்கில்லை.

நிறுவனத்தின் வேண்டுகோளுக்கிணங்க, சொற்பொழிவை எழுத்துருவில் தந்திட்ட அறிஞர்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தென்னகப் பண்பாட்டு மையம், பெங்களூர்த் தமிழ்ச் சங்கம் இணைந்து பெங்களூரில் (8-3-91) நடத்திய பாவேந்தர் பாரதிதாசன் நூற்றாண்டு விழாவில் படிக்கப்பெற்ற **Bharathidasan and Wordsworth As Poets of Nature** எனும் ஒப்பாய்வுக் கட்டுரையை இந்நூலில் சேர்த்துக்கொள்ள இசைவளித்த டாக்டர் அ. அ. மணவாளன் (பேராசிரியர்—துறைத் தலைவர், தமிழ்மொழித் துறை, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை-5) அவர்களுக்கு மிக்க நன்றி.

பாரதிதாசன் ஒப்பாய்வுக்கு வித்திட்ட நிறுவன முன்னாள் இயக்குநர் டாக்டர் சு. செல்லப்பன் அவர்களுக்கு நன்றி.

பாரதிதாசன் நூற்றாண்டு நிறைவு விழாவில் இந்நூல் வெளியிடப்பட்டாக வேண்டும் என்பதில் தணியாத ஆர்வம் கொண்டு ஊக்குவித்த நிறுவன இணைப் பேராசிரியர் — இயக்குநர் (பொறுப்பு) டாக்டர் அன்னி தாமசு அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இந்நூலின் உருவாக்கத்திற்குப் பல்வேறு நிலைகளில் உறுதுணை புரிந்த நிறுவன முதுநிலை ஆராய்ச்சியாளர் டாக்டர் ச. சிவகாமி அவர்களுக்கு நன்றி தெரிவிப்பது என் கடமை.

நிறுவன, பாவேந்தர் நூற்றாண்டு விழாவுக்கெனக் கவிதை வழங்கிய திருமதி நிர்மலா சுரேஷ்; மிகக் குறைந்த காலத்தில் சிறப்பாக அச்சிட்டுத் தந்த ஆர். கே. எம். எண்டர்பிரைசஸ்; சிறந்த முறையில் அட்டைப்படத்தை வரைந்திட்ட ஓவியர் சுபா ஆகியோருக்கும் நன்றி.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தமிழாய்வு உலகில் தமிழ் இலக்கியக் கொள்கை, தமிழர் மரபுச் செல்வம், ஆண்டுகளில் தமிழ் எனப் பல நிலைகளில் முன்னின்று வழிகாட்டியது போன்று, பாரதிதாசன் பற்றிய ஒப்பாய்விலும் தன் முதன்மையை வெளிப்படுத்தியுள்ளதில் பெருமகிழ்வெய்துகிறோம். எந்த ஒரு தமிழ்க் கவிஞருக்கும் இந்த அளவிற்குப் பிற நாட்டு / மொழிக் கவிஞரோடு ஒப்பாய்வு நிகழ்த்தப்படவில்லை என்றே எண்ணுகிறோம். இவ்வகையில் சிறப்பு நூலான பாரதிதாசன் தமிழ்கூறு நல்லுலகத்தின் பேராதரவைப் பெறும் என நம்புகிறோம்.

ந. கடிகாசலம்

# பாரதிதாசன்

நிர்மலா சுரேஷ்

மரபுக் கவிதைக்கு
மயிலாசனம் இட்டவனே!
யுகங்கள் சந்திக்கும்போதும்
உன்னை
நலம் விசாரிக்காமல்
நகர முடியாது!

இலக்கிய நீலகிரி!
இலட்சிய ஏலகிரி!

சில நூல்களைக் கற்பது
அன்டார்டிகா பனிநில
ஆராய்ச்சியைப் போலக்
கடினமானது!
எவரெஸ்டைத் தொடுவதுபோல
அரிதானது!
உன்கவி சுவைப்பதோ
நயாகரா நீர்வீழ்ச்சியில்
நனைவதுபோல் நயமானது!

நீர்வீழ்ச்சி தரும்
மின்சார அதிர்ச்சியை
நீயும் தருவதுண்டு!

கவிதையில் ஊஞ்சலாடியே
களித்தவர் பலர்!
நீயோ, உன் பாட்டுவானில்
ஒரு நட்சத்திரப் போரையே
நடத்திக் கொண்டிருந்தாய்!

சமுதாயத்தின்
அழுக்குகளைக் கரைக்க வந்த
அமில மழையே!
உன் கவிதை --
போக உலகத்தின்
நாக மகுடியல்ல;
வளம் சேர்க்கவந்த
வலம்புரிச் சங்கு!

உன் ஓசை கேட்டால்
இந்த மண் சிலிர்க்கும்
கரிசல் காட்டுப் பருத்தி சிரிக்கும்!
வானவில்லும் நிமிரும்!
கொள்கைத் தொடுவானம்
கைக்கு வரும்!

சீர்திருத்தத்தின் சிறகு நீ!
தமிழின் இமை!

சங்கத் தமிழ் மண்ணில் வந்த
இறக்குமதிக்கெல்லாம்
சுங்க வரி நீ!

பாழாய்க் கிடந்த பெண்குலத்தை
யாழாய் மாற்ற முயன்றாய்!
வெறும்,
பூக்கம்பமாய் இருந்த மகளிரை
பூகம்பமாய் மாற்றினாய்!

உன் எழுத்து
பனித்துகளையும் வைரங்களாக்கியது!
பாரிஜாதங்களைச் சூரியகாந்திகளாக்கியது!
உறக்கத்தைக் கலைத்து ஊர்வலமாக்கியது!

கேட்டதைக் கொடுக்குமாம்
வானுலகக் கற்பகம்!
அந்தக் கற்பகத்தை
நீ நம்பவில்லை
கற்பு அகத்தில் வேண்டும்
என்றே நம்பினாய்!
காமதேனுவை நம்பவில்லை
காமம் தேன் அல்ல!
காதல்தான் தேன் என்றாய்!

பெண்ணைக் குடும்ப விளக்கென்றாய்!
நாங்கள்,
விளக்கில் கூட சாதி பார்ப்பவர்கள்...
வெள்ளி, பித்தளை, வெண்கலம் என்று...
விளக்குகளுக்குத் தரப்படும்
மதிப்புக் கூட
விளக்கேற்றும் விரல்களுக்கில்லையிங்கு!

2

நீ தாலாட்டுப் பாடினாய்!
தமிழகம் விழித்தெழுந்தது!

சமுதாயத்தில்
நீ மூட்டிய புரட்சித் தீ
மதுரை நெருப்பென்றால்
மற்றவர்களெல்லாம்
தீபாவளி மத்தாப்பூக்கள்தாம்!

வளைந்தாலும்
உன் கற்பனைகள்
காண்டீபமாய்த்தான்
வளைந்தன!
நிமிர்ந்தாலும்
உன் கருத்துக்கள்,
உணர்ச்சிகளைத் தேக்கிய
தேக்கு மரமாய்த்தான்
நிமிர்ந்தன!

இருட்டடிப்புச் செய்தாலும்
மின்னுகிற ரேடியம் நீ!

## கருத்தரங்க அட்டவணை

| நாள் | கட்டுரையாளர் | கட்டுரை |
|---|---|---|
| 11-4-90 | டாக்டர் தமிழன்பன்<br>தமிழ்த் துறை<br>புதுக் கல்லூரி<br>சென்னை-600 014 | பாரதிதாசனும்<br>நசுருல் இசுலாமும் |
| 9-5-90 | டாக்டர் தி. இராசகோபாலன்<br>தமிழ்த் துறை<br>சென்னைக் கிறித்தவக் கல்லூரி | பாரதிதாசனும்<br>ஜீவனானந்ததாசும் |
| 13-6-90 | திரு. த. கோவேந்தன்<br>1/8 மேட்டுத் தெரு<br>நந்தம்பாக்கம்<br>(வழி) குன்றத்தூர்-600 069 | பாரதிதாசனும்<br>ஷெல்லியும் |
| 11-7-90 | டாக்டர் சு. செல்லப்பன்<br>இயக்குநர்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>சென்னை-600 113 | பாரதிதாசனும்<br>தாராசு<br>செங்சென்கோவும் |
| 8-8-90 | திரு. எஸ். எஸ். குமார்<br>(வான்முகில்)<br>ஆங்கிலத் துறை<br>அரசு கலைக் கல்லூரி<br>கோவை-641 018 | பாரதிதாசனும்<br>கிளாட் மெக்கேயும் |
| 12-9-90 | டாக்டர் தி. லீலாவதி<br>தமிழ்த் துறை<br>ராணி மேரி கல்லூரி<br>சென்னை-600 004 | பாரதிதாசனும்<br>அல்லாமா<br>இக்பாலும் |
| 10-10-90 | டாக்டர் ந. கடிகாசலம்<br>மொழிபெயர்ப்புத் துறை<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>சென்னை-600 113 | பாரதிதாசனும்<br>வில்லியம் பட்லர்<br>யேட்சும் |

| | | |
|---|---|---|
| 14-11-90 | டாக்டர் அவ்வை சம்பந்தன்<br>மானிடவியல்—சமூக அறிவியல் துறை<br>அழகப்பா தொழில்நுட்பக் கல்லூரி வளாகம்<br>அண்ணா பல்கலைக் கழகம்<br>சென்னை-600 025 | பாரதிதாசனும் பைரனும் |
| 12-12-90 | டாக்டர் இராம. குருநாதன்<br>தமிழ்த் துறை<br>பச்சையப்பன் கல்லூரி<br>சென்னை-600 030 | பாரதிதாசனும் இராபர்ட் ஃபிராஸ்ட்டும் |
| 9-1-91 | டாக்டர் பி. கே. பாலசுப்பிரமணியன்<br>இந்தித் துறை<br>சென்னைக் கிறித்தவக் கல்லூரி<br>தாம்பரம், சென்னை-600 059 | பாரதிதாசனும் இந்திக் கவிஞர்களும் |
| 13-2-91 | டாக்டர் பொ. பாலசுப்பிரமணியம் (சிற்பி)<br>தமிழ்த் துறைத் தலைவர்<br>பாரதிதாசன் பல்கலைக் கழகம்<br>கோவை-641 046 | பாரதிதாசனும் மலையாளக் கவிஞர்களும் |
| 13-3-91 | டாக்டர் மா. கோதண்டராமன்<br>தமிழ்த் துறைத் தலைவர்<br>அஞ்சல் வழிக் கல்வி நிறுவனம்<br>சென்னைப் பல்கலைக் கழகம் | பாரதிதாசனும் வால்ட் விட்மனும் |
| 10-4-91 | டாக்டர் க. செல்லப்பன்<br>ஆங்கிலத் துறைத் தலைவர்<br>பாரதிதாசன் பல்கலைக் கழகம்<br>திருச்சிராப்பள்ளி-620 024 | Bharathidasan And Keats As Romantic Poets |

## உள்ளே...

# 1. பாரதிதாசனும் கிளாட் மெக்கேயும்

எஸ். எஸ். குமார் (வான்முகில்)

முன்னுரை

தங்கள் நாடுகளின் சுதந்திரத்துக்காக மட்டுமன்றி மனித சமுதாயத்தின் சுதந்திரத்துக்காகவும் எழுத்தாளர்கள் உலகெங்கிலும் குரல் எழுப்பி வந்துள்ளனர். எழுத்தாளனுக்கும் வாசகனுக்கும் உள்ள ஒத்திணைவினை விவாதிக்கும் ழீன் பால் சார்த்தர், எழுத்தாளனின் சுதந்திரம், பிற மாந்தர் அனைவரின் சுதந்திரத்துடனும் கரைக்க முடியாதபடி இணைந்துள்ளதென்கிறார். அவர் மேலும், "சுதந்திரமான மனிதர்களை நோக்கி எழுதும் சுதந்திர மனிதனான எழுத்தாளன் எழுதுவதற்கு ஒரே ஒரு பொருள்தான் இருக்கிறது-அதுதான் சுதந்திரம்"* என்று வலியுறுத்துகிறார். எனவேதான் நாடு, இன, மொழி மற்றும் மனித சமுதாயச் சுதந்திரத்துக்காகப் பாடிய பாரதியும் (1882-1921), பாரதிதாசனும் (1891-1964) தமிழ் மறுமலர்ச்சியின் முன்னோடிகளாகக் கருதப்படுகின்றனர். இருபதுகளில் அமெரிக்காவில் தோன்றிய ஹார்லம் மறுமலர்ச்சி**யினைத் தமிழ் மறுமலர்ச்சியுடன் ஒப்பிடலாம். அதன் முன்னோடிகளில் ஒருவரான கறுப்புக் கவிஞர் கிளாட் மெக்கேயினை (1889-1948) பாரதிதாசனுடன் ஒப்பிடலாம். இவ்விரு புரட்சிக் கவிஞர்களும், இனம், சினம், கண்டனம் முதலானவற்றை மீறிய கவிஞர்களாக எவ்வாறு வெளிப்பட்டனர் என்பதனைக் காண்பதே இந்த ஆய்வின் நோக்கமாகும்.

---

* Jean Paul Sartre, "Why I Write?" in 20th Century Literary Criticism: A Reader, ed. David Lodge (New York: Longman, 1972), p.384.

** ஹார்லம்— இது நியூயார்க்கின் ஒரு பகுதி. அங்கு 1910-க்குப் பிறகு கறுப்பர் மிக அதிகமாகக் குடியேறினர். இருபதுகளில் அங்குத் தோன்றிய கலை இலக்கிய அரசியல் வெளிப்பாடே ஹார்லம் மறுமலர்ச்சி எனப்படுகிறது.

ஹார்லம் மறுமலர்ச்சிக்கு அப் பெயரினை அளித்த கறுப் பறிஞர் அலெய்ன் லாக், அயர்லாந்து மறுமலர்ச்சியுடனான ஒப்புமையினை மனத்தில் கொண்டிருந்தார். புதிய அயர்லாந்துக் காக டப்ளின் என்ன செய்ததோ அதே பங்கினைப் புதிய நீக்ரோவுக்காக ஹார்லம் செய்தது என்றார் லாக். அதே போல் தமிழ் மறுமலர்ச்சிக்காகப் புதுவையின் பங்களிப்பு இங்கே ஒப்பிடத்தக்கது. அய்ரோப்பிய மறுமலர்ச்சியின் விளைவாக அக்கண்டத்து மக்கள் இத்தாலியப் பாரம்பரியத்தில் பெருமை கொண்டனர். அதுபோலவே அயர்லாந்து, ஹார்லம், தமிழ் மறுமலர்ச்சிகள் அந்தந்த இன மக்கள் அவரவர் பாரம்பரியத்தில் பெருமை கொள்ளச் செய்தன.

**கவியாகும் சினம்**

மனிதனின் செயல்களைக் குலைவிக்கும் ஒரு சூழல் அல்லது புறத்தூண்டலுக்கு இயல்பாக ஏற்படும் எதிர்வினையே சினம் என்பர் உளவியலார். சமூக நீதிக்கான போரில் கவிஞர்கள் எப்போதும் முன்னணி வீரர்களாக நடை பயின்றுள்ளனர். அநீதிக்கெதிரான சீற்றமும் சினமும் இல்லாமல் அவர்கள் போரிட இயலாது. மனக்கிளர்ச்சிகளின் சரியான வாகனமாகக் கவிதை மாறுகிறது. இதற்குச் சில எடுத்துக் காட்டுகள்:

தமசா நதிக்கரையில் இணைந்திருந்த கிரௌஞ்சப் பறவை களில் ஆண்பறவையை வேடன் ஒருவன் வீழ்த்த, பெண் பறவை கதறி அழுதது. அப்பொழுது அங்குச் சென்ற முன்னாள் வேடனும் அந்நாள் முனிவருமாகிய வால்மீகிக்குப் பறவைகள்பால் தோன்றிய பரமகருணையே, வேடன் மீது கடுங்கோபமாக மாறியது. கோபம் சாபமாகி அவர் வாக்கில் "மா நிஷாத" எனும் சுலோகம் தோன்றியது. வேத ஸ்வரத்தில் அமையாத சுலோக வடிவம் அப்போதுதான் தோன்றியது. வேதம் போலவே உயர்ந்த பொருள்களை எல்லோரும் நினைவில் கொள்வதற்கு ஏற்ற சாதனமாக அவ்வடிவம் கிடைத்ததெனஎண்ணிய முனிவர், பின்னர் அதே வடிவத்தில் ஆதி காவியம் படைத்தார்.

வால்மீகி வேடனைத்தான் சபித்தார். ஆனால் வள்ளுவரோ படைத்தவனையே சபித்தார்.

இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்*

---

* குறள் 1062.

அவர்களின் கன்னம் உடைக்கும் கராத்தே முறையினையும் அவர் கற்பிக்கிறார்.

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்
கூன்கைய ரல்லா தவர்க்கு*

மனித இன முன்னேற்றத்துக்குப் பஞ்சமும் பட்டினியும் பெருந்தடைகள். வள்ளுவருக்குப் பின் ஈராயிரம் ஆண்டுகளாகியும் அதே நிலை நீடிப்பதைக் கண்டு வெகுண்ட பாரதியின் சினம் இப்படியொரு கவிதையாக மாறியது!

தனியொருவனுக்கு உணவிலையெனில்
ஜகத்தினை அழித்திடுவோம்

ஏழை எளியோர் நசுக்கப்படுவதைக் காணும், உணர்வுள்ள கவிஞன் எவனும் வெறும் மௌனப் பார்வையாளனாக இருக்க இயலாது.

பாரதிதாசனின் சினம்,

வலியோர் சிலர் எளியோர்தமை
வதையே புரிகுவதா?
கொலை வாளினை எடடா மிகு
கொடியோர் செயல் அறவே

எனும் கவிதையாக வெளிப்பட்டது.

வெள்ளையரின் இன மேலாதிக்க வெறியினை எதிர்த்துக் கறுப்புக் கவிஞர்களின் மனத்தில் எழுந்த சினம் இவ்வாறு கவிதையாகியுள்ளது:

கொல்லும் கவிதைகள்,
சதிக்கொலை செய்யும் கவிதைகள்
துப்பாக்கிகளைச் சுடும் கவிதைகள்

வேண்டும் என்கிறார் இமாமு அமிரி பராக்கா**. நிக்கி சியோவன்னியும் இதே பாணியில் கவிதை பாடுகின்றார்:

---

* குறள் 1077.

** Imamu Amiri Barakka, "Black Art" in The Black Poets, ed. Dudley Randall. (New York; Bantam, 1971), pp. 223-224.

நாம் வியட்நாமில் கொல்கிறோம்
அவர்களுக்காக
யு. என், நாட்டோ, சியாட்டோ, யு. எஸ்—க்காக
நாம் கொல்கிறோம்—
எங்கும் எல்லா எழுத்துகளுக்கும்
கறுப்பு தவிர
கறுப்புக்காக வெள்ளையைக் கொல்ல
நாம் கற்க இயலுமோ?
'நிக்கர்'களைக் கொல்லக் கற்க—
கறுப்பு மனிதர்களாக இருக்கக் கற்க—*

"கவிதை என் கை வாள்" என கே. சி. எஸ். அருணாசலமும், "நான் எரிமலையாகிக் கொண்டிருக்கிறேன்" என்று பொன்னடியானும் தங்கள் சினத்தைக் கவிதையாக்கி வருவது இங்கு கவனிக்கத்தக்கது.

வெள்ளையனை விரட்டிய பிறகு சமூக அநீதிகளுக்கு எதிராகப் போராடக் குழந்தைகளுக்கு பயிற்சியளிக்க நினைத்த பாரதியார்,

பாதகம் செய்பவரைக் கண்டால்—நாம்
பயங்கொள்ள லாகாது பாப்பா.
மோதி மிதித்துவிடு பாப்பா—அவர்
முகத்தில் உமிழ்ந்து விடு பாப்பா**

என வீரம் செறிந்த அறிவுரை வழங்குகிறார். அறியாமை கண்டு சீறிய பாரதியார்,

தேடு கல்வியிலாத தோர் ஊரைத்
தீயினுக் கிரையாக மடுத்தல்***

எனப் பொங்குகின்றார்.

கல்வியிலா மூடரை உருவாக்குவது சமுதாயமே. எனவே யாரைத் தண்டிப்பது?

---

* Nikki Giovanni, Ibid., p. 319.

** பாரதியார் கவிதைகள், பூம்புகார் பிரசுரம், ப. 203,

*** மேலது. ப.158.

கல்லாரைக் காணுங்கால் கல்வி நல்காக்
கசடர்க்குத் தூக்குமரம் அங்கே உண்டாம்*

எனப் பாரதிதாசன் எச்சரிக்கின்றார்.

இத்தகு சினக் கவிதைகளுடன் மெக்கேயின் சினமிகு சானட்டுகளை ஒப்பிடலாம். அவற்றுள், Baptism, The White City, The White House, If We Must Die முதலானவை குறிப்பிடத்தக்கவை. இவரது இனப் பெருமிதம் The White House என்னும் கீழ்க்காணும் கவிதையில் வலிமையுடன் வெளிப்படுகின்றது:

இறுகிய என் முகத்துக் கெதிரே
உங்கள் கதவு மூடப்பட்டிருக்கிறது.
நான் எஃகினைப்போல்
கூர்மையுடன் இருக்கிறேன்—அதிருப்தியுடன்.
ஆனால் என் சினத்தைப் பெருமிதத்துடனும்
வளையாமலும் தாங்கிக் கொள்ள
எனக்கிருக்கிறது துணிவும் நயமும்.
கௌரவமான தெரு வழியே நடக்கும்,
பொறுமை யிழந்த, எரிச்சலுற்ற
காட்டுமிராண்டி நான்
தேய்த்துச் சூடாக்கும் காலடியில்
நடைபாதைப் பாளங்கள் எரிந்து இளகுகின்றன.
பலகணியமைந்த கண்ணாடிக் கதவுகள்
ஆணவத்துடன் மின்னும் வழியை
நான் கடக்கையில்
வெறியுணர்ச்சிகள் என் உயிர்நிலைகளைக்
கிழிக்கின்றன.
ஓ! நான் ஒவ்வொரு மணியும்
வாழறிவைத் தேடவேண்டும்.

---

* பாண்டியன் பரிசு, செந்தமிழ் நிலையம், ப. 99.

சிற்றம் நிறைந்து பச்சைப் புண்ணாயுள்ள
என் இதயத்தின் ஆழத்தில்,
மீமானுட ஆற்றலைக் கண்டு பிடிக்கவேண்டும்
உங்கள் சட்ட எழுத்துக்குள்
எனை அடக்கிக் கொள்ள
ஓ! நான் என் இதயத்தைப்
புனிதமாய் வைத்திருக்க வேண்டும்
உங்கள் ஆற்றல் மிகு
வெறுப்பு நஞ்சுக் கெதிராக.*

கறுப்பர் அமெரிக்கர் மேல் வலிந்து திணிக்கப்பட்ட அந்நிய மாதலை இச்சானட்டின் தொடக்க வரிகள் சொல்லோவிய மாகத் தீட்டுகின்றன. மனிதத் தன்மை இழப்பு—எனும் கரு இதில் வெளிப்படுகிறது. இது ரால்ஃப் எலிசனின் 'மாயமாகிப் போகும்' கோட்பாட்டுடன் ஒப்பிடக் கூடியது.

**தீவிரவாத முற்போக்குக் கருத்துகள்**

மெக்கே இலண்டனில் ஓராண்டு தங்கியிருந்தபோது ஒரு மார்க்சிய தொழிலாளர் ஏட்டின் அலுவலகத்தில் பணியாற்றினார். பின்னர் நியூயார்க்கில் வெளியான The Liberator என்னும் தீவிரவாத ஏட்டின் இணையாசிரியராக ஓராண்டு பணியாற்றினார், இவர் 1922-இல் ரஷ்யா சென்று, நான்காவது காங்கிரசில் கலந்து கொண்டார். ஒரு கறுப்புக் கவிஞர் என்ற முறையில் மெக்கே அங்கு நன்கு வரவேற்கப்பட்டார். இவரது படைப்புகள் அங்கே வெளியாகின. அவ்வாறு ரஷ்யமொழியில் வெளியான சிறுகதைத் தொகுதி மீண்டும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு, 1990 சனவரியில் மைசூரில் நடைபெற்ற கிளாட் மெக்கே நூற்றாண்டு விழாவில் Trial by Lynching என்ற ஆங்கில நூலாக வெளியிடப்பட்டது.

இலெனின், மார்க்சிலிருந்து மெக்கே வேறுபடுகிறார். ஒரு தொழில் வளச் சமுதாயத்தில் அதிக பட்ச உற்பத்தி செய்து, எல்லோரும் அதிக பட்ச மகிழ்ச்சியடைய வேண்டும் என்பதற்கு

* Claude Mckay, Selected Poems of Claude Mckay, (New York: Harcourt, 1953), p. 78.

மாறாக, மெக்கே இனச் சமத்துவத்தையும், நிலத்துக்குத் திரும்பலையும் வற்புறுத்தினார். இவர் பொதுவுடைமைக் கட்சியின் உறுப்பினராக எப்போதும் இருந்ததில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

பாரதிதாசனும் பொதுவுடைமைக் கட்சியில் உறுப்பினராய் இருந்ததில்லை. ஆனால், புதியதோர் உலகம் செய்வோம் என்ற பாடலில்,

பொதுஉடைமைக் கொள்கை திசையெட்டும் சேர்ப்போம்
புனிதமோடதை எங்கள் உயிரென்று காப்போம்

என்று முழங்கினார்.

சோஷலிசம் பாரதிதாசனின் பொருளாதாரக் கொள்கையானது. இவரது கதைப்பாடல்களிலும், கவிதை நாடகங்களிலும் பழைய கொடுங்கோல் ஆட்சிமுறை ஒழிக்கப்பட்டுப் புதிய சோஷலிச சமுதாய முறை அமைக்கப்படுகின்றது.

(எ—டு) புரட்சிக் கவி:

அரசன் மகள் தன் நாளில் குடிகட் கெல்லாம்
ஆளுரிமை பொதுவாக நினைத்திருந்தாள்.
செல்வமெலாம் உரிமையெலாம் நாட்டாருக்கே.

வீரத்தாய் கவிதை நாடகத்தில், மன்னன் மகள் சுதர்மனே,

எல்லார்க்கும் தேசம்; எல்லார்க்கும் உடைமையெலாம்
எல்லார்க்கும் எல்லா உரிமைகளும் ஆகுகவே

என அறிவித்து விடுகின்றான்.

பாரதியார் உலகக் கவி; பாரதிதாசனும். எனவேதான், உலகப் பண்பாட்டினில்

பகுத்தறிவு மன்றத்தில் உலகம் என்ற
பழைய முதலாளியினை நிற்க வைத்து

கேள்விக் கணைகளைத் தொடுக்கின்றார் பாரதிதாசன். ஆனால் உலகப்பன் "தகதகென" ஆடி மழுப்புகின்றான். அவனை மடக்கி,

தேடப்பா ஒரு வழியை என்று சொன்னேன்
செகத்தப்பன் யோசித்துச் சித்தம் சோர்ந்தான்
ஓடப்பராயிருக்கும் ஏழையப்பர்
உதையப்பர் ஆகிவிட்டால் ஓர் நொடிக்குள்
ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி
ஒப்பப்பர் ஆய்விடுவார் உணரப்பா நீ

என்று கவிஞர் உலகிற்கு உணர்த்துகிறார்.

இயற்கை

இயற்கையைப் பாடல் கவிஞரது இயற்கை. இயற்கையழகு கொழிக்கும் மேற்கிந்தியத் தீவுகளில் ஒன்றான ஜமைக்காவில் பிறந்த மெக்கே, தன் 23-ஆம் வயதில்தான் அமெரிக்கா சென்றார். எனவே ஆங்கில ரொமாண்டிக் கவிஞர்களைப் போல, மெக்கே இயற்கையினால் ஈர்க்கப்பட்டார். இவர் இயற்கையோடி யைந்த வாழ்வையே நாடினார். இவர் வெளியிட்ட Songs of Jamaica, Spring in New Hampshire முதலான நூல்களில் இயற்கைப் பாடல்கள் மிகுதி.

பாரதிதாசன் இயற்கை மேல் பெருங்காதல் கொண்டு அதன் அழகைப் போற்றிப் பாடியவர். தான் மட்டும் இயற்கையழகை ரசிக்காமல் 'பாராய் தம்பி'—என்று நம்மையும் அழைத்துக் காட்டுவார். இயற்கையின் பல்வேறு கூறுகளை உற்றுநோக்கிப் பல புதுமையான உவமைகளைக் கூறி மகிழ்வார்; மகிழ்விப்பார். அவர் பாடலைப் படிப்போர் கடல் வண்ணம் அங்குக் கண்டேன்! கரை வண்ணம் இங்கு கண்டேன் என உளம் பூரிக்கலாம்.

(எ—டு) ஊருக்குக் கிழக்கே உள்ள
பெருங்கடல் ஓரமெல்லாம்
கீரியின் உடல் வண்ணம் போல்
மணல் மெத்தை; அம்மெத்தை மேல்
நேரிடும் அலையோ, கல்வி
நிலையத்தின் இளைஞர் போலப்
பூரிப்பால் ஏறும்; வீழும்;
புரண்டிடும்; பாராய் தம்பி.*

* அழகின் சிரிப்பு, ப. 6.

பள்ளிப் பிள்ளைகளின் கும்மாளத்தை மெக்கே பாடியுள்ள பாங்கினைக் கேளாய் தம்பி!

மணி ஒலித்துக் கொண்டிருக்கின்றது
பிள்ளைகள்
தவளைக் குதிப்புடன்
கயிறு தாண்டிக் கொண்டு
கூச்சலிட்டுக் கொண்டு
கீச்சு கீச் சென்று சிரித்துக் கொண்டு*

இயற்கையை விட்டுப் பிரிந்து போனதை எண்ணி வருந்தி மெக்கே பாடிய பாடல்கள் உணர்ச்சிமயமானவை.

## FLAME—HEART

பத்தாண்டுகளில் நான் அத்தனை மறந்திருக்கிறேன்!
சுருக்கமான பத்தாண்டுகளில்
கருஞ்சிவப்பு ஆப்பிள்கள்
எப்போது சாறாகும் என மறந்திருக்கிறேன்.
நாணுறும் Forget — me — not களை
எம்மாதம் கொணரும் என்பதையும்,
பிமெண்டோ பூத்துக்கனியும்
சிறப்பான, மலைக்க வைக்கும் பருவத்தினையும்
மறந்திருக்கிறேன்.
ஆண்டின் எக்காலத்தில்
நிலப்புறாக்கள் வயல்களைப் பழுப்பாக்கி,
ஆவலைத் தூண்டும் தங்கள் சீழ்க்கையினால்
நண்பகலை நிறைக்கும்
என்பதையும் மறந்திருக்கிறேன்.
நிறைய மறந்திருக்கிறேன்.
ஆனால் வெப்பமான டிசம்பரில்
'பாயின்செட்டியா'வின் இரத்தச் சிவப்பினை
இன்றும் நினைவில் கொண்டுளேன்.

---

* Ibid, p. 119.

நாங்கள் அத்தனை
களிப்பாய், களிப்பாய் இருந்தோம்
நினைவிருக்கிறது.
சிவந்த, இரத்தச் சிவப்பான
பாயின்செட்டியாவின் கீழே
வெப்பமான டிசம்பரில்......*

(தமிழாக்கம்: வான்முகில்)

**நகரவாழ்க்கை**

வெள்ளை நகர வாழ்க்கையிலிருந்து மெக்கே தப்ப இயலவில்லை. ஆனாலும் தன் வாழ்நாள் நிறை வெறுப்பினைப் பெருமிதத்துடன் இவர் பொறுத்துக்கொண்டது இப்படி:

வலிமை நிறை நகரத்தை
மூடுபனியூடே நான் காண்கிறேன்.
தூண்டப்பட்ட மக்கள் திரளை
வேகமாய் ஏற்றிச் செல்லும்
உரத்த கரகரப்பொலியுடைய ரயில்கள்
புகை—ஆவி முத்தமிடும் கோபுரங்கள்
கோபுரக் கூர்முனைகள், கம்பங்கள்
பெருங்கலங்கள் கடக்கும்
அரணுடை துறைமுகம்
இவையெலாம் இனியன
பிள்ளைக் காதல்கள் போல்—
ஏனெனில் நான் வெறுக்கிறேன்**

(தமிழாக்கம் : வான்முகில்)

இவ்வாறு, ஒரு மாநகரத்தைப் புலர்காலைப் பொழுதில் மூடுபனியூடே காணும் காட்சி ஆங்கிலக் கவிஞர் வில்லியம் வேர்ட்ஸ்வொர்த் இலண்டனைப் பார்த்துப் பாடிய புகழ்பெற்ற

---

* Claude Mckay, "Flame-Heart", **Flame Heart** 1989, Claude Mckay Secondary School Magazine, Clarendon, 1989, p. 11.

** Claude Mckay, Selected Poems, p. 74.

Composed upon Westminster Bridge என்ற புகழ்பெற்ற சானட்டின் எதிரொலியாகத் தொனிக்கிறது. சாதாரணமாக மக்கள் பார்க்கும் இலண்டன் நகரின் அசாதாரண அழகினை வேர்ட்ஸ்வொர்த் தன் கவிதையில் வெளிப்படுத்துகின்றார். ஆனால், உயர்ந்த கோபுரங்களைக் கொண்டு நிமிர்ந்து நிற்கும் வெள்ளை நகரில், கறுப்பினம் தாழ்ந்து கிடப்பதன் வெறுப்பு, மெக்கேயின் கவிதையில் வெளிப்படுகிறது.

பாரதிதாசன், பட்டணம் எனும் தலைப்பில் இரு கவிதைகள் எழுதியுள்ளார். ஆறு, கடல், வானம் என்று இயற்கை அழகின் இனிமையைப் பாடிய இவர் சிற்றூர், பட்டணம், தமிழ் என மூன்று செயற்கைப் பொருள்களையும் அழகின் சிரிப்பில் சேர்த்துள்ளார். அதற்குச் சமாதானம் கூறுவதுபோல், கவிஞர் தன் முன்னுரையில், "காணும் பொருளிலெல்லாம் அழகைக் காணவும், கண்டவாறு தாமேயாகச் சொல்லோவியம் செய்யவும் திறம் பெறுதல் வேண்டும் தமிழர்கள்"* என்று குறித்துள்ளார்.

இயற்கையின் உயிர்கட்குள்ளே
மனிதன் தான் எவற்றினுக்கும்
உயர்ச்சியும், தான் அறிந்த
உண்மையை உலகுக் காக்கும்
முயற்சியும் இடைவிடாமல்
முன்னேற்றச் செயலைச் செய்யும்
பயிற்சியும் உடையான் என்று
பட்டணம் எடுத்துக் காட்டும்**

என்பது முதல் பட்டண அறிமுகம். அங்கே துறைமுகம், பண்டசாலை, நீதிமன்றம் முதலானவற்றுடன் சாராயக் கடையும் உண்டு.

மாலையில் கோழிமுட்டை
மரக்கறி ஆதல் கண்டேன்

என்று நகைச்சுவை ததும்பக் கவிஞர் கூறுகின்றார். இக்கவிதையில் கடைசி விருத்தத்தில் தான் கவிநயம் மேலோங்கிக் காணப் படுகிறது.

---

* பாரதிதாசன், அழகின் சிரிப்பு, (செந்தமிழ் நிலையம், இராமச் சந்திரபுரம், 18-ஆம் பதிப்பு, 1987), ப. 3.

** மேலது, ப. 58.

கலையினில் வளர்ந்தும் நாட்டுக்
கவிதையில் ஒளிமிகுந்தும்
நிலவிடும் நிலா முகத்து
நீலப்பூ விழி மங்கைமார்
தலையாய கலைகள் ஆய்ந்து
தம்வீடு ?பாதல் கண்டேன்
உலவிடு மடமைப் பேயின்
உடம்பின் தோல் உரிதல் கண்டேன்

எனப் பெண்கல்விக்கும், மடமை ஒழிப்புக்கும் பட்டணத்தை மையமாக்குகின்றார் பாரதிதாசன்.

பாரதிதாசனின் இரண்டாம் பட்டணம் 1958-இல் வெளியான இளைஞர் இலக்கியம் எனும் நூலில், இயற்கை எனும் பிரிவில் வெளியாகியுள்ளது. முதல் பட்டணத்தில் இவர் கடைசியாகப் பார்த்த பல்கலைக் கழகமே இங்கே முதல் வரியில் வருகிறது.

பல்கலைக் கழகம்
உயர்நிலைப் பள்ளி
செல்வச் சிறுவர்
செல்லும் பள்ளிகள்
நல்ல நூல்கள்
படிக்கப் படிப்பகம்
எல்லாம் இருக்கும்
அமைதி இராது.
பாட்டை நிறைய
பலவகை வண்டிகள்
காட்டுக் கூச்சல்
கடமுடா முழக்கம்
கேட்டால் காதே
கெட்டுப் போகும்
ஈட்ட ஆலைகள்
இருபது கூவும்*

---

* பாரதிதாசன், இளைஞர் இலக்கியம், (பாரி நிலையம், சென்னை, 1956), ப. 38.

காலப்போக்கில், பட்டணத்தின் காட்டுக் கூச்சல் கவிமனத்தைக் கலக்கிவிட்டது போலும்.

### மரபுக் கவிதை வடிவங்கள்

1912-இல் தனக்கு ஆதரவாக இருந்த வால்டர் ஜெக்கில் என்ற வெள்ளையரின் ஆதரவிலும் வழிகாட்டலிலும் மெக்கே, ஜமைக்கப் பேச்சு வழக்கு மொழியில் தன் கவிதைத் தொகுப்புகளான, **ஜமைக்கப் பாடல்கள், கான்ஸ்டப் கதைப் பாடல்கள்** முதலானவற்றை வெளியிட்டுத் தன் கவியுலக வாழ்வைத் தொடங்கினார். அவற்றுள், மரபு வழி ஆங்கிலக் கவிஞர்கள்—பர்னஸ், ஷெல்லி, வேர்ட்ஸ்வொர்த், டென்னிசன், கிப்ளிங் முதலானோரின் தாக்கத்தைப் பார்க்கலாம். ஒரு **ஆப்பிள்காரியின் புகார்**, சொற்பொழிவிலிருந்து புது மலர்ச்சியுடன் கட்ஜோ, **பாபிக்கு நள்ளிரவு மங்கை** முதலான கவிதைகளில் மெக்கே, இராபர்ட் பிரெளனிங் பாணியில், நாடகப் பாங்குத் தனிப் பேருரையைக் (Dramatic Monologue) கையாண்டுள்ளார்.

1855-இல் வால்ட்விட்மனின் **புல்லின் இதழ்கள்** வெளியாகியது. 1922-இல் டி. எஸ். எலியட்டின் **பாழ்நிலம்** வெளியாகியது. மெக்கே, தான் துணையாசிரியராயிருந்த ஓர் ஏட்டில் E. E. Cummings எழுதிய புதுக் கவிதைகளைத் தேர்வு செய்து வெளியிட ஏற்பாடு செய்தார்.

அமெரிக்கக் கவிதைகளை மெக்கே எழுதத் தொடங்கியபொழுது, அங்கே பரவியிருந்த புதுக்கவி வடிவங்கள் இவரைப் பாதிக்கவில்லை. இவர் தொன்மையான மரபுக்கவி வடிவமான 'சானட்'டையே பயன்படுத்தினார்.

அப்பழமையான வடிவத்திலேயே, மலைக்க வைக்கும் கசப்பு, முக்கிய தற்காலக் கருத்துகளான நம்பிக்கை இழப்பு, அந்நியமாதல் மற்றும் புரட்சிக் கருத்துகளை மெக்கே வெற்றிகரமாக வெளிப்படுத்தியுள்ளார்.

மெக்கே, தன் கவிதைக்குரிய வடிவத்தைத் தேர்ந்தெடுத்த முறையை விளக்க, நிஸம் இஸக்கியல் கூறிய கருத்தொன்றினை இங்கே மேற்கோள் காட்டலாம்:

''ஒரு நல்ல கவிஞனுக்குத் 'தாக்கம்' என்றால் பார்த்துப் பின்பற்றல் எனப் பொருளன்று. எதிர்த்திசையில் போவதைக் கூட அது குறிக்க முடியும். ஒரு கவிஞன் விசித்திரமான இலகு கவிதையைப் படித்துப் பாராட்ட முடியும். எனினும் அது

அவனுக்கு வரும்போது, அதற்கு எதிர் முறையிலே, மிகவும் கட்டுப்பாட்டுடன் விறைப்பான எதுகையுடன் கூடிய செய்யுள் வடிவில் எழுதலாம்.''*

மெக்கேயின் நாட்டத்திற்கும், திறமைக்கும் சானட் வடிவம் சிறப்பாகப் பொருந்தியிருந்தது. தற்காலக் கறுப்பரின் உயிர் நாடியை, உயர்ந்த விழுமிய முறையில் சித்தரிக்க மெக்கே முயன்றார். இவரது சினமும் கலைநுட்பமும் இணக்கமாய் கலந்த இன்கலவையான சானட்டுக்கு எடுத்துக்காட்டாக If We Must Die (நாம் மாள வேண்டுமெனில்) எனும் கவிதையைக் குறிக்கலாம்.

வெள்ளையர் கறுப்பருக்கெதிராக நடத்திய இனவெறிக் கலகங்களின்போது, களபலி ஆண்டான 1919-இல், புதிய நீக்ரோ மற்றும் ஹார்லம் மறுமலர்ச்சியின் குறியீடாக மெக்கேயை அடையாளம் காட்டியது நாம் மாள வேண்டுமெனில் எனும் இக்கவிதை:

நாம் மாள வேண்டுமெனில்—
பன்றிகளைப்போல் வேட்டையாடப்பட்டு
இகழ்க் களத்தில் கிடை மறிக்கப்பட்டுப்
பசித்த வெறிநாய்கள் நம்மைச் சுற்றிக் குரைத்துச்
சபிக்கப்பட்ட நம் இனத்தைக்
கேலி செய்து கொண்டிருக்க
மாள வேண்டாம்.
ஓ! மாண்புடன் நாம் மாள்வோம்
மதிப்புயர் நம்குருதி வீணாய்ச் சிந்தாதபடி.
பிறகு, நாம் எதிர்க்கும் அரக்கரும்கூட
நாம் இறப்பினும் நமக்கு மதிப்பளிக்கும்
கட்டாயத்துக்கு ஆளாவர்.
ஓ! உறவோரே!
பொது எதிரியை நாம் சந்திக்க வேண்டும்.
அவர்கள் எண்ணிக்கையில்
மிக விஞ்சினாலும்
நம் வீரத்தைக் காட்டுவோம்.

* Indian Express Magazine, Madurai Edition, June 8, 1986, p. 4.

ஆயிரம் அடிகளுக்குப் பதிலாய்
ஒரு மரண அடி கொடுப்போம்.
திறந்த கல்லறை நம்முன்
கிடந்தால் என்ன?
அந்தக் கொலைக்காரக் கும்பலை
ஆண்மையுடன் நாம் எதிர்கொள்வோம்.
சுவருக்கு அழுத்தப்பட்டு
நாம் மாண்டு கொண்டிருந்தாலும்—
எதிர்த்துப் போராடிக் கொண்டே*

(தமிழாக்கம்: வான்முகில், முல்லைச்சரம்—
மார்ச் 1990, ப. 16)

1919—சிகாகோ இனக்கலவரங்களின்போது இக்கவிதை எழுதப்பட்டது. அப்போது மெக்கே ஒரு இரயிலில் உணவு பரிமாறுபவராகப் பணியாற்றினார். உடன் பணியாற்றிய கறுப்பர்கள் இரகசியமாகக் கைத்துப்பாக்கிகளை எடுத்துச் சென்றனர். வெள்ளை இனவெறிக் கும்பலின் திடீர்த் தாக்குதலிலிருந்து காத்துக் கொள்ளப் பல கறுப்பர் ஒன்றுகூடிச் செல்லும் நிலை, அக்காலத்தில் மெக்கே வாழ்ந்து கடந்த தீவிர மனக்கிளர்வின் வளர்ச்சியே இக்கவிதை. இதனை வெள்ளை முற்போக்கு ஏடான தி லிபரேட்டர் 1919-இல் முதன் முதலாக வெளியிட்டது ஒரு முரண்நகை. கறுப்பர் ஏடுகள் பின்னரே இதனை மறுபதிப்பு செய்தன. ஒரு முக்கியமான புதிய கவிஞராகப் புரட்சிக் கவிஞராக மெக்கே ஏற்றுக் கொள்ளப் பட்டார். அந்நாளில் மெக்கே ஒரு நாத்திகர். என்றாலும் பாதிரிமார்கள், தங்கள் சமயச் சொற்பொழிவுகளின் இறுதியில் இப்பாடலை முழங்கினர். திருக்கூட்டத்தார் 'ஆமென்' கூறினர். கவிதை இரசனையில் பயிற்சி பெறாத கறுப்பர்களுக்கு மெக்கேயை ஒரு கவிஞனாகக் காட்டியது இக்கவியே. பின்னாளில், ஜெர்மானியர் தாக்கக்கூடும் என்ற அச்சுறுத்தல் இருந்தபொழுது, ஆங்கிலேயர்க்கு வீர உணர்ச்சியூட்டி உரையாற்றிய சர்ச்சில் பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் இக்கவிதையைப் படித்துக் காட்டினார். மெக்கேயின் தீவிரவாதமோ, இனவாதமோ சர்ச்சிலுக்குத் தெரியாமல் இருந்திருக்கலாம். ஆனால் அவரது விளக்கம், மெக்கேயின் விளக்கத்தை ஒட்டியிருந்தது. 1971-இல் நியூயார்க்கில் சிறைக் கலவரமொன்று நடந்தபோது புரட்சிக்

* Mckay, Selected Poems, p. 36.

காரர்களாய் இருந்த கைதிகள் இப்பாடலை எழுதிச் சுற்றுக்கு விட்டனர். இச்செய்தியினை டைம் ஏடு வெளியிட்டது. மெக்கேயின் யூத நண்பர் ஒருவர் இக்கவிதையைப் படித்துவிட்டு, ஹிட்லரால் கொடுமைப்படுத்தப்பட்ட அய்ரோப்பிய யூதர்களைப் பற்றி இது எழுதப்பட்டிருக்க வேண்டும் என்றார். (நான்கைந் தாண்டுகளுக்கு முன், இக்கவிதையின் தொடக்க வரிகள் தமிழாக்கம் செய்யப்பட்டுக் கோவை நகரச் சுவரொன்றில் எழுதப்பட்டிருந்ததை இக்கட்டுரையாளர் பார்த்திருக்கின்றார்.) இவ்வாறு விடுதலையும், சமுதாய நீதியும் வேண்டி நடத்தப்படும் போராட்டங்களுக்கு மெக்கேயின் சினம் தொடர்ந்து உள்ளுணர் வூட்டி வருவதையே இந்நிகழ்ச்சிகள் காட்டுகின்றன. 'விழுமிய நடை' எனும் கட்டுப்பாட்டிலிருந்து கறுப்புக் கவிதையை மெக்கே மீட்டுச் சாதாரண மக்களைப் பற்றிப் பாடி அதனை ஜனநாயகப் படுத்தினார்.

இந்தப் பெருமை பாரதிதாசனுக்கும் உண்டு. இவர் குப்பன் போன்ற சாதாரண மனிதர்களைப் பாட்டுடைத் தலைவராக்கி னார். (எ-டு) சஞ்சீவி பர்வதத்தின் சாரல், மாந்தோப்பில் மணம். முதலாளியின் வரவுக்காகவே காத்திருந்து பழக்கப்பட்ட மாட்டு வண்டிக்காரனுக்காகக் காத்திருக்கும் அவன் மனைவி பாடு கிறாள்:

அதோ பாரடி அவரே என் கணவர்—
அதோ பாரடி
புது மாட்டுவண்டி ஓட்டிப்
போகின்றார் என்னை வாட்டி!
இருப்பவர் உள்ளே முதலாளி செட்டி
ஏறுகால் மேல்தானென் சர்க்கரைக் கட்டி*

நாட்டின் இளவரசர்களையே நந்தவனத்துக்கு வரச் சொல்லிப் பழக்கப்பட்ட கவிதை நாயகிகளுக்குக் கோடாலிக்காரனை "வெயில் தாழ வரச் சொல்லடி"**எனப் பாடும் நாயகியின் பாட்டு அதிர்ச்சியளிக்கலாம்.

சாதாரண மக்கள் பேச்சு வழக்கு மொழியினைப் பாரதி தாசன் சில இடங்களில் பொருத்தமாகப் பயன்படுத்தியுள்ளார்.

---

* பாரதிதாசன், இசையமுது, (பாரி நிலையம், சென்னை, மறு பதிப்பு, 1990), ப. 3.

** மேலது, ப. 11.

(எ-டு.) என்னா கெழவா? பொடியனெங்கே? இங்கே வா
கன்னா பின்னா என்று சுத்துறிய என்னாது?
மாடுவுளை மேய்க்கவுடு. மாந்தோப்பில்
காடுவுளே சுத்தவுடு. கல்வி சொல்லித் தராதே*

கசங்கு சீவடி பிரம்பு செற்றடி
கைவேலை முடித்திடலாம்—நம்
பசங்கள் பசிக்கு விரைவில் சென்றால்
பழயதைக் கொடுத்திடலாம்**

எளிய நடையிலே நம்பிக்கை கொண்டிருந்த பாரதிதாசன், அதற்கான காரணத்தை இவ்வாறு விளக்குகின்றார்: "எளிய நடை ஒன்றாலேயே தமிழின் மேன்மையைத் தமிழின் பயனைத் தமிழர்க்கு ஆக்க முடியும் என்பது என் அசைக்க முடியாத நம்பிக்கை."***

பாரதிதாசன் காலத்தில் புதுக்கவிதை வடிவ முயற்சிகள் தமிழில் தோன்றின. ஆனால், பாரதிதாசன் மரபுவழிக் கவிதைகளையே பாடினார். வெண்பா, விருத்தம் முதலான வடிவங்களை இவர் வெற்றிகரமாகக் கையாண்டார். நாட்டுப்புறக் கவி வடிவங்களான காவடிச்சிந்து முதலானவற்றையும் இவர் பயன்படுத்தினார். "குடும்ப விளக்கைப் பெறும் தோழர்கள் தாமேயன்றி, மறந்து போகாமல் தம் துணைவியர்க்கும் படிக்கக் கொடுக்க துணைவியர் எழுத்தறிவில்லாராயின் படித்துக் காட்டுக"**** என்கிறார் இவர். அதற்கேற்ப எளிய, இனிய நகைச்சுவை ததும்பும் நடையில் ஆசிரியப்பாவினை அழகாக எழுதி

---

* பாரதிதாசன் கவிதைகள், முதல் தொகுதி, (செந்தமிழ் நிலையம், இராமச்சந்திரபுரம், 20-ஆம் பதிப்பு, 1974), ப. 38.

** இசையமுது, முதல் தொகுதி, ப. 12.

*** பாரதிதாசன், பாண்டியன் பரிசு, பாரதிதாசன் முன்னுரை, (செந்தமிழ் நிலையம், இராமச்சந்திரபுரம், பதினோராம் பதிப்பு, 1984), ப. எண் இல்லை.

**** பாரதிதாசன், குடும்ப விளக்கு, முதல் தொகுதி, "கவிஞர் கருத்து" (பாரி நிலையம், சென்னை, 5-ஆம் பதிப்பு, 1972), ப. 3.

யுள்ளார், (எ-டு.) **இருண்ட வீடு**. ஆனால் சாத்தனார் ஆசிரியப் பாவில் எழுதிய மணிமேகலையை மீட்டுருவாக்கம் செய்யும்போது, **மணிமேகலை வெண்பா** ஆக்கினார். இது, பெருங்காப்பியம் கற்றறிந்தார்க்கென மனத்தில் கொண்டு கவிஞர் வெண்பா யாப்பினைப் பயன்படுத்தினார் போலும்.

**உலகப் பார்வை**

*1912*-இல் மெக்கே அமெரிக்கா சென்றபோது அங்கே நிலவிய இனப்பாகுபாடு இவரைப் பாதித்தது. எனவே, இளமையில் தான் கொண்டிருந்த கீழ்ப்படியும் பழமைப் பற்றினை உதறித் தள்ளி, எதிர்க்கும் புரட்சிக்குணங்களை இவர் வெளிப்படுத்தினார். (எ-டு) **நாம் மாளவேண்டுமெனில்**. இதில் கறுப்பினத்தவர் என்ற குறிப்பில்லை. உலகெங்கும் போராடும் எந்த இனத்தவரும் இதனைத் தமதெனக் கொள்ளலாம். இக்கவிதை பல நாடுகளில், 'இரவில் நெருப்புத்தூண்' என்கிறார் எம். பி. டோல்சன்.* கறுப்பினத்துக்காக மட்டும் பாடிய கவிஞர் என்ற நிலையை மெக்கே விரும்பவில்லை. இதுபற்றி இவர் கூறியதாவது:

"என்னை ஒரு நீக்ரோ கவிஞன் என நான் எப்போதும் கருதியதில்லை. பாட்டெழுதும் எனது இயற்கைத்திறம் ஏதேனும் ஒரு மக்களினத்தையும் அதன் பாடுகளையும் விடவும் பெரிய தொன்று என நான் எப்போதும் உணர்ந்திருக்கிறேன். என் கருப்பொருள்களில் பல, இனம் சார்ந்தவை. என்றாலும் உலகப் பார்வைக்காக நான் என் கவிதைகளை எழுதினேன்".**

பாரதிதாசன் தமிழ்க் கலாச்சாரத்தின், தமிழ் இன உணர்வின் பிரதிநிதி. ஆனால் அத்துடன் இவர் நிற்கவில்லை; உலகக் கலாச்சார, மனித இன உணர்வு வெளிப்பாட்டுக் கவிஞராக மலர்ந்தார்.

(எ—டு.) **தன் பெண்டு, தன் பிள்ளை** (முதல் தொகுதி, *ப. 131*), **மானுட சக்தி** *(ப. 145)*, **உலகப்பன் பாட்டு** *(ப. 149)*, **புதியதோர் உலகம் செய்வோம்** *(ப. 158)*.

---

* M. B. Tolson, "Claude McKay's Art", Poetry, 83, 1969 p. 299.

** An Interview with Hope McKay Virtue, Flame-Heart, 1969 p. 19.

உலகம் வீரர்க்குரியது. பாரதிதாசன் காட்டும் மனிதன் உலக மனிதன். அவன் ஓரினத்துக்கோ, ஒரு நாட்டுக்கோ உரியவன் அல்லன். உலகை வெல்லக் கவிஞர் தரும் ஊக்கம், 'உலகம் உன்னுடையது' எனும் கவிதையில் (முதல் தொகுதி, ப. 149) நன்கு வெளிப்படுகிறது.

வெள்ளை அமெரிக்கக் கவிஞர் இராபர்ட் ஃபிராஸ்ட், 1913-இல் 'சுவரைச் செப்பனிடல்' எனும் கவிதையை வெளியிட்டார். அதில், இரு விவசாயிகள் தங்கள் வயல்களுக்கிடையே உள்ள கல் சுவரினைச் செப்பனிடுகின்றனர். அவருள் இக்கவிஞரும் ஒருவர். இவர் சுவரை விரும்பவில்லை. ஆனால், அண்டை விவசாயி, "நல்ல சுவர்களே நல்ல அண்டையர்களாக்கும்" என வற்புறுத்திக் கடைசியில் இருவரும் அவரவர் பக்கத்தில் நின்று கொண்டு சுவரைச் செப்பனிட்டு விடுகின்றனர். இந்தியச் சமுதாய நிலையைப் பாடவந்த இன்றைய கன்னடக் கவிஞர் வினாயக் கிருஷ்ண கோகக், 1952-இல் எழுதிய கவிதையொன்றில்,

இங்கே பட்டணமில்லை
தெருக்கள் மட்டுமே
ஒருவருக்கொருவர் அறிமுகமிலார்
கூட்டு வாழ்க்கை இல்லை
ஒன்றோடொன்று வன்மம் கொண்ட
சந்துகள்*

என்கிறார். இந்நிலை மாறவே,

உன் வீடு உனது பக்கத்து வீட்டின்
இடையில் வைத்த சுவரை இடித்து;
வீதிகள் இடையில் திரையை விலக்கி
நாட்டொடு நாட்டை இணைத்து மேலே
ஏறு**

என்கிறார் பாரதிதாசன்.

---

* Indian Literature, Sahitya Akademi, No. 136, Jan-Feb 1990, p. 83.

** உலகம் உன்னுடையது.

முடிவுரை

கிளாட் மெக்கே எதிலும் தீவிரவாதியாக இருந்தார். இவர் இலக்கிய வாழ்வைத் தொடங்கிய போது, தீவிரமான நாத்திகக் கவிஞராயிருந்தார். ஆனால் இவர் கடைசியில் தீவிரமான கத்தோலிக்கச் சிறு கைப்பிரசுர வெளியீட்டாளராக மாண்டார். பாரதிதாசனும் எதிலும் தீவிரவாதி. தொடக்கத்தில் 'சுப்பிர மணியர் துதியமுது' பாடினார்; பின்னர் தீவிர நாத்திகராக வாழ்ந்தார். ஆனால், பாரதிதாசன் கவிதைகள் மூன்றாம் தொகுதியில் காணப்படும் கீழ்க்குறித்த வரிகள் ஆய்வுக்குரியவை:

ஒரு கடவுள் உண்டென்போம்! உருவணக்கம் ஒப்போம்!
(ப. 86)

இது குடியரசு நாட்டினை அமைத்த பிறகு செம்மறித்திறல் விடுவிக்கும் அறிவிப்பு:

ஓர் கடவுள் உண்டு—தம்பி
உண்மை கண்ட நாட்டில் (ப. 151)

இது பாமரர்க்கான ஏற்றப்பாட்டில் வரும் செய்தி. அதன் பேரென்ன எனக்கேட்டல் பாமர இயல்பு. ஆனால் பாரதிதாசனோ,

பேரும் அதற்கில்லை—தம்பி
பெண்டும் அதற்கில்லை

என்று தெளிவுறுத்துகின்றார்.

ஏக பரம்பொருள் என்பதை நோக்க
எல்லாரும் உடற்பிறப்பே (ப. 197)

என்பது சமத்துவப் பாட்டு. இது குதும்பைச் சித்தர் பாடலின் மெட்டு என்ற குறிப்பு இருப்பதால் "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற சித்தரின் நம்பிக்கையைக் கடைசியில் பாரதிதாசன் ஏற்றாரா என்பது ஆய்வுக்குரியது. "எங்கெங்கு காணினும் சக்தியடா" எனச் சக்தி வடிவாகக் கடவுளைக் காணும் தொடக்க நிலைக்கே பாரதிதாசன் வந்துவிட்டாரா என்பதும் ஆய்வு செய்யப்பட வேண்டும்.

மெக்கே ஒரு மெல்லியல்பான ஆன்மாவைக் கொண்டிருந்த தன்னுணர்ச்சிப் பாவலர். "இவர் ஒரு மக்கள் கவிஞர்-இராபர்ட்

பர்ன்ஸ், வால்ட் விட்மன் போல, எல்லா மனிதர்களது சகோதரத் துவத்திற்காகப் பாசுரம் பாடிய பாவலர்"* என்கிறார் டாக்டர் அலென் மெக்ளாய்.

பாரதிதாசன் இயற்கையைப் பாடுவதில் வேர்ட்ஸ்வொர்த் தைப் போலவும், படிமங்களை வடிப்பதில் ஷெல்லியைப் போலவும், அழகியலில் கீட்சினைப் போலவும் சிறந்தொளிர் கின்றார். புரட்சிப்பாங்கு, சிறுமை கண்டபோது சீறல், இன மொழி முன்னேற்றத்திற்குப் பாடல் முதலானவற்றுடன் மானுட நேயம், உலகளாவிய பார்வை முதலான கூறுகள் பாரதிதாசனைப் பெருங்கவிஞராகக் காட்டும். மேற்கூறியவற்றால் மெக்கேயும், பாரதிதாசனும் இனம், சினம் மீறிய கவிஞர்களாக, மானுட நேயத்திற்குக் கலங்கரை விளக்குகளாக ஒளி வீசுகின்றனர் என்பது பெறப்படுகின்றது. இவர்களது காதல் கவிதைகள், கதை, கட்டுரைகள் முதலானவையும் ஒப்பிலக்கியத் திறனாய்வுக் குரியவை.

* Introduction to **Trial by Lynching** ICASEL, Mysore, 1969, p. v.

# 2. பாரதிதாசனும் பைரனும்

அவ்வை. சம்பந்தன்

அறிவியல் கருத்துக்கள் அனைத்துலகும் பரவுதல்போல இலக்கியக் கருத்துக்கள் அனைத்து நாடுகளுக்கும் இனம் மொழி என்ற எல்லைகளைக் கடந்து உலக இலக்கியக் கோட்பாட்டிற்கு இட்டுச் செல்லுதல் ஒப்பியல் இலக்கியக் குறிக்கோள் ஆகும். இலக்கியத்தை, தமிழ் இலக்கியம், ஆங்கில இலக்கியம் எனக் கருதாது தமிழ் மொழியில் உள்ள இலக்கியம், ஆங்கிலத்தில் உள்ள இலக்கியம் என்று கருதவேண்டும் என்பது இலக்கிய ஆய்வாளர்களின் கருத்து.

கலையும் மனித இனமும் ஒருமையுடையனவாய் இருத்தல் போல் இலக்கியமும் உலகளாவிய அளவில் ஒருமையுடையதாய் இருக்கிறது. எந்த நாட்டில்,—காலத்தில்,—சூழலில் தோன்றி யிருந்தாலும் உலக இலக்கியம், மொழி, இனம், காலம், சூழ்நிலை முதலிய வேறுபாடுகளைக் கடந்து உலகளாவிய அளவில் தனித்தன்மையும் பொதுத்தன்மையும் பெற்று விளங்கு வதை ஆய்வாளர்கள் சுட்டிக் காட்டுகின்றனர்.

## I

நற்றமிழ்க் கவிஞர் பாரதிதாசனுடன் ஆங்கிலக் கவிஞர் மட்டுமல்ல—எழுச்சிமிகு கவிஞர்கள் எண்ணற்றோர் ஒப்பிடும் தகுதி பெற்று விளங்குகிறார்கள். அவர்கள் எல்லா மொழி களிலும் எல்லா நாடுகளிலும் எல்லா இனங்களிலும் இருக் கிறார்கள். அவர்களுடன் பாரதிதாசன் ஒப்பிடத் தகுந்தவர். காரணம், அவர் மனிதனுக்காக, சமுதாயத்திற்காக அதன் எழுச்சிக்காகப் பாடினார். நாட்டுக்குழைத்தலுக்கு கவிதையை நல்லதொரு கருவியாய்க் கொண்டு எழுதினார். கவிதா வழி வந்த சிந்தனையின் சீர்மையினால் தம் மொழியில் உலகத்தை உணர்த்தியும், சமுதாய மாற்றத்தை வேண்டியும், நல்லது போற்றியும் தீயதை இகழ்ந்தும் தம் பாட்டுத் திறத்தால் வையத்தைப் பாலித்திட விழைந்தார்.

சமுதாய எழுச்சி, தன்மான உணர்வு, அரசியல் விழிப்புணர்வு, மூடநம்பிக்கை ஒழிப்பு, புதிய உலகம் படைக்க விழைவு போன்ற முற்போக்குக் கருத்துக்களைப் பாடிய கவிஞர்கள் பலரும்—மொழி, இன, கால வேறுபாடுகளைக் கடந்து, கருத்து ஒற்றுமையினால், கற்பனை வளத்தினால் ஒப்பிட்டு ஆய்வுக்கு உட்படுகின்றனர்.

பைரன் ஆங்கில இலக்கியத்திற்கு மட்டுமல்ல உலக இலக்கியத்திற்கே சொந்தமானவர். அவரது கவிதைகள் இங்கிலாந்தில் மட்டுமின்றி அமெரிக்கா, ரஷ்யா, பிரான்சு, ஜெர்மன் போன்ற நாடுகளிலும் பெரும் வரவேற்பையும் வாழ்த்தையும் பெற்றவை. சுருங்கக் கூறின்— தன் வாழ்நாளில் மிகப் பெரும் விளம்பரம், வரவேற்பு, பாராட்டுப் பெற்ற ஒரே கவிஞர்—உலகளாவிய அளவில்—பைரன் ஒருவரே என்றால் மிகையாகாது. தன் காலத்திய சமுதாயத்தை பிரதிபலித்தது மட்டுமின்றி தன் காலத்திய சமுதாயத்தை விமரிசித்த எழுத்துக்களைப் படைத்தவர் என்பதில் கருத்து வேறுபாடு இல்லை.

பைரனின் தாக்கம் உலக இலக்கிய வரலாற்றில் பெரிதும் குறிப்பிடத்தக்கது. இங்கிலாந்து நாட்டில் பிறந்தாலும் பைரன் வாழ்நாளை மற்ற ஐரோப்பிய நாடுகளிலேயே கழித்தவர். அவரது வாழ்வு ஒரு யாத்திரை (Childe Harold's Pilgrimage போல) என்றால் மிகையாகாது. தனது வாழும் முறையினாலும், புரட்சிக் கவிதைகளினாலும், மரபை எதிர்த்த மறத்தன்மையினாலும் பெரும்புகழ்பெற்ற பைரன் ஒரு மாபெரும் சக்தியாக ஐரோப்பிய இலக்கியவாதிகளைப் பாதித்தவர்.

பிறமொழிக் கவிஞர்களுடன் பைரன் ஒப்பிடப்பட்டுள்ளார்; அவர்களுக்கு இடையேயுள்ள ஒற்றுமை வேற்றுமைகள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.* மேலும், பைரன் உருவாக்கிய கதை மாந்தர்களும் பிறமொழி இலக்கிய கதைமாந்தர்களுடன் ஒப்பிட்டு ஆராயப்பட்டுள்ளனர்.**

---

* G. Wilson Knight : Herbert Read and Byron; Byron and Shakespeare
Kingsley : Thoughts on Shelly and Byron & Jennyson's Ulysses
R. H. Fogle : Byron and Nathaniel Hawthorne
Grierson : Byron and Swinburne

** G. Wilson Knight : Colman and Donleon

உணர்ச்சி மிகுந்த பைரனின் கவிதைகள் ஐரோப்பிய எல்லைகளையும் கடந்து ரஷிய, ஆசிய கண்டங்களையும் வெகுவாகப் பாதித்தது எனலாம். பைரன் மரபு என்றே அழைக்கப்பட்ட அவரது கவிதைகளின் தாக்கம் ரஷிய மொழிக் கவிஞர் புஷ்கினிடம் பெரிதும் காணப்படுவதை ஆய்வாளர்கள் ஆதாரங்களுடன் சுட்டிக் காட்டுகின்றனர்.* புஷ்கினின் பைரனைப் பற்றிய இரங்கல் கவிதை கடலுக்கு என்பது பைரனின் மொழி நடையின் நேரடித் தழுவல் என்று சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. ஆக, பைரன் மரபு என்பது ரஷியக் கவிஞர்களிடம் மட்டுமில்லாது இந்தியக் கவிஞர்களையும்—குறிப்பாக கவிஞர் பாரதியை வெகுவாகப் பாதித்துள்ளது என ஆய்வாளர்கள் கூறுகின்றனர். பைரனின் தாக்கம் பாரதியிடம் மிகுந்து காணப்படுவதை சுட்டிக்காட்டும் கலாநிதி கைலாசபதி அவர்கள் பாரதியின் "எந்தையும் தாயும்", "எங்கள் தாய்", "பாரத மாதா" முதலிய பாடல்களில் பைரனின் டான் ஜுவான் (Don Juan) என்ற கவிதையின் தாக்கத்தைக் காண்கிறார். மேலும், பைரனின் சைல்டு ஹெரால்டின் யாத்திரை (Childe Harold's Pilgrimage) என்னும் நெடும் பாடலில் இத்தாலி, கிரீசு ஆகிய நாடுகளைப் பற்றி பைரன் கூறுமிடங்களில் அச்சொற்களை நீக்கிவிட்டு இந்தியா என்னும் பதத்தை வைத்துப் படித்தாலும் பொருந்தும். "எந்தையும் தாயும்" என்று தொடங்கும் இனிமை கலந்த பாரதியார் பாடலிலே

கன்னியராகி நிலவினிலாடி
களித்ததும் இந்நாடே

என்பது போன்ற அடிகள் டான் ஜுவான் காவியத்தில் வரும் கிரேக்கத் தீவுகள் என்ற பைரனின் பாடல்களின் நேர் எதிரொலியாகக் காணப்படுகின்றன".**

பாரதியின் கவிதைப் பொருள்களில் ஆங்கிலக் கவிதைகளின் தாக்கம்—கதைப் பொருளில் மட்டுமல்லாமல், காட்சி அமைப்புகளிலும் காணப்படுவதைக் காணலாம். மேலும் சில ஆங்கிலக் கவிதை படிமங்கள் அவரது மனதில் ஆழ்ந்து கிடந்து பிறகு அவரது படிமங்களாக வெளிவருவதைப் பின்வரும் சான்று மூலம் காணலாம்: சந்திரிகை "வானமாங்கடலிடை ஒருமையிற்றிகழு

* Rene Wellek, Discrimations.

** கலாநிதி கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம்.

மொன் மதித்தீவு'' போன்று உள்ளதாக ஆங்கிலக்கவிஞன் (ஊனப்புலவன்) உரைத்துளன் என்று படிமத்தின் அழகை வியக்கிறார். அந்தப்படிமம் சிறிது காலத்தில் அவருடையதாக ஆகி ''விழிக்கின்பமளிப்பதோர் தீவென்றிலகுவை வெண் ணிலாவே'' என வெளிப்படுவதைக் காணலாம்.

பாரதியின் தாக்கத்தினால் உருவான பாரதிதாசனின் கவிதைகளில் பிறமொழிக் கவிஞர்களின் பாதிப்பைப் பற்றி ஆராயும் போது ஒப்பியல் இலக்கியக் கோட்பாடுகளில் மிக முக்கியமான ஒன்றைக் கருத்தில் கொள்ள வேண்டும். ஒரு கவிஞனிடம், ஒருகாலத்தின், ஒரு கருத்துப் பரிமாணத்தின் தாக்கம் நேரடியாகவும் இருக்கலாம் (Direct influence); மறை முகமாகவும் இருக்கலாம் (Indirect influence).

ஒரு இலக்கியவாதி—பாரதியைப் போன்ற பெருங்கவிஞர்—அந்நியக் கவிஞர்களின் தாக்கத்தினால் ஒரு மரபை உருவாக்கி அதன் மூலம் அந்த மரபில் வரும் மற்றையக் கவிஞர்களுக்கு பிற சிந்தனைத் தாக்குதல்களுக்கு உள்ளானாலும் மரபும் தனித் திறமையும் கொண்டு (Tradition and the individual talent) மறைமுகமான தாக்கத்தை ஏற்படுத்தலாம்.

சான்றாக, புஷ்கினால் ரஷிய மொழியில் மொழிபெயர்க்கப் பட்ட பைரனின் கவிதைகள் ரஷிய இளம்கவிஞர்களுக்கு நேரடித் தாக்கத்தை ஏற்படுத்தவில்லையெனினும் பைரன் வழி வந்த புஷ்கின் கவிதைகள் மறைமுகத் தாக்கத்தை ஏற்படுத்தின.

பைரனைப் படியாதோரும், அறியோதோரும் புஷ்கின் மூலமாக பைரன் மரபுவழிக் கவிதைகள் உருவாக்கியதைக் காணும் போது பாரதிதாசனிடம் காணப்படும் தாக்கம் பாரதி வழிவந்த மறைமுகத் தாக்கம் என்றே கருத இடம் இருக்கிறது.

பிரெஞ்சு நாட்டு ஒப்பிலக்கிய ஆய்வாளர்கள் பெரிதும் பின்பற்றிய இம்மாதிரியான தாக்க ஆய்வுகள் பெரும் தர்க்கத் துக்கு உள்ளாயின. இரு வேறு மொழிக் கவிஞர்களிடம் யாதொரு தாக்கமும் இல்லாமல், தத்துவரீதியாகவோ, தனி மனித ரீதியாகவோ எந்தவித ஒற்றுமை இல்லாமல் போனாலும் ஒப்பியல் ரீதியாக அவர்தம் கவிதைகள் அமைவது என்று ஆய்ந்து கண்டறிந்தனர். ஒரு வகையில் நேரடியான தொடர்போ, தாக்கமோ இல்லாது போவதாலேயே அவர்தம் படைப்புகள் ஒப்பியல் முறையில், சுவை தருவதாயும், பொருள் தருவதாயும் புதிய உண்மைகளை வெளிக் கொணர்வதாக உள்ளன என்று அறிகிறோம்.

இனி, பாரதிதாசன் கவிதைகளில் ஆங்கிலக் கவிஞர்களின்—குறிப்பாக பைரனின்-தாக்கம் உள்ளதா என்பதைக் காண்போம்.

உண்டு என்பாரும் உண்டு. இல்லை என்பாரும் உண்டு.

பாரதிதாசன் ஆய்வாளர்களில் முனைவர் மா. செல்வராசன் மீண்டும் மீண்டும் பாரதிதாசனிடம் மேற்கத்திய இலக்கிய தாக்கம் உண்டென்றே கூறுகிறார். விடுதலை உணர்வு, ஏற்றத் தாழ்வு அற்ற சமநிலை, உலகம் ஒன்று, புரட்சியினால் புதுஉலகு செய்யலாம் போன்ற கருத்துக்கள் மேனாட்டு சிந்தனையின் தாக்கத்தினால் ஏற்பட்டது என்கிறார். ரஷியப் புரட்சியின் தாக்கமும் பிரெஞ்சு இலக்கிய வரலாற்றின் தாக்கமும் பாரதிதாசனிடம் உண்டு என்று ஆணித்தரமாகக் கூறுகிறார். "சமத்துவம் என்பது பிரெஞ்சுப் புரட்சி உலகிற்கு அளித்த மூன்று பண்புகளில் ஒன்று" என்பது அவர்தம் கருத்து.*

பாரதியையும் பாரதிதாசனையும் ஒப்பிட்டு ஆய்ந்த ஆய்வாளர் ஒருவர், இருவரின் கவிதைகளையும் கட்டுரைகளையும் அணு அணுவாக ஒப்பிட்டு அலசி ஆய்ந்து, தராசில் நிறுத்துப் பட்டியல் போட்டு அட்டவணை தயாரித்து அளிக்கிறார்: "பாரதியிடம் பாரதிதாசனை விடவும் மேற்கத்திய ஆக்கக் கருத்துக்கள் மிகுந்து வந்தாலும் மிகக் குறைந்த எண்ணிக்கையில் தான் மிகுந்து வரல் காணப்படுகிறது. பாரதியும் பாரதிதாசனும் மேற்கத்திய ஆக்கக் கருத்துக்களில் மிகப்பெரும்பாலும் ஒற்றுமை நிலையில் இருக்கிறார்கள் என்று மதிப்பிடுவது பொருத்தமாகும்.........பாரதியிடம் மேற்கத்திய ஆக்கத்தின் கருத்துக்கள் 97%; பாரதிதாசனிடம் இவை 90%. இதனால் இருவரிடைய காணப்படும் விழுக்காட்டின் வேறுபாடு 7%". **

பாரதிதாசன் மேனாட்டு இலக்கியங்களின் தாக்கத்தினால் இலக்கியம் படைத்தவர் அல்ல என்று கூறுபவர்களில் முக்கியமானவர் பாரதிதாசன் அவர்களே.

ஆங்கில பிரெஞ்சு இலக்கியவாதிகள் மட்டுமல்ல—பாரதியின் தாக்கமே தவறு என்று சொன்னவர் பாவேந்தர். அழகின் சிரிப்பில் சில வரிகள் பாரதியின் சக்திப் பாட்டின் மற்றொரு கோணம் என்று பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன் எழுத,

---

* பாரதிதாசன் ஒரு புரட்சிக் கவிஞர்

** முனைவர் சி. கனகசபாபதி, பாரதியும் பாரதிதாசனும் ஒப்பியல் திறனாய்வு.

"அவனவன் அவனவனுக்கு வட்டம் போட்டுக்கிட்டு அதிலே வளைக்கப் பார்க்கிறானுங்க" என்று சினந்த கவிஞர் இயற்கையின் வாழ்வுடன் இயைந்து சென்றால் கவிதைகள் தாமே இயற்றப் படும் என்கிறார்.*

அறிஞர் வி. ஆர். எம். செட்டியார் வானொலி உரை ஒன்றில் குடும்ப விளக்கு பிரெஞ்சு இலக்கியத் தாக்கம் என்ற போதும் மறுத்துரைக்கும் பாவேந்தர், "எனக்கு பிரெஞ்சு பேசத் தெரியும். எழுத்துக்கள் தெரியும். ஆனால் எந்தப் பேரிலக்கியமும் தெரியாது" என்பதோடு வேதநாயகம் எழுதிய பெண் மதி மாலை மற்றும் சங்க இலக்கியங்கள், அகப்பொருள் நூல்களின்பால் கொண்ட ஈடுபாட்டின் காரணமாகவே தம் கால சமுதாயம் சிறக்கக் குடும்ப விளக்கு** எழுதப்பட்டதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

ஆனால் பாரதிதாசன் மறுக்க முடியாத ஒரு உண்மை உண்டு — பாரதியார், பெரியார் ஆகிய இரண்டு மாபெரும் சக்திகளின் தாக்கம் பாரதிதாசனின் கவிதைகளிலும் கருத்துக்களிலும் காணப்படுகின்றது.

ஆக, பிற கவிஞர்கள் அல்லது பிற கருத்துக்களின் தாக்கம் மறைமுகமாக நடைபெறுகிறது. இதை படைப்பாளி தன்வழியே வெளிப்படுத்தும் போது அவர்தம் மறுப்பில் பொருள் உண்டு. எப்படிப் பாரதி ஆங்கிலப் படிமத்தை தன்வசப்படுத்தி தன்னது ஆக்குகிறாரோ அதைப்போல் மறைமுகத் தாக்கத்தில் தனித் திறமையுடைய இலக்கியவாதியால் பிறவற்றைத் தன்னுடையதாக ஆக்கிக் கொள்ள முடிகிறது.

ஒப்பியல் இலக்கியக் கோட்பாடுகளில் தாக்கம் (Influence) என்பது தவறாகவும் தன்வழிப்பட்ட தகுதி மதிப்பீடாக ஆய்வாளர்கள் அமைத்துக் கொள்வதாலும் இந்த முறை பிரெஞ்சு ஆய்வுக்கோட்பாடுகள் புறக்கணிக்கப்பட்டு அமெரிக்க கோட்பாடுகள் பெரிதும் ஆதரவு பெறுகின்றன. இந்த முறையில் இருவேறுபட்ட இலக்கியவாதிகளுக்கு உள்ள தொடர்பு, தாக்கம் போன்ற பொருத்தமில்லாத காரணகாரிய ஆய்வு முறைகளைத் தவிர்த்து இருவரிடம் பொதுவாகக் காணப்படும் ஒற்றுமை வேற்றுமைகளை எழுத்து நடையிலோ, அமைப்பிலோ தத்துவக் கண்ணோட்டத்திலோ சுட்டிக்காட்ட முனைவதுதான்.

---

* பாரதிதாசன், அழகின் சிரிப்பு முன்னுரை.

** த. கோவேந்தன், பாவேந்தம்.

பாரதிதாசனை பைரனுடன் ஒப்பிடும் போது அம்மாதிரி அணுகுமுறை பகுத்தறிவுக்குப் பொருந்தி வருவதாகும். பாரதியின் படைப்புகளின் மீது ஒப்பியல் ஆய்வாளர்கள் மேற்கத்திய கருத்து, கவிதை, கட்டமைப்பு தாக்கத்தினை குறிப்பிடப்போய் பாரதி என்ற சுய சிந்தனையாளனை சின்னா பின்னப்படுத்தி விட்டனர். ஒருசிலர் ஒரு படி மேலே போய் பாரதியின் கவிதை பிறந்ததே புனைவியல் கால கட்டம் இங்கிலாந்து நாட்டை விட்டு இருநூறு ஆண்டுகள் கழித்து இந்தியாவில் நுழைந்ததினாலேயே என்று ஆய்வு செய்ய ஆரம்பித்து விட்டனர். இதனாற்றான் பாரதியைப் பற்றிய ஆங்கில ஒப்பியல் ஆய்வுகளில் சில—களிமண்ணைச் செதுக்கி பிள்ளையார் செய்வது போல் மேனாட்டுக் கவிஞர்களினால் இந்தியக் களி மண்ணைப் பிசைந்து செய்யப்பட்ட பிள்ளையாராக பாரதி விளங்குவதாக சுட்டிக்காட்டப்படும் வேதனையான நிலை உருவாகியுள்ளது.

கவிதை, கவிஞனையும் காலத்தையும் பொறுத்து அமைவது என்பது உண்மை. ஆனால் கவிஞன் என்பவன் தன்மொழியை தன் வழியில், தன் சிந்தனையால் தன் நம்பிக்கையால் உருவாக்கும் படைப்பாளி; பிறரால் உருவாகும் பொறுப்பாளியல்ல. எனவே 'தாக்கம்' பற்றி ஆய்வு செய்யும் போது இலக்கியவாதி தன்படைப்பின் தாக்கத்தினால் படிப்பவர் மனதில் உலக இலக்கியங்களை ஒருங்கே கொணர்கிறான் என்பதை ஆய்வாளர் உணர வேண்டும்.

இக்கரையில் பிறந்த பாரதிதாசனும் அக்கரையில் பிறந்த பைரனும் 'தாக்கத்தினால்' ஒப்பிடத் தக்கவர்கள் அல்ல. கருத்துக்களால் — அவற்றில் எவ்வளவு ஒற்றுமை இருக்கிறதோ அவ்வளவு வேற்றுமையும் இருத்தல் கண்டு — ஒப்பிடத்தக்க வர்கள்.

# II

பாரதிதாசனுக்கும் பைரனுக்கும் உள்ள ஒற்றுமை—அவர்கள் தங்கள் கவிதைகளில் கதைக் கருத்துக்களை — அடிக்கருத்துக் களைக் (Themes) கையாளும் முறையில் காணப்படுகிறது.

தங்கள் கால சமுதாயத்துக்கேற்ற கருத்துக்களை வெளியிட அவர்கள் பழங்கால, காவிய, புராண, பிறமொழிக் கதைக்கருத்துக் களை எடுத்துக் கொண்டு அவற்றின் வாயிலாகக் கருத்துக் களைச் சொல்லப் பயன்படுத்தினர்.

பாரதிதாசன் இராமாயணக் கதையில் இடம் பெற்ற சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் மூட நம்பிக்கைகளைச் சாடுகிறார். சிந்தாமணி, வடமொழி பில்ஹணன், பழம் நாடகத்தெருக்கூத்துக் கதைகள், சிலப்பதிகாரம், மணிமேகலை, சங்க இலக்கியக் கவிஞர்கள், காதலர்கள் என்று பழங்கதைக் கருத்துக்களுக்குப் புத்துயிர் கொடுப்பது போல்—

பைரனும் பழைய, புதிய பைபிள் ஏற்பாடுகள், இலக்கிய புராண காவியக் கதைகள், இலத்தீன், கிரேக்க வீரர்கள், கடவுள்கள் பற்றிய வழிவழி வந்த பழங்கதைகள், ஹீப்ரு மொழி புராணங்களில் இடம் பெற்ற சம்பவங்கள் என அடிக்கருத்துக் களைக் கொண்டு கவிதைகளையும், காவியங்களையும், நாடகங் களையும் படைக்கிறார்.

மற்றொரு ஒற்றுமை—தீயவர்கள் என்று பல காலம் நம்பப் பட்டு வருபவர்களை நல்லவர்கள் என்று புரட்சிகரமான விவாதங்களின் மூலம் இருவருமே உருவாக்கியிருக்கிறார்கள்.

பாரதிதாசன், இராவணன் திராவிட இன வீரத் தலைமகன், இரணியன் இணையற்ற வீரன் எனக் காட்டுவதுடன் அவர்கள் செயல்களை நியாயப்படுத்துகிறார். பைரனும் கிறித்துவ மத வாதிகளால் வெறுக்கப்படும் கதை மாந்தர்களான ப்ரொமிதியஸ் (Prometheus), டான்ஜுவான் (Don Juan), கடவுளின் எதிரியான லூசிஃபர் சாத்தான் (Lucifer) போன்றவர்களின் செயலை நியாயப்படுத்தி, புகழ்ந்து பாடுகிறார்.

இதில் டான் ஜுவான் கதைக்கரு ப்ரொமிதியஸ் கதை ஐரோப்பிய மொழிகள் பலவற்றிலும் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளதுடன் ஒப்பியல் ஆய்வாளர்கள் பலரும் அந்த அடிக் கருத்துக்களைப் (Themes) பற்றி எண்ணற்ற ஆய்வுகள் செய்துள் ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. பைரன் பெற்ற உலகப் புகழுக்கும்—அவரது பெயரும், வாழ்க்கையும் படைப்புகளும் பெரிதும் உலக அரங்கைக் கவர்ந்ததற்கும் — இதுவே காரணம் எனலாம்.

பாரதிதாசனிடமும், பைரனிடமும் காணப்படும் கவிதைக் கருக்களை ஒட்டுமொத்தமாகத் திரட்டிப் பார்த்தால் அவர்தம் ஒற்றுமை வேற்றுமைகளைப் பின்வருமாறு அறியலாம்:

**ஒற்றுமை:** தாய்நாட்டின் வளர்ச்சிமீது ஆர்வம், பிறநாட்டில் ஏற்படும் எழுச்சி, புரட்சி, போற்றத்தகு மாற்றங்களைப் புகழ்ந்து பாடுதல், தன்னை எதிர்ப்பவர்களை, தனக்குப் பிடிக்காதவர்

களைக் கடுமையாகச் சாடுதல், தான் பெரிதும் மதிக்கும் மாபெரும் புரட்சி வீரர்களைப் போற்றுதல், தன்னை இழந்து செயல் இழந்து தவிக்கும் காதலர்களைச் சித்தரித்தல், பிறர் நாட்டிற்குச் சென்று போரிட்டு வெற்றிவாகை சூடும் வீரர்களைப் பற்றிப் பாடுதல், அடிமை வாழ்வு அகன்று விடுதலை பெற்றிட வீர உணர்ச்சி தோன்றும் வகையில் பாடுதல், சமுதாய அநீதி களைக் கடுமையாகச் சாடுதல், அதற்குக் காரணமான அரசியல் சமய சமூக சூழ்நிலைகளைச் சுட்டிக்காட்டி நிந்தித்தல், கடவுள் அல்லது கடவுட் பொருளை இடித்துரைத்தல், இனிவரும் நடப்பு களை எதிர் நோக்கி இன்னதுதான் செய்தல் நன்று; அதுவும் உடனே என்று வீறுநடையில் விவரமாகச் சொல்லுதல், புதுமை வழிச் சென்று எதிர்காலம் படைக்க எத்தனித்தல் என்று பாரதி தாசன் பைரன் படைப்புகளில் அடிக்கருத்துக்கள் நிறைய ஒத்துப் போவதைக் காணலாம்.

**வேற்றுமை:** பாரதிதாசனுக்கும் பைரனுக்கும் உள்ள ஒற்று மைகளை விட வேற்றுமைகள்தான் மிகுந்த சுவையளிப்பதாயும் ஆயத் தூண்டும் வகையிலும் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. இக்கரைச் சிந்தனைக்கும் அக்கரைச் சிந்தனைக்கும் இடையில் தான் எவ்வளவு வேறுபாடு? தாய்நாட்டை, தாய்மொழியை, தம் மக்களை போற்றிய, அவர்களுக்காகவே எழுத்துக்களை உருவாக்கிய பாரதிதாசன் எங்கே? தன் நாட்டை வெறுத்து, தம் சமுதாய மக்களை நிந்தித்து, சமூக கட்டுத்திட்டங்களை எட்டி உதைத்த பைரன் எங்கே? காதலே புனிதம், காதலே வாழ்வின் அடிப்படை என்று பாடிய பாரதிதாசன் எங்கே? கள்ளக்காதல், பால்ய கால முறை, கெட்ட காதல், காமமே பெரிதென்ற பாலுணர்வுபால் பட்ட காதல்—என்று காதலைக் கயமைத்தனம் நிறைந்த ஒரு செயல் எனப் பாடிய பைரன் எங்கே? தாழ்த்தப் பட்டவர், வறுமையில் வாடுபவர், உழைப்பாளர் என சமுதாயத்தின் கீழ்மட்ட மக்கள் மேல்நிலை பெற பாடிய பாரதி தாசன் எங்ஷே? செல்வச் சீமானாய் பிறந்தும் வாழ்ந்தும் முதலாளித்துவ கண்ணோட்டத்துடனே சமுதாயத்தைப் பாடிய பைரன் எங்கே? சமுதாயமே தன்னுலகம் என்று கருதிய பாரதி தாசன் எங்கே? தானே சகலமும், தன்னிலேயே உலகம் என தன்னையே ((Egotism) தலைமகனாகப் படைத்துக் கொண்டு பாடல்கள் எழுதிய பைரன் எங்கே?

"உலக இலக்கியங்கள் பலவற்றிலும் அடிக்கருத்துக்கள் (Themes) ஒரு தன்மையாகவே அமைந்துள்ளன. வரலாறு, சமுதாய நிலை இவற்றை உணர்ந்தால் இலக்கியத் தோற்றத்

திற்கும், வளர்ச்சிக்கும் வேறுபாட்டிற்கும் காரணம் புலனாகும்'' என்கிறார் பேராசிரியர் தமிழண்ணல்.*

இந்த ''ஒரு தன்மையை அறிய'' அடிக்கருத்துக்களை ''வாழ்க்கை என்பது தமது உலகுடன் உள்ள உறவு'' (Life is our relation with our circumabient universe) என்ற அடிப்படையில் அறிவியல் ரீதியாக கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம்:

1. ஆண்—பெண் உறவு
2. மாந்தருக்கும் சமுதாயத்துக்கும் உள்ள உறவு
3. மாந்தருக்கும் இயற்கை அல்லது சமயத்துக்கும் உள்ள உறவு.

1. ஆண்—பெண் உறவு என்பதில் அடங்குவன காதல், திருமணம், குடும்ப வாழ்வு இன்ன பிற. இவர்கள் இருவரின் படைப்புகள் இவ்வகையில் இரு துருவங்களாக விளங்குகின்றன. இருபதாம் நூற்றாண்டு நற்றமிழ் கவிஞர் பாரதிதாசன் இந்திய மண்ணில் தமிழ்ப் பண்பாடு எனும் உரம் போடப்பட்டு தமிழர் பண்பாடு என்ற நீர் ஊற்றப்பட்டு வளர்ந்த நெடுமரம். அவருக்கு நூற்றி மூன்று ஆண்டுகட்கு முன்பிறந்த ஆங்கில நாட்டு அரச பரம்பரையைச் சார்ந்த (Lord) பைரன் ஸ்காட்ச், ஆங்கிலம் கலந்த பண்பாட்டுச் சக்தியில் பிறந்து பிறநாட்டு எல்லைகளில் விரிந்து சுவாசித்து வளர்ந்த ''ஓக்'' மரம். உறுதியானது அழகானது ஆனால் ஆக்க ரீதியில் பயனற்றது.

ஒப்பியல் ஆய்வாளர் ஒரு பகுதி கண்ணோட்டம் கொண்டு நீதித் தீர்ப்பு (Judicial Criticism) வழங்குதல் கூடாது எனினும் இவ்வகையான கண்ணோட்டம் தவிர்க்க இயலாதது.

காதல் — புனிதமானது; தெய்வீகமான உலகை இயக்கும் மாபெரும் சக்தி; ஆண், பெண் உறவுக்கே ஆணித்தரமானது.

பாரதிதாசனும் பைரனும் காதல் மன்னர்கள். ஆனால் எத்தனை வேறுபாடு?

பாரதிதாசனின் காதல் கவிதைகளில் கதை இருக்கும்—உடன் காட்சியும் இருக்கும். நிகழ்ச்சியின் இடம் காலம் ஆகிய சூழல்கள், சுற்றியுள்ள இயற்கை அற்புதங்கள், காதல் மாந்தர்களின் அங்க லய ஓவிய சித்தரிப்புகள் இன்ன பிறவெல்லாம் இருக்கும்.

---

* தமிழண்ணல், ஒப்பிலக்கிய அறிமுகம்.

தடையை மீறும் காதல், சம்பிரதாயத்தை மீறும் காதல், அதிகாரத்துக்குத் தலை வணங்காத காதல், தட்டிக் கேட்கும் காதல், தர்க்கம் செய்து சாவிலும் துணிந்து நிற்கும் காதல், தோல்வி எனினும் துவண்டு வீழாது வீழும் வரை எதிர் நின்று வீரம் பேசும் காதல்—என்றெல்லாம் காதலின் பரிமாணங்கள் பாரதிதாசன் கவிதைகளில் சிறப்பாகக் காணப்படுகின்றன.

பாரதிதாசன் சுட்டிக் காட்டும் காதல் அன்பின் வயப்பட்டது. அழியாத் தன்மையது, என்றும் தொடர்வது, முதுமைக் காலம் வரை நிலைத்து நிற்பது.

ஆடவரின் காதலுக்கும் பெண்கள் கூட்டம்
அடைகின்ற காதலுக்கும் மாற்றமுண்டோ

எனும் கவிஞன்,

காதல் அடைதல் உயிரியற்கை—அது
கட்டில் அகப்படும் தன்மையதோ?—அடி
சாதல் அடைவதும் காதலிலே

என்று காதலின் வலிமையை விளக்குகிறார். மாறாக, பைரன் காட்டும் காதல் மாறி வருவது மட்டுமல்ல; பறந்து செல்வதும் காரியம் முடிந்ததும் காதலியை துறந்து செல்லத் தூண்டுவதுமான வெறும் பாலுணர்ச்சிக் காதலாகத் தோன்றுகிறது. "ஆனால் நம் காதல் பெருமூச்சு சாதலில் முடிவதில்லை—காதல் பறந்து போய் விடுகிறது" என்று கூறுகிறார் பைரன்.

"But since our sighing
Ends not in dying
Love plumes his wing"

(Stanzas written at La Mira for Teresa)

அவரது கவிதைகளில் — முக்கியமாக அவரது சிறந்த படைப்பான டான் ஜுவான் (Don-Juan) பாடல்களில்—காதலை எள்ளி நகையாடுவதற்கும் ஏளனம் செய்வதற்குமே கவிஞர் பயன்படுத்துகிறார்.

பைரனிடமிருந்து பெண் விடுதலைப் பாடல்களையோ, பெண் கல்வி, பெண் தலைமை, பெண் போற்றப்படுதல், குடும்ப விளக்காக மனைவியை உருவாக்குதல் போன்ற "பாவேந்தம்"

கிடைக்கக் காரணமில்லை. பைரன் திருமணங்களை நடத்தியிருக்கிறார். காதலே எல்லாம் என்று அவரது நெருங்கிய நண்பர் ஷெல்லி "அறிவழகி" (Intellectual Beauty) என்று தன் மனைவியைப் பாடியும் பிரியாது வாழ்ந்ததையும் பார்த்திருக்கிறார். ஆனால் அவர்தம் குடும்ப வாழ்வில் திருமணம் காதல் மணம் வீசவில்லை. பெண் பித்தன், பிறர் மனை விழையும் சண்டாளன், காதல் மன்னன் என்றெல்லாம் சமுதாயத்தில் எண்ணப்பட்ட பைரனுடன் எந்தப் பெண்தான் வாழ்வாள் ?

டான்ஜுவான் வாயிலாக,

'Tis melancholy and a fearful sign
Oh human frailty, folly also crime
That love and marriage can really combine
Although they both are in the same clime
Marriage from love, like vinegar from wine
A sad, sour, sober—beverage by wine
Is sharpened from its highly celestial flavour
Down to a very homely household savour.

காதல் வாழ்க்கை—
அது துயரமானது, அச்சுறுத்தும் அறிகுறி
மனித பலவீனம், முட்டாள்தனம், குற்றமுங்கூட
காதலும், மண வாழ்வும் ஒத்த சூழ்நிலையில்
இருப்பதானாலும்
இரண்டும் உண்மையில் சேர்ந்து உள்ளன அல்ல
திருமணம்—காதல் மதுரசத்தில் உள்ள ரசம்போல
தோன்றினாலும்
அது கவலை தரத்தக்க, கசப்பான, மயக்கமூட்டும் மதுவாகும்
நாள்பட நாள்பட கசப்பே பெரிதாகும்

என்று கூறுகிறார் பைரன்.

உள்ளம் கவர்ந்தாளின்
உள்ளந்தான் கவர்ந்து
வெள்ளத்தில் வெள்ளம்
கலந்ததென—விள்ளும் நிலை
கண்டு மணம் புரிதல் வேண்டும்
..........................................
.....................................அக்காதல்
சாதல் வரைக்கும் தழைத்தோங்கும்

என்கிறார் பாரதிதாசன்.

எழுதுவது பிறர் படிப்பதற்கே
எண்ணங்கள் எழுத்துக்களாவதே
ஏனையோருக்குத் தெரிவிப்பதற்கே

என்ற முறையில் பாரதிதாசனும் பைரனும் தங்கள் சமுதாயத்துக்காக எழுதினர்.

இந்த வகையில் பாரதிதாசனைவிட பைரனுக்கே பெரும் வெற்றி கிடைத்தது எனலாம். "தூங்கி எழுந்தவுடன் அறிந்தேன் நான் பெரும் புகழ் பெற்றுவிட்டேன் என்பதை" என்கிறார் பைரன். அவர்தம் நாட்டில் மட்டுமல்ல ஆங்கிலம் அறிந்த அனைத்து நாடுகளிலும் ஆர்வத்துடன் படிக்கப்பட்டது அவரது கவிதைகள். தற்காலத் திரைப்பட நட்சத்திரத்துக்குத் திரண்டு வரும் (Super Star) ரசிகர் கூட்டம்—முக்கியமாகப் பெண்கள் கூட்டம்—அவரைக் காணவும் அவருடன்பேசவும் துடித்தது. அழகிய தோற்றமுடைய சீமான் பரம்பரையைச் சார்ந்த பைரன் அவர்தம் படைப்புகளில் தலைமகனாகத் (Hero) தன்னையே உருவாக்கி, தன் காதல் லீலைகளையும், கவிதைத் திறனையும், சிந்தனைச் செருக்கையும், புரட்சி வாழ்க்கையையும் வெளிப்படுத்தியதும் அவருக்குக் கிடைத்த புகழுக்கு ஒரு காரணமெனச் சொல்லலாம். ஒருவித போராட்ட வெறியுடன், ஒழுக்கநெறி மதியாது, ஒருவித தளைகளுக்கும் கட்டுப்படாது வாழ்ந்த பைரனின் வாழ்வு முறையே அக்கால சமுதாயத்தில் அனைவரின் கவனத்தையும் அவர்பால் ஈர்த்தது.

பாரதிதாசனிடமும் ஞானச் செருக்கும் கம்பீரமும் இருந்தாலும் மெள்ள மெள்ளத்தான் சமூக அங்கீகாரம் அவருக்குக்

கிடைத்தது எனலாம். பல்வேறு காரணங்களுக்காகப் பாரதிக்குக் கிடைத்த பெரும்புகழின் துணைகொண்டு அவரது தாசனாகவே வளர்ந்த கவிஞர் ஒரு குறிப்பிட்ட காலத்துக்குப் பின்னே—ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் ஆதிக்கம் எதிர்க்கப்பட்ட காலத்திலேயே —புகழைப் பெற முடிந்தது எனலாம்.

இரு கவிஞர்களுமே எதிர்நீச்சல் போட்டுத்தான் எழுத்துலகில் இடம் பெற்றனர். அதிலும் பாரதிதாசனின் சமுதாயம் குறுகியது. எல்லையால் இடப் பரப்பால் மட்டுமல்லாது, மனத்தளவில், மதியளவில் மிகவும் குறுகியது. அவரது சீர்திருத்தக் கருத்துக்களை விட முற்போக்கானவை கிடையாது. ஆனால் பிற்போக்குவாதி என்றே படிப்புலகில் சித்தரிக்கப்பட்டார். தேசிய விரோதி, குறுகிய எண்ணம் கொண்டவர் என்றே நிந்திக்கப்பட்டார். ஆனால் பாரதிதாசன் படிப்புலக விமரிசனங்களை மீறி, தன் கொள்கைகளை விடாது எழுத, உடன்வீறு கொண்டு எழுந்த சமுதாயத்தினால் அங்கீகரிக்கப்பட்டு ஆட்கொள்ளப்பட்டார். பைரனின் முதல் வெளியீடே—படிப்புலக விமரிசகர்களையும் கவிஞர்களையும் மோசமான முறையில் திட்டி எழுதியதுதான். ‘ஆங்கிலக் கவிஞர்களும் ஸ்காட் விமர்சகர்களும்’ என்ற நூலில் தம்மை ஒரு போராட்டக்காரனாக அறிமுகப்படுத்திக்கொண்டு பத்திரிகை உலகில் ஒரு பரபரப்பை ஏற்படுத்திவிட்டே மற்ற கவிதைகளை வெளியிட ஆரம்பித்தார். பாரதிதாசனைப் போல் தம் காலக் கவிஞர்களின் தாக்கம் இல்லாமல் தனித்து நின்று தாக்க எழுத்துக்களைப் படைத்து தமது எழுத்து யுத்தத்தை தொடர்ந்த பைரன் கடைசிகாலம் வரையிலும் ஒவ்வொரு கவிதை நூலில் யாரையாவது கவிஞர்களையோ, விமர்சகர்களையோ கிண்டல் செய்தும் கேலி செய்துமே எழுதி வந்தார். எதிர்ப்புகள் மேலிட்டதும்தான் பாரதிதாசன் தன் எழுத்து யுத்தத்தை ஆரம்பித்தார். பிறகு அவரது ஏச்சுக்கும் பேச்சுக்கும் எழுத்துக்கும் எண்ணற்றோர்—பெரும்புலவர்கள்—பலியானார்கள் எனலாம்.

ஆக—பாரதிதாசனும் பைரனும் எழுதுவதில் எழுச்சி காட்டினர். எதிர்ப்பு வரினும் எதிர்த்து நின்று எழுதுவதே தொழில் எனக் கொண்டு வீறுநடையில் கவிதைகள் யாத்தனர். இருவரிடம் கொண்ட கொள்கைகளில், எண்ணிய எண்ணங்களில், எடுத்துச் சொன்ன கருத்துக்களில் நம்பிக்கை இருந்தது; அதை எடுத்துச் சொல்லவேண்டும் என்ற நாணயம் (sincerety)இருந்தது. போர்வீரன் கையில் உள்ள வாள்போல் தங்கள் எழுதுகோல் பயனுற உழைக்கவேண்டும் என்ற வேட்கை இருந்தது. இருவரும்

தாங்கள் வாழ்ந்த சமுதாயத்தைச் சாடினர்; அதன் குற்றங்குறைகளை எள்ளி நகையாடினர். கண்ணாடியில் தெரியும் பிம்பம் போல் தங்கள் எழுத்துக்களில் போலித்தனத்தையும் புரையோடிப் போன நம்பிக்கைகளில் மக்கள் நாசமாவதையும் ஓவியங்களாக சித்தரித்துக் காட்டினர்.

பாரதிதாசன் குற்றம் குறைகளைச் சுட்டிக்காட்டியதோடு இன்னது செய்யவேண்டும் இன்னது நடக்கவேண்டும் அதுவும் இப்படித்தான் நடக்கவேண்டும் என்று பாடம் கற்பிக்கும் ஆசிரியராக எழுத, பைரனோ இன்னது நடப்பதையும் அதனால் ஏற்படும் இன்னல்களையும் எடுத்துக்கூறி அவற்றை மாற்ற எத்தனித்த போர்வீரனாக எழுதினார்.

சமுதாயம் ஏற்றம் பெற விழைந்த பாரதிதாசனும் பைரனும் மாற்றம் பெறவே எழுதிய காரணத்தினால் இருவருமே புரட்சிக் கவிஞர்கள் எனலாம். முன்னவர் சமுதாயப் புரட்சிக் கவிஞர்; பின்னர் அரசியல் புரட்சிக் கவிஞர். இதில் பைரன் புரட்சிப் போர் பிரெஞ்சு நாட்டில் ஏற்பட்டதுபோல் தம் நாட்டிலும் ஏற்பட விழைந்தவர்; அதேபோல் இத்தாலி, கிரேக்கம் போன்ற பிற நாடுகளிலும் ஏற்பட விழைந்தவர். எழுதினால் மட்டும் போதாது என்று செயலிலும் இறங்கி நேரடிப் போரிலும் ஈடுபட எத்தனித்தவர். கவிதைகள் எழுதுவதன் கருத்து சமுதாயத்தைத் திருத்தவேண்டும் என்பது என்றால், நேரடி நடவடிக்கையே எழுதுவதைவிட மேல் என்று அடிக்கடி சொல்லியவர் பைரன்.* அவரது இறப்பு கிரேக்க நாட்டுப் புரட்சிப் போரில் கலந்து கொள்ள சென்றபோது நடந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

"புரட்சிக் கவிஞர் என்றாலே இந்த நூற்றாண்டிலும் இதற்கு முந்திய நூற்றாண்டிலும் வேறு யாரையும் குறிக்காமல், பாரதிதாசன் ஒருவரையே குறிக்குமாறு தமிழிலக்கிய வரலாற்றிலே அவர் சிறப்பிடம் பெற்றுவிட்டார்"** என்கிறார் டாக்டர் மு. வ. அவர்தம் சமுதாயப் புரட்சி சமயத்தைத் தாக்கி மக்களிடம் ஊறிப் போயிருக்கும் பழைய நம்பிக்கைகளை எள்ளி நகையாடியது. கடவுளைக் கல் என அறிவுறுத்தி, கல்லைக் கடவுளாக்கிய காதகர்களை எதிர்த்து தத்துவ வாதம் பேசியது. முற்பிறவி, பிற்பிறவி, ஊழ் என சமயக் கருத்துக்களைத் தகர்த்தெறிந்தது. சமுதாயத்தைப் பீடித்திருந்த சாதிக் கொள்கைகளை

* J. P. Symon, Byron in Perspective.

** மு. வ., அணுக்கதிர், பாவேந்தர் நினைவு மலர்.

எடுத்தெறிய முற்பட்டது. சமுதாயக் கொடுமைகளில் மிகப் பெரும் கொடுமையான பெண் அடிமைத்தனத்தை எதிர்த்து பெண் விடுதலைக்கும் சமத்துவத்துக்கும் போராடியது. சுரண்டப் பட்டு வீழ்ந்துபட்ட தொழிலாளர் நலம் பேணியது. தொழிலாளர் எடுத்து எறிய முழக்கமிட்டது. சமுதாயக் கொடுமைகளில் எழுச்சி பாடியது பாரதி பாடிய அரசியல் விடுதலையே சமுதாயப் புரட்சி இல்லாமல் சாத்தியமாகாது என முழங்கியது. யாவரும் சமத்துவம், எல்லாம் பொதுவுடைமை என்றெல்லாம் ஆக வேண்டும் எனும் கவிஞர் ஆக்கபூர்வமான வழியில் சமுதாயப் புரட்சி ஏற்பட, கல்வி அனைவருக்கும் அளித்திடல் வேண்டும்; கலப்புத் திருமணம் காதல் திருமணம் மூலம் சாதி வேற்றுமை களை அழித்திடல் வேண்டும் என்கிறார். அவரது கவிதைகளில் மேலோங்கித் தென்படும் மற்றொரு சமுதாய உணர்வு மொழி வளர்ச்சி. தமிழ் வாழவேண்டும்; அதை அழிக்க எண்ணும் ஆரியர் தம்மை எதிர்க்க வேண்டும் என்கிறார் சமுதாயப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்.

"பைரனின் புரட்சி என்பது ஒரு முதலாளியும் புரட்சிவாதியும் கொண்ட கலவை; அடக்கு முறைக்கும் மக்கள் எழுச்சிக்கும் இடைப்பட்டது"* என்கிறார் ஒரு ஆய்வாளர். தம் காலத்தில் மாபெரும் புரட்சியாளராகக் கருதப்பட்ட பைரன் பிறப்பில் செல்வச் சீமான். புரட்சிக் கவிஞர் (The Poet of Revolt) என்றாலே ஆங்கில இலக்கிய வரலாற்றில் அன்றும் இன்றும் பைரனே என இலக்கிய வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடு கின்றனர். பைரன் வாழ்ந்த காலத்தில் வேறு சில கவிஞர்களும் ஷெல்லி போன்றவர்கள் — புரட்சிவாதிகளாக இருந்தாலும் — சமுதாயத்தில் நம்பப்பட்டு வந்த கருத்துக்களையும் நம்பிக்கை களையும் எதிர்க்கும் புரட்சியாளர் (Revolutionary Iconoclasta) என்ற பெயர் பைரன் ஒருவருக்குத்தான் பொருந்தும் என்கிறார் புகழ் பெற்ற மற்றொரு ஆங்கில இலக்கிய வரலாற்றாசிரியர்.** பிரெஞ்சு புரட்சியின் விளைவும், தான் பெரிதும் போற்றிய நெப்போலியனின் வீழ்ச்சியும் பைரனைப் பாதித்தாலும் கடைசி வரை புரட்சிக் கொள்கைகளை அவர் கைவிடவில்லை. ஆங்கிலேய சமுதாயத்தின் போலித் தன்மை, அவர்களின் நடத்தைக் குறைவு, அவர்கள் வாழும் முறை போன்றவற்றை பைரனைப் போல் பெரிதும் எதிர்த்து எழுதியவர் இல்லை

* G. Wilson Knight, Byron and Shakespeare.
** W. H. Hudson, An outline History of English Literature.

என்றே கூறலாம். பிரபுக்களின் அவையில் (House of Lords) இடம் பெற்றிருந்தாலும் ஆங்கில அரசியல் அமைப்பு முறையில் நம்பிக்கை இல்லாமல் தனது கவிதைகள் முழுவதிலும் அவற்றைக் கடுமையாகச் சாடியுள்ளார். அரசர், மந்திரிகள் பிரபுக்கள் ஆகியயோரை பைரன் எண்ணற்ற பாடல் களில் ஏளனம் செய்துள்ளார். புரட்சிக்கவி என்ற கவிதையில் நாயகனை அரசியல் புரட்சி நடத்தும் கவிஞனாகப் பாரதி தாசன் சித்தரிப்பது போல் லாரா என்ற கவிதையின் நாயகனை அரசியல் புரட்சிவாதியாக படைத்துள்ளார் பைரன். தன்னாட்டு அரசியல் அமைப்பை — பிரபுக்கள் சபையை— கிண்டல் செய்து எழுதுகிறார். சீமாட்டி மெல் பொர்னுக்கும் எழுதும் பாடலில் கூறுகிறார்:

A King who can't a Prince of Wales who don't
Patriots who shouldn't and ministers who won't
What matters who are in or out of place
The Mad and bad, the Useless and Base.

செயலாற்ற முடியாத அரசன், செய்யாத இளவரசன்
செய்யக்கூடாத தேசப்பற்றாளர், செய்யவே மாட்டாத மந்திரிகள்
யார் எங்கிருந்தால் என்ன பயன்?
பைத்தியங்கள்; பாதகர்கள்; பயனற்றவர்கள்; கீழ்த்தரமானவர்கள்

தன் நாட்டில் அரசியல் புரட்சி வேண்டும் பைரன் இத்தாலியில், கிரேக்கத்தில் எழும் அரசியல் புரட்சிகளையும் பெரிதும் வரவேற்றுப் பாடியிருக்கிறார்.

புரட்சி என்பது சமுதாயப் புரட்சியென்றோ, அரசியல் புரட்சியென்றோ எந்தப் பெயரில் வந்தாலும் இரண்டுமே ஒரு ஏட்டின் இரண்டு பக்கம்; இரண்டு பக்கமும் ஒழுங்காக இருந்தாலே செல்லுபடியாகக் கூடிய நாணயம்.

பிரெஞ்சு நாட்டில், மக்கள் வெகுண்டெழுந்து அரசு அமைப்பையும் அதிகாரத்தையும் எதிர்த்துத் தகர்த்து அரசாள்ப வர்களைக் கொன்று அமைப்பை மாற்றியதையே புரட்சி என உலக வரலாறு கூறுகிறது. இத்தகு புரட்சி நெப்போலியன், லெனின், மாசேதுங் காலம் வரையே நடந்தது எனலாம்.

புரட்சி என்பது விடுதலை, சமத்துவம், சகோதரத்துவம் அடிப்படையில் அமையவேண்டும் என்றது முதல் புரட்சியை உருவாக்க உறுதுணை புரிந்த சிந்தனாவாதிகளின் எழுத்துக்கள்-

ஆனால் ஆன புரட்சிகள் அத்தனையும் கடைசியும் பிறகு மெள்ள மெள்ள இடைப்பட்ட சமத்துவத்தையும் அடுத்த கட்டமாக முதலும் ஆன விடுதலையையும் விலங்குகளுக்குள் சிறையிட்டதை உலக வரலாறு பலவாறாக நிரூபிக்கின்றது. இதனால் ஏற்படும் விரக்தியை, பாரதிதாசனைவிட பைரனிடம் அதிகம் காணலாம். பாரதிதாசன் காலம் தமிழகத்தின் எழுச்சியும், புத்துணர்வும் கொள்ளும் (Renaissance) என்பதால் அவர்தம் பாடல்களில் உத்வேகமும், உணர்ச்சியும், எழுச்சி மனப்பான்மையும் காணப் படுகிறது. ஆனால் அவர் காலத்திலே நடைபெற்றதுதான் ரஷியப் புரட்சியும் அதன் பின் லெனின் தலைமையில் எண்ணற்ற மாற்றங்களால் ரஷிய நாடு முன்னேறியதும்தான்.

ஆகவேதான்

ஓர் தமிழ் நாட்டில் உருசிய நாட்டையும்
உண்டாக்கித் தீர்த்திடலாம்
ஆர் செய்யும் பூச்சாண்டி இங்குப் பலித்திடும்
அடிமையும் தீர்த்திடலாம்

என்கிறார். மேலும் பன்மணித் திரளில்,

பல பாஷை ரஷ்யர்களின் பச்சை விடுதலையை
உலகோர் வியப்பதுணராயோ

என்று தன் பாராட்டுகளைத் தெரிவிக்கிறார்.

பாரதிதாசன் புரட்சியின் முதல் கட்ட வெற்றியைப் பாடு கிறார். பிரெஞ்சு புரட்சிக் காலகட்டம் கடந்த பல ஆண்டு கள் கழித்துப் பிறந்த அவர் காலத்தில் மாகாளி உருசிய நாட்டின் மீது கண் வைத்தாள் ஆக என யுகப்புரட்சி எழுந்து லெனின் ஆட்சியில் உருசிய நாடு அவர் விரும்பத்தக்க வண்ணம் ''பல பாஷை ரஷ்யர்களின்'' வாழ்வு சிறப்பதைக் காண்கிறோம். ஒரு தமிழ் நாட்டையும் உருசிய நாட்டையும் உண்டாக்கிடலாம் என ஆக்கபூர்வ ரீதியில் கவிதைகள் எழுதுகிறார்.

பிரெஞ்சு புரட்சிக்குப் பின் வீறு கொண்டெழுந்த நெப்போ லியனை மாபெரும் வீரனாக மானசீக குருவாக எண்ணி வாழ்ந்து வந்த பைரன் (தனது சொந்த சிறு கப்பலுக்கும் நெப்போலியன் என்றே பெயரிட்டிருந்தார்) நெப்போலியனது வீழ்ச்சியால் விரக்தியின் உச்ச கட்டத்திற்கே சென்றிருந்தார். ஆகவேதான் நெப்போலியன் மறைவு குறித்து அவர் எழுதிய பாடலில் விரக்தி தென்படுகிறது. மாறாக, பாரதிதாசன் காலத்தில் ரஷ்யப்புரட்சி

பெரும் வெற்றி பெற்று பிறகு லெனின் தலைமையின்கீழ் பொதுவுடைமை சித்தாந்தம் நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டு உலகத்தின் பெரும் சக்தியாக ரஷிய நாடு வளர, பாரதிதாசன் இந்தியாவும் மற்றொரு ரஷிய நாடாக மாறவேண்டும் என்று உத்வேகத்துடன் உற்சாகத்துடன்கூடிய உறுதியுடன் எழுதினார். லெனின் பற்றி அவர் எழுதிய பாடலுக்கும் நெப்போலியன் பற்றி பைரன் எழுதிய பாடலுக்கும்தான் எவ்வாறு வேறுபாடு!

லெனின் கற்றுக் கொடுத்தது:

மக்கள் வாழ்வின் மதிப்பு இன்னதென
ஒக்க வாழும் இறுதி இதுவென
முதிய பெரிய முழு நிலத்திற்கும்
புதியதாகப் புகட்டிய.........

மாறாக, பைரன் நெப்போலியன் புகட்டிய பாடம் எனச் சொல்வது:

Ill-minded man! Why scourge thy kind
Who bowed so low the knee
By gaying on thyself grown blind
Thou taughts't the rest to see
With might unquestioned—power to save
Thine only gift hath been the grave
To those that worshipped thee

கெட்ட எண்ணம் கொண்ட மனிதனே!
உன்முன் தலை வணங்கி
நின்றவர்கள் ஏன் தொல்லைப்படுத்தி
உன்னைப் பணிவுடன் பார்த்தே
குருடர்களாகிப் போன
அவர்களை நீ பார்க்க வைத்து
எதிர்க்க முடியாத வலிமை
உனது ஒரே பரிசு—சமாதி

கிட்டத்தட்ட அறுபத்து மூன்று ஆண்டுகள் வாழ்ந்த பாரதிதாசனை விட முப்பத்து ஆறு ஆண்டுகளே வாழ்ந்த பைரன்

காலத்தில் புரட்சி எழுந்தும் வீழ்ந்தும் பட்டது அவர்தம் மனதில் தோன்றிய விரக்தியைக் காட்டுகிறது. எனினும் புரட்சி புவி யெலாம் தோன்ற வேண்டுமென்ற அவர்தம் உத்வேகமும் உறுதிப் பட்ட எழுத்துக்களும் தொடர்ந்தே வந்தன. மேலும் பாரதி தாசன் காலத்தில் புரட்சியுடன் பொதுவுடைமைக் கருத்துக் களும் வலிவடைந்து புரட்சியின் மாற்றங்கள் பொதுவுடைமைச் சமுதாயம் மலர்ந்திட பெரிதும் துணை புரிந்தன. ஆனால் பைரன் காலத்தில் பிரெஞ்சு புரட்சியினால் ஏற்பட்ட மாற்றம் பெரும் ஏமாற்றத்தைத்தான் தந்தது. ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போரிட்டு ஏற்பட்ட புரட்சி ஒரு சர்வாதிகாரி காரத்தை வீழ்த்தப் போய் பலனாய் மற்றொரு சர்வாதிகாரம் ஏற்பட்ட பைரன் மட்டுமல்ல—அவன் காலத்திய கவிஞர்களான வோர்ட்ஸ்வொர்த், காலரிட்ஜ், ஷெல்லி, சதே போன்ற கவிஞர் களும் பிரெஞ்சு புரட்சியினால் ஏமாற்றமே அடைந்தனர்.

மாந்தருக்கும் சமயத்துக்கும் உள்ள தொடர்பின் தொடக்கமே இயற்கை வழி வந்தது எனலாம். மனித இனம் தன் இனத்திற்காக கட்டிக்கொண்ட கோட்டை இயற்கையின் அச்சுறுத்தலால் இறைவனைப் படைப்பித்து சமுதாயத்தை ஏமாற்றத் தோன்றிய இனிய கற்பனைச் சேர்க்கைகள்தான் நாம் காணும் மதங்கள் எனலாம். (இதில் பௌத்த மதம் தனித்து விளங்குவது ஆச்சரியப்படத்தக்கது!) இயற்கை சக்திகளின் சீற்றம், இயற்கை சக்திகளில் ஏற்படும் மாற்றம், அவற்றின் பெருமை, வலிமை, வளமை, வனப்பு—இவைகளினால் பாதிக்கப் பட்ட மனிதர்களில் புத்திசாலிகள் கற்பனையில் பிறப்பித்த கடவுளர் கதைகளில், காவியங்களில், நாட்டுப் பாடல்களில் இடம்பெற்று அதன் மூலம் வளர்ச்சி பெற்று வந்ததே இலக்கி யங்கள் எனலாம். இம்மாதிரி இலக்கியங்களின் பாதிப்பு சமயங் களின் வளர்ச்சிக்கும் சமுதாயத்தை வழி நடத்திச் செல்லவும் வழிவகுத்தன.

அறிவியல் மனிதனைச் சிந்திக்கவும், செயல்படுத்தவும் தோன்றியபோது பகுத்தறிவு வாயிலாக மனிதன் கேள்விகள் கேட்கத் தொடங்கியவுடன் சமய மறுப்பு, கடவுள் வழிபாடு எதிர்ப்பு, சமயக் கோட்பாடுகளை மீறுதல், சமயக் கருத்துக்களின் மூடத்தனத்தைச் சுட்டிக் காட்டுதல், சமயம் வழிவந்த வேறுபாடு கள்—சாதிப் பிரச்சினைகளைச் சாடுதல்—முதலான ஆக்க வழியில் உலகம் செல்ல முன் வந்தது.

பைரன் காலத்திய கவிஞர்களில் பலர் நாத்திகர்கள் என்றே அழைக்கப்பட்டனர். ஷெல்லி "நாத்திகன்" என்றே ஒருமுறை தன் பெயரை ஒரு குறிப்பில் எழுதினான். பைரன் ஒரு உண்மையான கிறித்தவர் அல்லர். கடவுளை வணங்காதவர்; நாத்திகர்; விவிலிய வேதங்களை நிந்தித்தவர். அவர்தம் நாடகமான **மேன்ஃப்ரெடு** என்ற கவிதையில் *கடவுளை மனித இன விரோதி என வாதாடும் சாத்தான் வாயிலாக பைபிளின் அடிப்படை உண்மைகளைக் கிண்டல் செய்கிறார். மத குருமார்களை வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் தமது கவிதைகளில் ஆங்காங்கே கிண்டல் செய்கிறார். பைரன் எழுதிய கவிதைகள் பரபரப்பாக படிக்கப்பட்டதற்கு முக்கிய காரணமே அவர் எழுதிய சமய எதிர்ப்புக் கருத்துக்கள்தான் என்றால் மிகையாகாது. அவரது **டான் ஜுவான், தீர்ப்பின் காட்சி, மேன்ஃப்ரெடு, கெய்ன் ஒரு மர்மம், சொர்க்கமும் பூமியும்** போன்ற சிறந்த காவியங்கள் அனைத்துமே கடவுள் எதிர்ப்பு, புராண இதிகாச கதைகளின் மூடத்தன்மையை விமரிசித்தல் கொண்டு விளங்குகின்றன. 'பைரன் நாயகன்' **(Byronic Hero)** என்றே வழங்கப்படும் சொற்றொடர் சமய எதிர்ப்பாளன், கடவுளை நிந்திப்பவன் என்றே பிற்காலத்தில் வழங்கப்பட வழிவகுத்தது பைரனது படைப்புகள் என்பது குறிப்பிடத்தக்கது.

"மத எதிர்ப்பு என்று பைரனின் **மேன்ஃப்ரெடு, கெயின்** காவியங்களில் நாம் காண்பதெல்லாம் கடவுள் என்ற கருத்து அவனுக்கு அநீதியாகவும் அதிர்ச்சி தருவதாக இருந்ததனாலும் என்பர்.

பாரதிதாசனின் பகுத்தறிவு வாதம், சமய எதிர்ப்பு, கடவுள் மறுப்பு ஆகியவையெல்லாம் சமுதாய பிரதிபலிப்பு என்று சொல்லலாம். தந்தை பெரியாரின் இயக்கம் தோன்றி வளர்ந்துவரும் காலகட்டத்தில் அந்த இயக்க வளர்ச்சியின் கவிதை நாயகனாக பாரதிதாசன் விளங்கினார். எனவேதான் சுப்பிரமணியர் துதி பாடிய பாவேந்தர், கடவுள் கல், கற்பனை, மதம் மயக்கம் தருவது, சுரண்டல்காரர்களின் சூழ்ச்சி, தமிழினம் வீழ்ந்ததற்கே தலையாகிய காரணம் என்றெல்லாம் எழுதி வந்தார்.

சமயத்தை ஒழிப்பதை சமுதாயப் புரட்சிக்கு வழிவகுக்கும் என்ற கொள்கையுடன் வாழ்ந்த பாரதிதாசன் மதத் தலைவர்களைக் 'கொடுந்தடியர்' என்கிறார். இந்துமதம் மட்டுமின்றி

---

* Marius Bewley (ed.) The English Romantic Poets.

கிறித்தவ மதத்தையும் சாடிடும் பாவேந்தர் கோவில் கூடாது என்பதை வள்ளுவர் சொல்லவில்லையே என்று சான்றுடன் சதிக் கிடங்கு என்று சாடுகிறார். அறிவிலான் படைத்த சாணி முண்டங்களாகிய கடவுள்கள் ஆரியர்கள் தமிழர்களை அடிமைப் படுத்த செய்த சதி என எழுதும் போதெல்லாம் குறிப்பிடுகிறார்.

சமயக் கருத்துக்களாகிய முக்தி, சொர்க்கம், ஆண்டவன், எல்லாம் அவன் செயல் முதலியன முட்டாள்தனமான நம்பிக் கைகள்; சமய நம்பிக்கை புல்லறிவின் பாற்பட்டது; சாத்திரங்கள் பேடி வழக்கங்கள், மூடத்தனம் ஆகிய பீடைகள் மறுபிறவி தரும் என்ற பிற்போக்கு கொள்கையை எடுத்து எறிவதுடன் முற்பிறவி மறுபிறவி என்ற மூடநம்பிக்கைகளை பழைய புராண வழங் களுடன் முற்றிலும் எரித்து விடவேண்டும் என்று வாதாடுகிறார் பாரதிதாசன்.

சுருங்கக்கூறின், பாரதிதாசன்தான் தமிழ் இலக்கிய உலகில் முதலும் முடிவுமாய் தோன்றிய முத்தமிழ் பகுத்தறிவுப் பாவலன் என்றால் மிகையாகாது.

பாரதிதாசனுக்கும் பைரனுக்கும் உள்ள மற்றொரு ஒற்றுமை இருவரும் சமயக் கருத்துக்களையும் கடவுளரையும் கடுமை யாகச் சாடினாலும் சமய இலக்கியங்களில் இருந்து கதைக் கருக்களையும் கதாபாத்திரங்களையும் எடுத்துக் கொண்டனர். அது அவர்களுக்கு அவர்கள் கொள்கைகளை விளக்கவும், பகுத்தறிவுவாதத்தைப் பரப்பவும் பெரிதும் பயன்பட்டது. கடவுள் இல்லையெனும் கவியரசர் பாரதிதாசன் கடவுள் கனவில் வருவதாகக் கூறுகிறார். மதத்தலைவன் பொருள் சேர்த்து இன்ப வாழ்க்கை வாழ்வதையும் கடவுளின் பெயரால் நடத்தும் காமலீலைகளும் கண்டித்தும் மடத்தின் உடமைகளை மக்கள் உடமை ஆக்கிவிட்டேன் என்று கூறுகிறார். அவரது சஞ்சீவி பர்வதத்தின் சாரல் கதை மூட நம்பிக்கையைச் சாடினாலும் அனுமன், சஞ்சீவிபர்வதம், மூலிகை விந்தை போன்ற நம்பிக்கை களின் வாயிலாக தம் பகுத்தறிவுக் கருத்துக்களைத் தெரிவிக் கிறார். அதேபோல் இரணியன் கதை, அகத்தியன் கதை மற்றும் தம் கதைகளின் வாயிலாகத் தம் சமய இலக்கியக் கருக்களைக் கொண்டு பகுத்தறிவுக் கருத்துக்களை எடுத்துரைப்பதைக் காணலாம். பைரனிடம் இந்தப் போக்குக் காணப்படுகிறது. மத இலக்கியங்களில் இடம் பெறும் கதை மாந்தர்களை வெகு வாகப் பயன்படுத்தி அவர்களின் மூலம் தனது நாத்திகவாதத்தை அவர் பரப்பி வந்தார்.பைரனிடம் சில கிறித்தவப் பண்புகள் காணப்

படுகின்றன என்று வெகுவாக வாதாடும் ஒரு ஆய்வாளர்கூட "மதப் பழக்க வழக்கங்களை ஒரு ஆத்திக பக்தனைப் போல் பைரன் எழுதவில்லை. மாறாக அவைகளுடன் சொந்தமாக நிறையச் சேர்த்தும் கடவுளின் எதிரியான லூசிஃப்ரை மையமாகக் கொண்டு மேலே எழுதுகிறார்" என்று கூறுகிறார்*.

மனித இயற்கை ஈடுபாட்டில் காணப்படும் ஒரு சுவையான செய்தி இயற்கையைப் பாடிடும், இயற்கை அழகுப் பொருள்களின் ஈடுபாட்டினால் தன்னை மறந்து கவிஞர்கள் பாடிடும் கவிதைகளில் காணலாம். கடவுள் இல்லை என்று ஆணித்தரமாக எடுத்துக் கூறிடும் நாத்திகக் கவிஞர்கள் இயற்கையில் ஆழ்ந்து இயற்கை சக்திகளைப் பாட எத்தனிக்கும்போது இயற்கை சக்திகளின் பின்னே—இயற்கைப் பொருட்களின் காட்சிகளில் காணப்படும் வலிமை, இனிமை, அழகு ஆகியவை உருவகிக்கப் பட்டு, வடிவம் தரப்பட்டு, வழிபடப்பட்டோ, வாழ்த்துப் பெறப் பட்டோ விளங்குவதைக் காணலாம். இதைக் கடவுள் வழிபாடு என்று சொல்ல முடியாது. உருவ அல்லது தோற்ற வழிபாடு எனலாம்.

"எங்கெங்குக் காணினும் சக்தியடா" என்று பாடத் தொடங்கி, பிறகு ஒரு நிரந்தரமான நாத்திகனாய் மாறிய பாரதிதாசன் கவிதைகளில் இயற்கையின் வெளிப்பாடுகள் உருவகப் படுத்திப் போற்றப்படுவதைக் காணலாம். இயற்கை நலம் பாடப் படுவதற்கே கவிதைகள் புனைந்தாலும் இயற்கையை ஊடுருவிப் பார்த்தபோது இவ்வண்ட கோளங்களின் ஆழ்ந்த இயற்கையில் ஒரு "சக்தி" "ஆன்மா" "அழகு" எனப் பெயரிடப்படும் ஏதோ ஒன்று இருப்பதை ஆங்கிலப் புதுநெறிப் பாவலர்கள் சுட்டிக் காட்டுகின்றனர். இதனை கிறித்தவ மதநெறியினர் அவர்கள் மத நம்பிக்கை இல்லாதவர்கள் (Heathens) என்றும். மற்றவர்கள் கடவுள் இங்கும் அங்கும் எங்கும் எல்லாப் பொருள்களில் இருக்கிறார் என்ற நம்பிக்கை (Pantheism) வழிப்பட்டது என்றும் பிளேட்டோனிசம், இந்து நம்பிக்கை என்றும், அத்வைதம் என்ற நிலை—என்று எவ்வளவுதான் விளக்கங்கள் அளித்தாலும் ஒரு புரியாத புதிராகவே உள்ளது. கடவுள் இருக்கிறாரோ இல்லையோ ஆனால் "கற்பனை"க்கும் ஒரு 'கடவுள் கருத்துக்கும்" தொடர்பு உள்ளது என்பதை நாம் மறுப்பதற்கில்லை.

---

* G. Wilson Knight, Byron and Shakespeare,

பாரதிதாசனின் அழகின் சிரிப்பில் இம்மெய்யுணர்வைக் காண்கிறோம். எங்கெங்குக் காணினும் நீக்கமற நிறைந்து காணப்படும் சக்தி—அழகு—என்ற வடிவெடுத்து அனைத்திலும் சிரிப்பதை, ஆடுவதை, ஓடுவதை, ஒளிவதைக் காணலாம்.

தென்றலின் அசைவைப் பாடும் பாவேந்தர்,

உன் அருள் உருவம் காணேன்
 ஆயினும் உன்றன் ஒவ்வோர்
சின்ன நல்அசைவும் என்னைச்
 சிலிர்த்திடச் செய்யும்

என்கிறார். ஞாயிற்றைச் "சுடர்க்கோமான்" என்கிறார். அழகு, பெண் வடிவில் பாவேந்தர் கவிதைகளில் இடம் பெறுகிறது.

இத்தன்மை பைரனின் கவிதைகளில் மிகுதியாகவே காணப் படுகிறது. ஏசு கிறிஸ்து என்ற பெயர் அவர் எழுத்துக்களிலோ பேச்சுக்களிலோ தோன்றியது இல்லை. ஆனால் சக்தி (Power) அவர் இயற்கைப் பொருட்களில் அடிக்கடி காண்பதையும் போற்றுவதையும் காண்கிறோம். இயற்கையின் வெல்லமுடியாத வலிமை, அதன் வியத்தகு விரிவுபட்ட தன்மை முதலியனவற்றை பைரனைவிட அதிகம் பாடியவர் இல்லை எனலாம். "சுடர்க் கோமான்" பைரனைப் பொறுத்தவரை இறைத்தன்மையின் குறியீடாகவே காணப்படுகிறது. அப்போலோ (Apollo) என்ற வேத வடிவில் பைரன் போற்றுவதைக் காணலாம். அவரது சைல்டு ஹெரால்டின் நான்காவது பிரிவினிலே கூறுகிறார்.

Or, view the Lord of the unerring bow
The God of life and poesy and light

...உலகக் கோமானின் குறிதவறா வில்லைப் பாராய்

என்றும்,

வாழ்வு, கவிதை, ஒளி—இவைகளின் கடவுள்

என்கிறார்.

இதனால் பாரதிதாசனோ அல்லது பைரனோ தெய்வமாக இயற்கையை அடிமனதில் தொழுதவர்கள் என்றோ கடவுள் இருப்பை இயற்கையில் கண்டு தெரிந்து அதனை அவர் களை அறியாமல் வெளிப்படுத்தி விட்டனர் என்பது சரியாகாது. மாறாக—மாந்தர்க்கும் (கவிஞர்கள்) சமயம் அல்லது

இயற்கைக்கும் உள்ள தொடர்பு என்ற ரீதியில்—நோக்கும்போது கவிஞர்கள்—கற்பனா சக்தியினால்—மொழி, இன எல்லைகளைக் கடந்த ஒரு சமயத்தைச் சார்ந்தவர்கள் எனலாம். தாகூர் "கவிஞர் சமயம்" (Poet's religion) என்ற சொற்றொடரைப் பயன்படுத்தியுள்ளார். இந்த சமய வழிபட்ட கவிஞர்கள் போற்றும் இறைத்தன்மை ஆத்திகம், நாத்திகம் என்ற எல்லை களைக் கடந்த ஒன்று எனக் கொள்ளலாம். இறை வடிவைப் போற்றும் கவிஞர்களின் மனம் — கற்பனைதான் — இறைத் தன்மையைப் படைக்கிறது. மற்றபடி நாம் பொருள் கொள்ளும் "கடவுள்" வேறு. பைரன் இந்த இறைவனை காணவேயில்லை.

Oh! Love no habitant of earth thou art
An unseen Seraph, we believe in thee
A faith whose martyr are the broken heart
But never yet hath seen nor e'er shall see
The naked eye, thy form as it should be
**The mind hath made thee**: as its people heaven
Even with its own...

ஓ, நீ இந்த உலகத்தில் வசிக்காத 'அன்பு' நீ!
காணாத தேவன்! உன்னை நம்புகிறோம்!
உடைந்த இதயம்தான் உன் பக்தியினால் விளைவது,
யாரும் பார்த்ததில்லை; யாரும் கண்களினால்
உன் உண்மை வடிவை காணப் போவதில்லை;
மனம்தான் உன்னை உருவாக்கியது! அதுவே
சொர்க்கம் மற்றும் அதில் வாழ்வோரையும் உருவாக்கியது.

# III

இரு வேறுபட்ட மொழி இலக்கியங்களை ஒப்பீட்டுக்கு மேற் கொள்ளும்போது அவ்விலக்கியங்களில் இடம்பெறும் சமுதாயப் பிரிவினர், பல்வேறு வகுப்புகளைச் சார்ந்த மாந்தர், இடம் பெறும் நிகழ்ச்சிகள் அவற்றை இலக்கியவாதிகள் வெளிப் படுத்தும் முறை, பழங்கதை வரலாறு மற்றும் நாட்டுப்

பாடல்களில் இடம்பெறும் பாத்திரங்களின் தாக்கம் முதலியன வற்றை ஒப்பிட்டு ஆய்வது தலை சிறந்த முறையாகும்.

ஐரோப்பிய ஒப்பியல் ஆய்வாளர்களின் இது குறித்த கருத்துக்கள் ஆராயத்தக்கன. மனித மனம் பொதுவான வழி களிலே அனுபவங்களை வெளிப்படுத்துகின்றன. யங் (Jung) என்ற உளவியல் அறிஞர் இவைகளை மூலக்கூறுகள் (Archetypes) என்கிறார். உள்ளடங்கிய அமைப்பு (innate structures) என்பது கார்டீஸியன் (Cartesian) கருத்தாகும். பொதுமைகள் (Universals) என்று மொழியியல் வல்லுநர் குறிப்பிடுகின்றனர்.

சில அரிய உண்மைகள் இம்முறை ஆய்வில் வெளிவருவதைக் காணலாம். சான்றாக, சிர்முன்ஸ்டி (Zhirmunsty) என்பவர் கதைத் தலைவர் என்ற கருத்தை ரஷ்யப் பாடல்களிலும் பிரெஞ்சு பாடல்களிலும் கண்டு ஒப்பிட்டு இவ்விரு சமுதாய அமைப்புகளில் உள்ள ஒற்றுமைகளை விளக்குகிறார். ஆர்தர் ஹட்டோ (Arthur Hatto) எனபவர் காதலர்கள் இரவில் சந்தித்து விடியலில் பிரியும் கவிதைப் பொருளை ஆய்ந்து இக்கரு பழங்கால, நவீன, மேற்கத்திய, சீன இலக்கியங்களில் கவிஞர்களால் ஒன்று போலவே கையாளப்படுவதை சுட்டிக்காட்டுகிறார்.

குறிப்பிட்ட குணநலன்களையும் சமுதாயக் கூறுகளையும் குறிக்க பாரதிதாசனும் பைரனும் கையாளும் முறைகளைக் காண்போம்.

சூழ்ச்சி, சூது மதியைக் குறிப்பிட பார்ப்பனர், அந்தணர், என்று பாத்திரங்களைப் படைத்தவர் பாரதிதாசன். அதனாலேயே இன்றுவரை அவரை ஜீரணம் செய்துகொள்ள முடியாத அல்சர் வியாதி பலரையும் பீடித்துள்ளது. பொதுவுடைமைப் புரட்சியில் பூர்ஷுவா என்ற சொல் ஆதிக்க மனப்பான்மையை சுரண்டல்காரர்களை எதிர்க்கப் பயன்பட்டது போல் பார்ப்பனர் என்ற சொல் பாரதிதாசன் பாடல்களில் பரவலாகப் பயன்படுவதைக் காண்கிறோம். இதைப்போல் பைரன் சீமான், பிரபு சீமாட்டிகள் பாத்திரங்களைச் சித்தரிக்கிறார். உயர்சாதி என அழைக்கப்பட்டோர்கள்மீது பாரதிதாசன் கொண்ட வெறுப்பு உயர்குடியினர் என வாழ்ந்துவந்த பிரபுத்துவ மாந்தர்மீது பைரன் கொண்டதும் ஒன்றாகவே காணப்படுகிறது. பாரதிதாசனின் காழ்ப்புணர்ச்சிக்கு ஒரு வரலாற்றுப் பின்னணியும்—திராவிட இயக்க வளர்ச்சியினால்—காணப்படுவதால் பாரதிதாசனின் பார்ப்பனர் எதிர்ப்பு சமுதாயத்தின் குரலாக எதிரொலிக்கிறது.

சூழ்ச்சியைக் குறிப்பிட நரி காலங்காலமாக பயன்படுத்தப் பட்டு வந்ததைப் போல் சூதுமதியாளர் என்று பிராமண இனத்தவரைக் குறிப்பிடும் பாரதிதாசன் நரித்தனம் என்ற சொற் றொடரை அடிக்கடி பயன்படுத்தியுள்ளார். நரிக்கண்ணன் என்ற பெயரிலேயே ஒரு கதாபாத்திரத்தையும் உருவாக்கியுள்ளார்.

இம்மாதிரியான உருவகங்கள் பைரனிடமும் காணப் படுகின்றன. நெப்போலியனை சிங்கத்துக்கு ஒப்பிடும் பைரன் எதிரிகளை ஓநாய்களுக்கு (Wolves) ஒப்பிடுகிறார். வீரத்திற்கு சிங்கமும் நயவஞ்சகத்துக்கு ஓநாய், நரி போன்றவையும் இவ்விரு கவிஞர்களிடம் மட்டுமல்ல—பொதுவாக உலகளாவிய இலக்கியங்கள் அனைத்திலும் சில பொதுவான உருவகங்கள் அமைந்திருப்பது ஆராயத்தகுந்த மானுடவியல் ஆய்வு (Aothropo-logical Study).

குறிப்பிடத்தக்க வேற்றுமை ஒன்று:

பாரதிதாசனையும் பைரனையும் இரு வேறுபட்ட மனை நிலை உள்ள கவிஞர்களாகக் காட்டுகிறது. பெண் விடுதலை, பெண் கல்வி, பெண் முன்னேற்றம் போன்ற சமுதாய எழுச்சிப் பாதை அமைப்பதில் ஆர்வம் காட்டியவர் பாரதிதாசன். அவர் படைத்த புரட்சித் தன்மை வாய்ந்த படைப்பு மாந்தர் களில் பெண்களுக்கே முதலிடம் அளிப்பதைக் காணலாம். அவரது தலைமை மாந்தர்களில் பெண் மாந்தர்களே எல்லா வகையிலும் உயர்ந்தோராக விளங்குகின்றனர். வஞ்சி, அமுதவல்லி, வீரத்தாய், விசயா, கிள்ளை, தமிழச்சி, வீரம் கொண்ட சுப்பம்மா என அனை வருமே ஆண்களைவிட அறிவிலும் வீரத்திலும் சிறந்து விளங்கு கின்றனர்.

# 3. பாரதிதாசனும் வால்ட் விட்மனும்

**மா. கோதண்டராமன்**

உலகமெல்லாம் இலக்கிய ஒப்பாய்வுப் பார்வை வளர்ந்து கொண்டு வருவதை நாமறிவோம். பல்வேறு மொழிகளில் படைக்கப்பட்ட இலக்கியங்களை ஒப்பியல் முறையில் ஆய்வு செய்வது ஒரு கலையாக வளர்க்கப்பட்டு வருகிறது. மொழிகளுக் கிடையே ஒப்புமைக் கூறுகளை ஆய்ந்து வெளியிடும் கலை வளர்ந்த பிறகு இலக்கியங்களுக்கிடையே காணப்படும் பொதுக் கூறுகளையும் சிறப்புக் கூறுகளையும் ஒப்பீட்டு முறையில் ஆய்வு செய்வது தேவையாகக் கருதப்பட்டது. பிரெஞ்சு மொழியினரும், ஜெர்மானிய மொழியினரும் அமெரிக்கரும் இக்கலையில் முன்னேற்றங்கண்டுள்ளனர். ஒப்பீட்டு முறையால் இலக்கியங் களை முழுமையாகச் சுவைப்பதோடு அவற்றிடையே ஊடுருவி நிற்கும் மானுட நேயத்தை அறிந்து கொள்ளவும் முடிகிறது.

இந்த அடிப்படையில் வால்ட் விட்மனையும் பாரதிதாசனை யும் ஆய்வுக்கு எடுத்துக் கொண்டுள்ளோம். வால்ட் விட்மன் அமெரிக்க மக்களின் பிரதிநிதியாகக் காட்சியளிக்கிறான். பாரதிதாசன் தமிழகத்தின் பிரதிநிதியாகத் திகழ்கிறார். அவர் தம் காலத்தே கண்ட உண்மைகளை ஒளிவுமறைவின்றி எடுத்து ரைப்பதில் இருவரும் இணையானவர்களே. மக்களைப் புரட்சிப் பாதைக்கு இட்டுச் சென்றதால் இருவருமே அவரவர் நாட்டு மக்களால் புரட்சிக் கவிஞர் என்றே அழைக்கப் பெறுகின்றனர். விட்மன் காலம் *(31-5-1819 — 26-3-1892)* பத்தொன்பதாம் நூற்றாண்டு. பாரதிதாசன் *(29-4-1891 — 21-4-1964)* இருபதாம் நூற்றாண்டு. வால்ட் விட்மன் பழுத்த பழமாகிப் பயணத்தை முடிக்கின்ற போது பாரதிதாசன் அரும்பாக அடியெடுத்து வைத்தார். எழுபத்து நான்காண்டுகள் அமெரிக்க மண்ணில் ஆடிப்பாடிக் களித்தவன் வால்ட் விட்மன். எழுபத்து மூன்றாண்டுகள் தமிழ் மண்ணில் நடைபோட்டவர் பாரதிதாசன்.

வால்ட் விட்மன் அரேபிய இரவுகள் என்னும் கதைகளிலும் வால்டர் ஸ்காட் கவிதைகளிலும் ஸ்கான்டிநேவியன் நாட்டுப் புறப்பாடல்களிலும் நெஞ்சைப் பறிகொடுத்தவர். ஹோமரின் காவியங்களும் ஷேக்ஸ்பியரின் நாடகங்களும் அவருக்கு மிகவும் பிடித்த இலக்கிய விருந்துகள்*. பாரதிதாசன் குமரகுருபரரின் கொஞ்சு தமிழிலும் வளஞ்சார் சங்கத் தமிழிலும் நெஞ்சைப் பறி கொடுத்தவர். மண்ணையும் மக்களையும் பாடுவதில் இவர்கள் இணையற்றவர்கள். மண்ணின் அணுவெல்லாம் சமம் எனப் பாடிக் களித்தவர்கள் வால்ட் விட்மனும் பாரதிதாசனும்.

வால்ட் விட்மன் குடும்பச் சூழலால் பள்ளிக் கல்வியை இடையிலேயே விட்டு விட்டுப் பல்வேறு பணிகளில் ஈடுபட்டுப் பெறற்கரிய அனுபவங்களைப் பெற்று அமெரிக்காவின் வளமிக்க வாழ்வுக்கும் எழில் மிக்க வாழ்வுக்கும் பாட்டுத்திறத்தாலே வழிகாட்டினார். புதுவையில் பிறந்து மக்களோடு இரண்டறக் கலந்து பழகியவர் பாரதிதாசன். இருவரும் தாய்மொழிப் பற்றில் திளைத்தவர்கள். மானுட நேயத்தின் மாண்புறு தூதுவர்கள். ஏழை எளிய மக்களின் வாழ்வும் வளமும் மேன்மையுற வேண்டு மெனச் சபதமேற்றவர்கள். காலத்தாலும் இடத்தாலும் மொழியாலும் வேறுபட்டவர்கள் என்றாலும் எடுத்துக் கொண்ட பாடுபொருளில் ஒன்றுபட்டவர்கள்.

மேன்மக்கள் ஒன்று போலவே எண்ணுகிறார்கள் (Great men think alike) என்னும் பொருளுரை இந்த இருவர்க்கும் கூடப் பொருந்துவதாகும். இருவரும் புரட்சிக் கருத்துக்களை மக்களி டையே பரப்பியவர்கள். விட்மன் பாடுபொருளிலும் வடிவிலும் புரட்சி செய்தார். பாரதிதாசனோ பாடுபொருளில் புரட்சியை ஏற்றுக் கொண்டார்; வடிவில் மரபையே பின்பற்றினார். பழைய மொந்தையில் புதிய கள்ளை ஊற்றிக் கொடுத்தார் பாரதிதாசன். இருவருடைய எண்ண அலைகளை ஆய்வதன்றி வண்ண மாலைகளை வகைப்படுத்துவது நம் பணி அன்று. இருவரும் சத்தியத்தின் நிழலமர்ந்து சமத்துவத் தென்றலில் திளைத்துப் பொதுமைப்பண்பாடும் புதுக்குயில்களாகவும் புரட்சிக் குயில்களாகவும் காட்சியளித்தனர். வாடிக் கிடக்கும் கோடிக் கணக்கான மக்களுக்கு உரிமை கீதம் பாடிக் காட்டியவர்கள்; காலம் மாறினாலும் வாழ்வியல் சித்தாந்தம் மாறி னாலும் கூனிக் கிடக்கும் மானுடத்தை நிமிர்த்த முயன்ற

* வால்ட் விட்மன் ஓர் அறிமுகம், ப. சுப்பிரமணியன், ப. 18.

முரட்டுக் கவிஞர்கள்; மூடத்தனத்தின் முடைநாற்றம் வீசுகின்ற காடு மணக்க வந்த காட்டாற்றுப் பூந்தென்றல் கவித் தேரோட்டிகள்.

கவிதை உலகில் புதுப் புரட்சியைக் கற்பனைக்கு எட்டாத மூர்க்கத்தோடும் வேகத்தோடும் கொண்டு செலுத்தியவர்கள். மரபுக் கவிதைத் தளையில் சிக்குண்டு திணறிக் கிடந்த இலக்கி யத்தைச் சிறைமீட்டுத் தென்றல் வானில் விடுதலைப் பண்பாட வழிகாட்டியவர் வால்ட்விட்மன். வால்ட் விட்மன் அமெரிக்கக் கவிதை வானில் சிறகடித்துப் பறக்க முயன்றபோது மரபு மேகத் திரைகளின் வலிய கரங்களில் அகப்பட்டு மாண்டு மடிந்து போகாமல் பாதுகாத்து அரவணைத்தவர் எமர்சன். எமர்சனின் துணிச்சலான பாராட்டுரை விட்மனுக்குக் கிடைக்காமல் போயிருந் தால் விட்மன் பசும்புல் போர்த்திய கல்லறையில்தான் கண் வளர்ந்திருப்பார். எமர்சனின் பாராட்டுரையால் கவிதைத் தேனாற்றங்கரையில் மானுடத்தின் மகோன்னத வெற்றியை வீறாப்புடன் திசையெல்லாம் பரப்பியவர் விட்மன். புதுவைக் குயிலாய் உலா வந்த சுப்புரத்தினம் பாரதியின் அறிமுகத்தால் தமிழுலகின் வானம்பாடியாய்ப் பவனி வந்தார். வால்ட் விட் மனின் புல்லின் இதழ்கள் (Leaves of Grass—1855) புரட்சியின் புது வடிவம்; புதுயுகத்தின் கவர்ச்சிமிக்க புது விடியல். புல்லின் இதழ்கள் என்னும் கவிதை நூலைப் பற்றி R. W. எமர்சன் வரைந்த புகழ் பூத்த பாராட்டுரையை அப்படியே காண்போம்:

"I am not blind to the work of the wonderful gift of 'Leaves of Grass'. I find it the most extraordinary piece of wit and wisdom that America has yet contributed.........I have great joy in it. I find incomparable things said incomparably as they must be. I find the courage of treatment that so delights us and which large perception only can inspire."*

இந்தப் புதுமைப் படைப்பைப் படிக்க முயன்றபோது அவருடைய கண்களை அவராலேயே நம்ப முடியாத நிலை ஏற்பட்டதாம்.

"I rubbed my eyes a little to see if this sunbeam were no illusion but the solid sense of the book is a sober certainity. It has the best merits namely of fortifying and encouraging."

---

* A. N. Dwivedi, Walt Whitman, p. 43.

பாரதியாரும் வால்ட் விட்மனின் புதுக்கவிதையில் நெஞ்சைப் பறி கொடுத்திருக்கின்றார். "குடியாட்சி, ஜனாதிகாரம் என்ற கொள்கைக்கு மந்திர ரிஷிகளில் ஒருவராக இந்த வால்ட்விட்மனை ஐரோப்பிய ஜாதியர் நினைக்கிறார்கள். எல்லா மனிதரும் ஆணும் பெண்ணும் குழந்தைகளும் எல்லாரும் சமானம் என்ற சத்தியத்தைப் பறையடித்த மஹான்களில் இவர் தலைமை யானவர். இந்த மஹான் ஒரு நகரம் கற்பனை பண்ணுகிறார். அந்த நகரத்தில் ஆணும் பெண்ணும் சபதத்தில் துஞ்சார். அங்கே அடிமையில்லை; ஆண்டையுமில்லை. அங்கே பெண்கள் வீதிகளில் ஆண்களைப் போலவே கூட்டங்கூடி ஊர்வலம் வருகிறார்கள்."* இங்கே பாரதியார் விட்மனை ரிஷி என்றும் மஹான் என்றும் போற்றுகிறார் என்றால் விட்மனின் ஆற்றலை என்னென்று சொல்வது?

வால்ட் விட்மன் இல்லறம் ஏற்காமல் பெண்கள் அளித்த சிற்றின்பங்களில் திளைத்தவர். இல்லறம் ஏற்று நல்லறம் கண்டவர் பாரதிதாசன்.

### தன்னில் உலகம்

புல்லையும் பெருமை படுத்திய விட்மன் மானுடத்தில் தன்னை ஐக்கியப் படுத்திக் கொள்ளும் பாங்கினை,

நான் பரந்துபட்டவன்; எல்லாருள்ளும்
நானே இருக்கின்றேன்.

(I am large; I contain multitudes)**

பாரதிதாசனும் மக்கட் சமுத்திரத்தில் ஒவ்வொருவரையும் சங்கமமாக்குமாறு கேட்டுக்கொள்கிறார்.

என்குலம் என்றுனைத் தன்னிடம் ஒட்டிய
மக்கட் பெருங்கடல் பார்த்து மகிழ்ச்சிகொள்
அறிவை விரிவுசெய் அகண்ட மாக்கு
விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை
அணைந்துகொள் உன்னைச் சங்கம மாக்கு
மானிடசமுத்திரம் நானென்று கூவு.***

---

* க. கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம், ப. 292.

** Leaves of Grass, p. 50, Stanza 51, Line 8.

*** பாரதிதாசன் கவிதைகள், ப. 50

## குடியாட்சியும் சம உரிமையும்

வால்ட் விட்மன் காலத்தில் மக்களாட்சிக் கொள்கையும் சம உரிமை சிந்தனையும் மேலை நாடுகளில் உரம் பெற்றுப் பரவத் தொடங்கியது. இச்சிந்தனைகளில் உளந்தோய்ந்த விட்மன் தன் புல்லின் இதழ்கள் என்னும் நூலில் இக்கருத்தை ஆங்காங்கே பாடிச் செல்கிறார்.

பாரதிதாசனும் மக்களாட்சியின் மாண்பினைப் பரக்கப் பேசுகிறார். அடிமைத் தளையில் அகப்பட்டு அல்லல் உற்ற இந்திய மக்கள் மனங்களில் மக்களாட்சியின் மாண்புகள் படிவது கடினமாக இருந்த காலத்தில் பாரதிதாசன் மக்களாட்சியின் மாண்பினைப் போற்றிப் பாடியுள்ளார்.

செல்வமெலாம் உரிமைஎலாம் நாட்டாருக்கே*

எனப் புரட்சிக்கவியில் முடியாட்சி குடியாட்சியாக மாறிய புதுமையை அழகுற விளக்குகிறார்.

எல்லார்க்கும் தேசம் எல்லார்க்கும் உடைமையெலாம்
எல்லார்க்கும் எல்லா உரிமைகளும் ஆகுகவே
வில்லார்க்கும் நல்ல நுதல் மாதர் எல்லார்க்கும்
விடுதலையாம் என்றே மணிமுழக்கம் ஆர்ப்பீரே**

என வீரத்தாயில் விளக்குகிறார்.

பேரிகை என்னும் தலைப்பில் இன்பம், க்ஷேமம், செல்வங்கள் எல்லார்க்கும்*** பொதுவென்று பேரிகை கொட்டுமாறு ஆணை இடுகிறார்.

இதைப்போலவே விட்மனும் மக்கள் வாழ்க்கை மேன்மையுற வேண்டுமானால் குடியாட்சியே பொருத்தமானது எனப் பாடுகிறார். விட்மன் என்று சொல்லும் போதே குடியாட்சியின் காவலன் என்னும் நினைப்பு அனைவர் நெஞ்சிலும் தோன்றி விடுகிறது. அவரைக் குடியரசுக் கவிஞர் என்றே அமெரிக்கர் அழைக்கின்றனர்.****

---

* பாரதிதாசன் கவிதைகள், முதல் தொகுதி, ப. 35

** மேலது, ப. 50

*** மேலது, ப. 132.

**** A.N. Dwivedi, Walt Whitman, p. 61

One's self I sing, a simple separate person
Yet utter the word Democratic the word En-masse*

மேலும் விட்மன்,

The Female equally with the male I sing

எனப் பெண்கள் ஆண்களோடு சமம் என்பதை உறுதியோடு எடுத்துக் கூறுகிறார்.

விட்மன் மேலும் கூறுவார்:

நானோர் பெண்களின் கவிஞர்
அதைப் போலவே ஆண்களுக்கும்
பெண்மை பெரிதென்பேன் அதைப்போலவே
ஆண்மையும் பெருமைதான்
எல்லாவற்றையும் விடத் தகைசால் பெருமை
தாய்மைக்கே என்பேன்.

(I am the poet of the women the same of the man
And I say it is as great to be a woman as to be a man
And I say there is nothing greater than the mother of man)

கடல்

வால்ட் விட்மனும் பாரதிதாசனும் கடலோர நகரங்களில் தான் வாழ்ந்தார்கள். எல்லையற்ற பெருங்கடலைக் கண்டு கண்டு தொல்லை மறந்தவர்கள் அவர்கள். இயற்கையன்னையின் எழிலார்ந்த படைப்புகளில் மனந்தோய்ந்த கவிஞர்கள் கடலின் வனப்பையெல்லாம் அழகுறப் பாடியுள்ளனர். விட்மன் ஒருபடி மேலே போய் கடலே என் தாய் என்பது போலப் பாடியுள்ளார்.

The boundless blue on every side expanding
With whistling winds and music of the waves, the large
imperious waves.**

* Ibid p. 62

** Ibid p. 73

பாரதிதாசனோ,

ஊருக்குக் கிழக்கே உள்ள
பெருங்கடல் ஓர மெல்லாம்
கீரியின் உடல்வண் ணம்போல்
மணல்மெத்தை அம்மெத்தைமேல்
நேரிடும் அலையோ கல்வி
நிலையத்தின் இளைஞர் போலப்
பூரிப்பால் ஏறும்; வீழும்
புரண்டிடும் பாராய் தம்பி. *

எனப் பாடுகிறார்.

**காதலும் பாலுணர்வும்**

கவிஞர் என்றாலே காதலைப் பாடாமல் இருக்க முடியாது என்னும் கூற்று பெரும்பாலும் உண்மையே. அமெரிக்கப் புரட்சிக் கவிஞரும் தமிழ்ப் புரட்சிக் கவிஞரும் காதலைப் பாடாமல் விட்டதில்லை. பாரதிதாசனின் காதல் பாடல்கள் யாவும் செந்நெறி இலக்கியச் சாயல் கொண்டவை. அளவு மீறிய காதலுணர்வையும் நாகரிக மொழியில் எடுத்துரைக்கும் பக்குவம் பாரதிதாசனிடம் நிறைய உண்டு.

காதற்குற்றவாளிகள் என்னும் தலைப்பில் சுந்தரம் சொர்ணம் பார்வையில் அரும்பிடும் காதலைப் பாடும் பாரதிதாசன்,

பாடம் படித்து நிமிர்ந்த விழி—தனிற்
பட்டுத் தெறித்தது மானின் விழி
ஆடை திருத்தி நின்றாள் அவள்தான்—இவன்
ஆயிரம் ஏடு திருப்புகின்றான்**

என இளைஞனின் காதல் தடுமாற்றத்தை எழிலுறப் பாடுகின்றார்.

குடும்பவிளக்கில் ஒருபாடல். தலைவனும் தலைவியும் பெறும் உடலின்பம் காலங்கடந்தாலும் சுவைத்திருக்கும் எனச் சொல்ல வரும் பாரதிதாசன்,

---

* அழகின் சிரிப்பு, ப. 6

** பாரதிதாசன் கவிதைகள், முதல் தொகுதி

அன்றிலடி நாமிருவர் பழமும் பாலும்
ஆருக்கு வேண்டுமடி என்றன் ஆசைக்
குன்றத்திற் படர்ந்த மலர்க் கொடியே மண்ணில்
குவிந்திருக்கும் சுவையுள்ள பொருள்கள் எல்லாம்
ஒன்றொன்றும் மறுநாளே பழமை கொள்ளும்
ஒன்றொன்றும் சிலநாளில் தெவிட்டிப் போகும்
அன்றன்று புதுமையடி தெவிட்டலுண்டோ
ஆருயிரே நீ கொடுக்கும் இன்பம் என்றான்*

எனப் பாடுகிறார்.

அறிதோறு மறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு

என்னும் குறளுக்கு விளக்க உரையாகப் பாவேந்தர் பாடியுள்ள திறம் வியந்து போற்றுதற்குரியது.

காதலைப் பாடுவதில் விட்மன் ஒரு அளவில் நிற்கவில்லை; பச்சையாகவும் கொச்சையாகவும் பாடி விட்டார். இலைமறை காய்போல் இருக்க வேண்டிய காதல் செய்திகளை அப்பட்டமாகப் பாடியதால் சிலரின் சினத்திற்கு ஆளானார். மலரினும் மெல்லிய காதலுணர்வை மிகவும் கொச்சையாக வெளிப்படுத்திய காரணத்தால் புல்லின் இதழ்கள் (Leaves of Grass) என்னும் கவிதை நூல் காமப்பசியைக் காட்டுமிராண்டித் தனத்திற்கு இட்டுச் செல்லக் கூடுமென அறிஞர்கள் அஞ்சினர். மானுடத்தின் நிலைபேற்றிற்கு வலிவூட்டுவதே பாலுணர்வுதான் என்பது விட்மனின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும். பாலுணர்வு முழுமை பெறாதபோது மற்ற சுகங்கள் சுகமாகத் தெரிவதில்லை. இன்னும் ஒருபடி மேலே சென்று ஆத்மதிருப்தியும்கூடப் பாலுணர்வின் பூரணத்தில்தான் அமையும் என்கிறார் விட்மன்—எனக்காக ஒருத்தி காத்திருக்கிறாள் (A Woman Waits for Me) என்னும் கவிதையில்.

ஒருத்தி எனக்காகக் காத்திருக்கிறாள்
அவளோர் செல்வக் களஞ்சியம்; அவளுக்குத்
தேவை-யென்பது ஒன்றுமில்லை
பாலுணர்வு நிறைவுறின்
எல்லாமே நிறைவாகும்

---

* குடும்ப விளக்கு, (பத்தாம் பதிப்பு) ப. 32

பாலுணர்வு நிறைவுறாதெனின்
பிறவற்றால் நிறைவுவந்திடுமோ
உடலும் உள்ளமும் உறுதிப்படுவது
பாலுணர்வால் என்றுணர்தல் வேண்டும்
நானறிந்த வரை எந்த ஆணும் பெண்ணும்
இதனை வெட்கமில்லாமல் உடன்படுவர்

(A woman waits for me, she contains all nothing is lacking
Yet all were lacking if sex were lacking
Or if the moisture of the right man were lacking
Sex contains all bodies, souls.)*

பாலுணர்வின் உச்சியில் நின்று ஒளிவு மறைவின்றிப் பேசும் விட்மனை யார்தான் ஏற்றுக் கொள்வார்? ஆனாலும் அதில் மன்பதைத் தத்துவம் மலிந்துள்ளது என்பதை எப்படி மறுக்க முடியும்? இன்னும் பல பாடல்கள் இப்படியே பாடப் பட்டுள்ளன. இதை விடவும் மிகக் கொச்சையாகப் பாடப் பட்டுள்ளன. நாட்டுப்புற இலக்கியத்தில் காணும் பாலியல் பாடல்கள் போன்றே அவை அமைந்துள்ளன.

மக்கள் நெருக்கடி மிகுந்த வீதியில்
ஒரு நாள் போய்க் கொண்டிருந்தேன்
அழகுமிகு காட்சிகளையும் வண்ணமிகு
கட்டடச் சிறப்புகளையும் பண்பாட்டுப்
பழக்க வழக்கங்களையும் நெஞ்சில்
பதித்த வண்ணம் போனேன்.
இன்றோ எல்லாம் மறந்துபோயின
ஒருத்தி மட்டுமே நினைவில் நிற்கிறாள்
தற்செயலாய்ப் பார்த்த அவள் என்னைக்
காதலுக்குத் துணையாக வைத்துக் கொண்டாள்
பகலிலும் இரவிலும் இருவரும்
இணைந்தே கிடந்தோம்; அதுவும் கூட இன்று
எனக்கு மறந்து போய்விட்டதே**

எனத் தான் ஒரு பெண்ணுடன் உறவாடிய கதையை வெளிப்படை யாகவே கூறுகிறார்.

---

* A.N. Dwivedi, op. cit. p. 103

இனி உனக்கு ஒரு துன்பமும் இழைக்கமாட்டேன்
உனது தேவைக்குமேல் ஒரு போதும் சேரேன்.
மாநிலங்களுக்குத் தகுதியான மகனையும்
மகளையும் நீ பெற்றெடுக்க என் ஆற்றல்
அனைத்தையும் குறைவின்றி வழங்குவேன்.
என் ஆற்றல் தீரும்வரை உனக்கின்பம்
அளிப்பதில் ஓயமாட்டேன்.

என்றெல்லாம் விட்மன் பாடுகிறார். இதனால்தான் எமர்சன் இப்பாடல்களை விலக்கிவிட்டு மீட்டுமொரு பதிப்பு வெளியிடலாம் என ஆலோசனை கூறினார். ஆனால் விட்மனோ மறுத்து விட்டார்.

### கடவுட்கொள்கை

வால்ட் விட்மன் கடவுள் வணக்கத்தை ஏற்றுக் கொண்டவர். தம் புல்லின் இதழ்களின் வழி பற்பல இடங்களில் இறையருளைப் பாடிப் பரவசப்படுகிறார். எல்லாம் அவன் என்று அருட்கொடையே பாடிக் களிக்கின்றார். பாரதிதாசன் தன் இளமைக்காலத்தில் இறைவனை வேண்டிப் பாடல்கள் பல பாடியுள்ளார். ஸ்ரீசுப்பிரமணியர் துதி அமுது என்னும் நூல் இதற்குச் சான்றாய் அமைகிறது. மேலும், பாரதியைப் பாரதிதாசன் சந்தித்தபோது பாடிய

எங்கெங்குக் காணினும் சக்தியடா—தம்பி
ஏழுகடல் அவள் வண்ணமடா—அங்குத்
தங்கும் வெளியினில் கோடியண்டம்—அந்தத்
தாயின் கைப்பந்தென ஓடுமடா*

எனும் பாடல் நம் நெஞ்சில் நீங்கா இடம் பெற்றுவிட்டதல்லவா?

ஒவ்வொரு பொருளிலும் நான்
இறைவனைக் காண்கிறேன்
அவன்குரலைக் கேட்கின்றேன்
என்றாலும் அவனை
முற்றவும் அறியாமல் கிடக்கின்றேனே

(I hear and behold God in every object
Yet understand God not in the least)**

என்கிறார் வால்ட் விட்மன்

---

* பாரதிதாசன் கவிதைகள், ப. 1

** Song of Myself, Sec. 48

வால்ட் விட்மனும் பாரதிதாசனும் இயற்கையை அன்னையாகக் கண்டு மகிழ்வதையும் பார்க்கலாம். பாரதிதாசன் பலஇடங்களில் இயற்கையை இயற்கை அன்னை எனக் குறிப்பிடுவதைக் காணலாம். வால்ட் விட்மன் ஓரிடத்தில் பாடுகிறார்:

காக்கும் தெய்வமே மூலப் பொருளே
வளமெலாம் வழங்கும் தாயே
எல்லாவற்றையும் வழங்குபவளே
நீயின்றி உலகில் ஏதுமில்லையே
நிலமோ, வீடோ, கலமோ
நானோ நாளோ பாதுகாவலைப்
பெறுவது எப்படி? நீயே
மன்பதையின் பாதுகாப்பு

(Protectress absolute thou bullvark all
For well we know that while thou
Givest each and all (generous as God)
Without thee neither all nor each nor land, home
Nor ship, nor mine, nor any here this day secure
Nor aught, nor any day secure) *

**தொழிலாளர் நிலை**

வால்ட் விட்மனும் பாரதிதாசனும் தொழிலாளர்களின் உழைப்பினைப் பாராட்டிப் போற்றியுள்ளனர். அவர்தம் உழைப்பினால் தான் நாட்டின் முன்னேற்றம் அமைந்துள்ளது என்பதில் இருவர்க்கும் ஒப்புமை காணப்படுவது போற்றுதற்குரியதாகும். அமெரிக்கப் பாடலை நான் கேட்கிறேன் என்னும் பாடலில் விட்மன் பல்வேறு தொழில் செய்யும் தொழிலாளர்கள் தத்தமக்கு விரும்பிய கூட்டமுதப் பாடலைப் பாடிக் களிக்கின்றனர் எனப் பாடுகிறான்.

ஒவ்வொருவரும் பாடுகின்றனர்
தமக்கு ஏற்றதைப் பாடுகின்றனர்
பிறர்க்காகப் பாடுவதில்லை.
பகலில் ஒரு பாடல்—இரவில்
விருந்தோடும் மகிழ்ச்சியோடும்
பாடும் பாடலில் தம்மை மறக்கின்றனர்
ஆனந்தப் பெருக்கில் அங்காந்து பாடி இன்ப இசையில்
பரவசம் எய்துகின்றனர்.

* V. Sachithanandan, Whitman and Bharathi, p. 162

(Each singing what belongs to him or her and to none else
The day what belongs to the day—at night the
party of young fellows robust friendly
Singing with epen mouths their strong melodious songs
I Hear America singing)*

வியர்வையின் மாண்பினைப் பற்றிப் பாடும் விட்மன் ஓரிடத்தில்

The scent of these arm-pit aroma finer than prayer**

எனக் குறிப்பிடுகிறார்.

(என் அக்குள் வியர்வையின் நறுநாற்றம் இறை வணக்கப் பாடலைக் காட்டிலும் அழகானது)

பாரதிதாசனோ,

சிற்றூரும் வரப்பெடுத்த வயலும் ஆறு
தேக்கியநல் வாய்க்காலும் வகைப்படுத்தி
நெற்சேர உழுதுழுது பயன்விளைக்கும்
நிறையுழைப்புத் தோள்களெல்லாம் எவரின் தோள்கள்?
கற்பிளந்து மலைபிளந்து கனிகள் வெட்டிக்
கருவியெலாம் செய்து தந்த கைதான் யார்கை?
பொற்றுகளைக் கடல்முத்தை மணிக்குலத்தைப்
போயெடுக்க அடக்கிய மூச்செவரின் மூச்சு?***

எனத் தொழிலாளர் தம் பெருமைகளை அழகோடும் உணர்ச்சிப் பெருக்கோடும் எடுத்துரைக்கின்றார்.

வியர்வைப் பெருமையைப் பாடவரும் பாரதிதாசன்,

சித்திரச் சோலைகளே உமைநன்கு
திருத்த இப்பாரினிலே முன்னர்
எத்தனை தோழர்கள் ரத்தம் சொரிந்தன
ரோ உங்கள் வேரினிலே

---

* Leaves of Grass, I Hear America Singing

** Songs of Myself.

*** பாரதிதாசன் கவிதைகள், ப. 22

சித்தம் திருத்திய நேர்மையி னால்மிகு
நெல்விளை நன்னிலமே—உனக்
கெத்தனை மாந்தர்கள் நெற்றி வியர்வை
இறைத்தனர் காண்கிலமே''*

என்கிறார். வியர்வைக்கடல் என்னும் பாட்டில் பண்ணையில் பணியாற்றும் பண்ணை ஆட்கள் சிந்தும் வியர்வைக்கு இவ்வுலகை உரிமையாக்கலாம் எனப் பாடிக் களிக்கிறார்:

களைபோக்கு சிறுபயன் விளைக்க இவர்கள்
உடலைக் கசக்கி உதிர்த்த வியர்வையின்
ஒவ்வொரு துளியிலும் கண்டேன்
இவ்வுலகு உழைப்பவர்க்குரிய தென்பதையே.

புரட்சிக்கவிஞர்கள் இருவருமே உழைக்கும் மக்களுக்காக இரக்கப் பட்டுப் பல பாடல்களைப் பாடியுள்ளனர்.

வால்ட் விட்மன் தன்னைப் பற்றிய பாடலில் உலக அனுபவங் களை மிக அதிகமாகவும் நுணுக்கமாகவும் பேசுகிறார். அமெரிக்க மக்களின் அரும்பசிக்கு அருமருந்தாக அவர்படைப்பு விளங்கியது. காப்பிய இலக்கணம் எதனையும் பெறாத **புல்லின் இதழ்கள்** காப்பியம் என்று அமெரிக்க மக்களால் போற்றப்படுகிறது. புதுக் கவிதை, உரைநடையின் செறிவு வடிவம் என்று எனச் சிலர் கருதுகின்றனர். வால்ட் விட்மனின் கவிதை, கவிதையை விட அழகானது; ஆழமானது; இசைவடிவம் கொண்டது. ஈப்ரு மொழியில் எழுதப்பெற்ற பைபிளைப் போன்று ஒலிநயம் பொருந்திய படைப்பே **புல்லின் இதழ்கள்.** ஹோமரின் கவிதையைப் போன்று நடைபோடும்; நாட்டுப்புறப் பாடலின் சாயலும் இருக்கும்; வோர்ட்ஸ்வொர்த்தின் எளிய சந்தமும் மிடைந்து வரும்; சிற்சிலபோது மில்டனின் பீடார்ந்த ஏறு நடையும் உலா வரும்; ஆனாலும் அவனுக்கு அவனே வழிகாட்டி. பாடுபொருளில் புதுமையைக் கொண்டுவர வேண்டுமென்பதால் வடிவத்திலும் புரட்சியைப் புகுத்தினார். வசன கவிதை என்பதால் எளிதில் பொருள் விளங்கிவிடும் என்று எதிர்பார்க்க முடியாது. படிமம், குறியீடு முதலிய அணிகளால் புனையப் பெற்றுள்ள கவிதைத் தொகுப்பே **புல்லின் இதழ்கள்.** படிமம், குறியீடு ஆகிய இயக்கங்கள் ஐரோப்பாவில் உருப்பெறுமுன்பே விட்மன் படிமங் களாலும் குறியீடுகளாலும் பாடல்களை அர்த்த புஷ்டியுள்ள தாகப் படைத்துள்ளார்.**

---

* பாரதிதாசன், நீங்களே சொல்லுங்கள், ப. 156.
** Select Poems — Walt Whitman, Dr. Ragukul Tilak, p. 67.

பாரதிதாசன் முறையாகப் பயின்றவர். இலக்கிய இலக்கணம் கற்றுத் தோய்ந்தவர். சங்கத் தமிழிலும் நாட்டங்கொண்ட பாரதிதாசன் அடிநாட்களில் பக்திப் பாடல்களைப் பாடி மகிழ்ந் துள்ளார். பக்தி என்னும் பேரால் கயமைத்தனம் மண்டிக் கிடந்த காலத்தில் ஈரோட்டுப் பெரியார் மக்களின் மனங்களில் கவிந்திருந்த மாயத்திரையை விலக்கி விட்டுப் பகுத்தறிவுப் பாதைக்கு வருமாறு வரவேற்பு நல்கிய காலகட்டத்தில் புலவரேறு புதுப்பொலிவோடும் புதுத்தெம்போடும் பாட்டுலகில் பட்டுச் சிறகடித்துப் பறக்கலானார். பழமைக்கும் மூடத்தனத்திற்கும் முற்றுப்புள்ளி வைத்தார். பகுத்தறிவுப் பாசறையின் தன்னே ரில்லாக் கவிஞராக உலா வந்தார். கவிதை வடிவில் மரபினைப் போற்றிக் கொண்டு உள்ளடக்கத்தில் புரட்சியைப் புகுத்தினார். இவருடைய பாடல்கள் யாவும் எளிமையானவை. சாதாரண மக்களும் பாடக் கேட்டால் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் பாடல்களைப் படைத்தளித்தார். புதிய சந்தப் பாக்களால் படைப்பினை அணி செய்தார். சொல்லும் போக்கிலும் சொற் களிலும் கம்பீரத்தை ஏற்றிப் பாடினார். வீழ்ந்து கிடந்த மக்கள் நிமிர்ந்து நடக்க பாடல்களையே தூதனுப்பினார். நெடும் பாடல்களையும் குறுங்காப்பியங்களையும் பாடியருளினார்.

விட்மன்—பாரதிதாசன் படைப்புகளை மேலும் மேலும் ஆய்வு செய்ய மிகுதியான வாய்ப்புகள் உள்ளன. இவ்வாறான ஆய்வு தமிழ்த்தாயின் அழகுக்கு மேலும் அழகு சேர்க்கும்.

# 4. பாரதிதாசனும் வில்லியம் பட்லர் யேட்சும்

**ந. கடிகாசலம்**

நாடு, மொழி, இனம் வேறுபட்டிருப்பினும் சிந்தனையில் உலகக் கவிஞர்கள் ஒன்றுபடுகின்றனர். தாம் வாழ்ந்த கால கட்டத்தில், நாடு மொழி இனம் மக்கள் இருந்த நிலையையும், மாற்றம் தேவைப்படின் அதற்கான முழக்கத்தையும் அவர்கள் வெளிப்படுத்துகின்றனர். நாடு மட்டுமல்ல, மனித உள்ளங்களும் அடிமைத்தளையின்றி சுதந்திரமாக இருத்தல் வேண்டும் என்பதில் அவர்கள் நாட்டம் செலுத்துகின்றனர்.

கவிஞர்களுக்குப் பாடுபொருளாக எது வேண்டுமானாலும் அமையலாம். தாம் வெளிப்படுத்த நினைக்கும் கருத்துக்கு எது சாதகமாக இருக்கும் என்று கவிஞன் நினைக்கிறானோ அதை அவன் திறம்படப் பயன்படுத்திக் கொள்கிறான். பொதுவாக, இயற்கையைப் பாடாத கவிஞனே இல்லை என்ற நிலையில் தமிழ்க் கவிஞர்களும் அதற்கு விதிவிலக்கல்ல.

இக்காலத் தமிழ்க் கவிஞர்களில் மகாகவி சுப்பிரமணிய பாரதிக்கு அடுத்து, அவர்தம் தாசனாக விளங்குபவர் புதுவைக் கவிஞர்-புரட்சிக் கவிஞர்—பாரதிதாசனார். பாவேந்தர் என்று அழைக்கப்படும் பாரதிதாசனை, பிறமொழி / பிற நாட்டுக் கவிஞர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும் நிலையில், அயர்லாந்து கவிஞரான வில்லியம் பட்லர் யேட்சு, அவருடன் ஒப்பிடப் படுகிறார்.

இவ்விருவரும் கவிஞர்கள். கவிதை மட்டுமல்ல நாடகங்களை யும் படைத்திருக்கின்றனர். மொழியுணர்வும், நாட்டுப்பற்றும் மிக்கவர்கள். இயற்கையைப் பாடிய கவிஞர்கள்; பொதுவுடை மைக் கொள்கையில் நாட்டம் கொண்டவர்கள். அரிய உவமை

கள் வாயிலாக உணர்ச்சிகளை / சிந்தனைகளைக் கவிதையில் வடித்துக் காட்டியவர்கள். இவ்விரு கவிஞர்களுக்கும் இடையிலான ஒற்றுமை நிலையினை எடுத்துக் காட்டுவதே இக் கட்டுரையின் இலக்கு.

வில்லியம் பட்லர் யேட்சு, ஆங்கிலேயே ஆதிக்கத்தில் அடிமைப்பட்டுக் கிடந்த அயர்லாந்தில் வாழ்ந்தவர். ஜான் பட்லர் யேட்சுக்கும் சூசன் போலக்ஸ் ஃபென்னுக்கும் மகனாக 13. 6. 1865-இல் டப்ளினுக்கு அருகில் உள்ள சேண்டிமவுண்டில் யேட்சு பிறந்தார். 1882-இல், தமது பதினேழாவது வயதில் கவிதை புனையலானார். 1917-இல், தமது 52-ஆவது வயதில் திருமணம் செய்து கொண்டார். 1923 நவம்பரில் நோபல் பரிசு பெற்றார். இரவீந்திரநாத தாகூரின் கீதாஞ்சலிக்கு முன்னுரை எழுதியவர் யேட்சு. 1931 மே திங்களில் ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகம் அவருக்கு டி. லிட், பட்டம் அளித்தது. 28. 1. 1939-இல் பிரான்சில் மரணமடைந்தார். 1948 செப்டம்பரில், யேட்சின் உடல் அயர்லாந்துக்குக் கொண்டு வரப்பட்டு, ட்ரம்கிளிப்பில் அடக்கம் செய்யப்பட்டது.

**மொழியுணர்வு**

ஆங்கில மொழிக்கும் அயர்லாந்து மொழிக்கும் உள்ள வேறுபாடு அளவில் சிறிதுதான். அயர்லாந்தில் உச்சரிக்கப்படுவது போன்றே தமது படைப்புகளில் உச்சரிப்புகளைப் பயன்படுத்தி, அயர்லாந்து மொழிநடையை யேட்சு உருவாக்கியிருக்கிறார். யேட்சு பயன்படுத்தியிருக்கும் அயர்லாந்து சொற்கள், அவர்தம் மொழிப்பற்றுக்குச் சான்று பகர்கின்றன.

"ஆங்கிலத்தில் இருந்தாலும், உணர்ச்சியில் அயரிய இலக்கியமாக இருக்கக்கூடிய ஒரு தேசிய இலக்கியத்தை நம்மால் உருவாக்க முடியாதா?" என்று, ஒன்றிய அயர்லாந்து என்ற இதழில் 1892-இல் யேட்சு எழுதியது, அவர்தம் மொழிப்பற்றினைப் புலப்படுத்துகின்றது.

அயர்லாந்தின் நாட்டுப்புறக் கதைகள், நாட்டுப்புறப் பாடல்கள் முதலியவற்றைப் பெருமளவில் யேட்சு பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்.

அயர்லாந்து இலக்கியக் கழகத்தை, இலண்டனிலும் டப்ளினிலும் அவர் நிறுவினார். அயர்லாந்து இலக்கியவாதிகள், இனிமேல், தம் நாட்டு (அயர்லாந்தின்) இயற்கையமைப்பையும்,

தொன்மங்களையும் தம் படைப்புகளில் பயன்படுத்த வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார். இதற்கு முன்னோடியாக, The Wanderings of Oisin and Other Poems என்ற தொகுப்பை அவர் வெளியிட்டார்.

பாவேந்தரின் மொழியுணர்வுக்கும் பற்றுக்கும் அவர் எழுதிய பல கவிதைகள் சான்று பகர்கின்றன. தாய்மொழியான தமிழ் மீது காதலும் பக்தியும் கொண்டவர் பாரதிதாசன். அதனால் தான்,

செந்தமிழே! உயிரே! நறுந்தேனே!
செயலினை மூச்சினை உனக்களித் தேனே

(இசையமுது, முதல் தொகுதி. ப. 34)

என்கிறார்.

திங்களொடும் செழும்பரிதி தன்னோடும் விண்ணோடும் உடுக்களோடும்
மங்குல் கடல் இவற்றோடும் பிறந்த தமிழ்

(பாரதிதாசன் கவிதைகள், முதல் தொகுதி. ப. 100)

என்று தமிழின் பழமைச் சிறப்பைக் கூறுகிறார்.

பாவேந்தரைப் பொறுத்தவரை, தாய்த் தமிழ்மொழி அவர் தம் உயிர்; தமிழ் இன்பம், இயற்கை தரும் இன்பத்தையும் விடச் சிறந்தது.

கனியிடை ஏறிய சுவையும்-முற்றக்
கழையிடை ஏறிய சாறும்,
பனிமலர் ஏறிய தேனும்-காய்ச்சுப்
பாகிடை ஏறிய சுவையும்,
நனிபசு மொழியும் பாலும்-தென்னை
நல்கிய குளிரின நீரும்
இனியன என்பேன் எனினும்—தமிழை
என்னுயிர் என்பேன் கண்டீர்!

(பாரதிதாசன் கவிதைகள், முதல் தொகுதி, ப. 87)

உயிராம் தமிழ்மொழியில் பிறமொழிச் சொற்கள் கலக்கப்படுவதை அவர் எதிர்த்தார். அத்தகையோரைப் 'பேடிகள்' என்று இழித்துரைத்தார்.

பிறமொழி தமிழிற் சேர்க்கும்
பேடிகள் நுழைந்த தில்லை*

என்று குறிஞ்சித் திட்டில் பாடுவது உணரத்தக்கது. தனித் தமிழில் நாட்டங்கொண்டவர்; தூய தமிழ்ப் பற்றாளர்; தமிழியக்கம் எனும் தலைப்பிலே கவிதை நூலொன்றைப் படைத்தவர் பாரதிதாசன்.

பேச்சில், இசையில் என பிறமொழிச் சொற்கள் கலப்பதை அவர் சாடுகிறார்.

தென்றற் பொதியமலை செந்தமிழ்க்கு மீதியதாய்
நின்ற உயிர் இந்தி வந்தால் நீங்கிவிடும் என் தமிழா!

(பன்மணித்திரள், ப. 92)

என்று, மொழிக்காக—மொழி காக்க—உயிர் துறக்கவும் அவர் தயாராகிறார். தாய்மொழியாம் தமிழை உயிராய்க் கொள்ளுமாறு, மாணவர்க்கு அழைப்பு விடுக்கிறார் பாவேந்தர்:

ஆங்கிலத்தைக் கற்கையிலும்
அயல்மொழியைக் கற்கையிலும்
எந்த நாளும்
தீங்கனியைச் செந்தமிழைத்
தென்னாட்டின் பொன்னேட்டை
உயிராய்க் கொள்வீர் (தமிழியக்கம். ப. 35)

எவரின் சூழ்ச்சியும் தமிழை அழித்து விடாது எனும் நம்பிக்கை மட்டும் பாரதிதாசனுக்கு உண்டு.

காரிருளால் சூரியன்தான் மறைவ துண்டோ?
கறைச் சேற்றால் தாமரையின் வாசம் போமோ?
பேரெதிர்ப்பால் உண்மைதான் இன்மை யாமோ?
பிறர்சூழ்ச்சி செந்தமிழை அழிப்ப துண்டோ?

(பாரதிதாசன் கவிதைகள், முதல்தொகுதி, ப. 23)

தாய்மொழிப் பற்று மிக்க யேட்சும் பாரதிதாசனும் அதைக் காப்பதற்காக, பரப்புவதற்காக 'இயக்கத்தை' மேற்கொண்டது சுட்டத்தக்கது.

நாட்டுப்பற்று

அடிமைப்பட்டுக் கிடந்த அயர்லாந்தின் மீது யேட்சு மிகுந்த பற்று கொண்டிருந்தார். அவர் இயற்றிய பாடல்கள் பலவற்றில் நாட்டுப்பற்றுணர்வு மேலோங்கி நிற்கிறது. கவிஞன் என்பவன், தன் தாய்நாட்டைப் பற்றி நன்கு அறிந்திருக்க வேண்டும் என்பது யேட்சின் கருத்தாகும்.

அயர்லாந்தின் பல்வேறு அரசியல் கட்சிகளை ஒன்று சேர்க்கும் முயற்சியில் யேட்சு ஈடுபட்டார். ஆங்கிலேய அரசு தமக்களித்த சிறப்புப் பட்டத்தையும் பெற மறுத்துவிட்டார். தம் உடல், அயர்லாந்தில்தான் அடக்கம் செய்யப்பட வேண்டும் என்று யேட்சு விரும்பினார்.

அயர்லாந்துக்கு விடுதலை கிடைக்கவிருப்பதை இரகசிய ரோசாவில் (The Secret Rose) யேட்சு முன் கூட்டியே தெரிவிக்கிறார். பாரதியாரைப் போல, இதே செய்தியை Parnell பாடலும்,

அயர்லாந்து விடுதலை பெற்றே தீருவாள்
நீ கல்லை உடைத்துக் கொண்டே இருப்பாயாக

என்று தெரிவிக்கிறது.

யேட்சு, ஆங்கிலேயரை எப்போதுமே அயலாராகவே கருதினார். அயர்லாந்தைப் போற்றிப் பாடுகிறார் என்றால் அங்கே ஆங்கிலேயரைத் தூற்றாமல் இருப்பதில்லை. The Lake Isle of Innis Free எனும் பாடல் அதற்குச் சிறந்ததோர் எடுத்துக் காட்டாகும்.

இன்னிஸ்பிரீ எனும் ஏரித்தீவு

இப்போதே செல்வேன் நான்
இன்னிஸ்ஃபிரீ எனும் ஏரித் தீவுக்கு
.........................................
அங்கே பெறுவேன் அமைதியை;
.........................................
இப்போதே செல்வேன் நான்
இன்னிஸ்ஃபிரீ எனும் ஏரித் தீவுக்கு;

இரவு பகல் என்றில்லாமல் எப்போதும்
ஏரியின் கரைகளில் மெல்ல மோதி
தவழ்ந்து மகிழ்கிறது ஏரித் தண்ணீர்;
காலையில் அல்லது நடைபாதையில்
நான் நிற்கும் போதெல்லாம்
இதயத்தின் ஆழத்தில் அவ்வொலி கேட்கிறது.

(தமிழாக்கம்: ந. கடிகாசலம்)

தாய்நாட்டுக்கு நலம் கிடைக்கும் என்றால், சாகவும் தயார் என்கிறார் பாரதிதாசன்.

எனை ஈன்ற தந்தைக்கும் தாய்க்கும் மக்கள்
இனம் ஈன்ற தமிழ்நாடு தனக்கும் என்னால்
தினையளவு நலமேனும் கிடைக்குமென்றால்
செத்தொழியும் நாள் எனக்குத் திருநாளாம்

(பாண்டியன் பரிசு, ப. 96)

கதைமாந்தர் வாயிலாக, மக்களுக்கு நாட்டுப்பற்றினையும் விடுதலை உணர்வையும் பாரதிதாசன் ஊட்டியிருக்கிறார்—**பாண்டியன் பரிசு, காதலா? கடமையா?** இயற்கையை வாழ்த்தும் போது, நாட்டையும் இணைத்து,

தென்னாடு வாழிஎன் றாடுவமே—நல்ல
செம்பரிதி வாழிஎன் றாடுவமே

என்று பாடுவதன் மூலம் பாரதிதாசனாரின் நாட்டுப்பற்று வெளிப்படக் காணலாம்.

### பொதுவுடைமைக் கொள்கை

மார்க்சியக் கொள்கை இங்கிலாந்தில் பரவத் தொடங்கியதன் விளைவாக, சமுதாயக் கட்டமைப்பில் மாறுதல்கள் ஏற்படலாயின. இத்தகு மாறுதல்கள், யேட்சை ஒரு பொதுவுடைமை வாதியாக மாற்றி விட்டன. அயர்லாந்து பொருளாதார பிடிப்பு கொண்டதற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

ஒரு மனிதன் தேவைக்கே இந்தத் தேசம்
உண்டென்றால், அத்தேசம் ஒழிதல் நன்றாம்

(பாரதிதாசன் கவிதைகள், முதல் தொகுதி, ப. 83)

என்பது, பாரதிதாசனின் பொதுவுடைமைக் கொள்கையாகும். தனியுடைமைக் கொள்கையாகும். தனியுடைமை நிலவும் நாடு அழிந்தாலும் பரவாயில்லையாம். பொருளாதார ஏற்றத்தாழ்வு களுக்கு, பொதுவுடைமை நிலவாதது காரணம் என்கிறார் பாரதி தாசன்.

ஆலையிற் கரும்பு போல் வாடினர் பல்லோர்
(பாரதிதாசன் கவிதைகள் நான்காம் தொகுதி. ப. 183)

பாலின் நுரைநிகர் பருத்தி உண்டெனினும்
மேலுக்கோர் கந்தை மிஞ்சவில்லை

(காதலா? கடமையா? ப. 22)

மேலும், ஆட்சியைப் பொதுமை செய், உடைமை பொதுவே என்று பாரதிதாசனின் ஆத்திசூடியும் உரைக்கின்றன.

## பெண்மைப் புரட்சி

யேட்சும் பாரதிதாசனும் வேறுபட்ட பண்பாடுகளைக் கொண்ட சமுதாயத்தில் வாழ்ந்தவர்கள் என்பதால், பெண்மைப் புரட்சி பற்றிய கொள்கைகளில் மாறுபடுகின்றனர்.

பெண்கள் ஆடம்பரமாக வாழக்கூடாது; ஆடம்பரத்தை அவர்கள் விட்டொழிக்க வேண்டும் என்று யேட்சு கருதினார். மிகச் சிறந்த பெண் என்பவள், எளிமையானவளாக இருக்க வேண்டும் என்கிறார்.

பெண்கள் அழகாக இருப்பதில் கவனம் செலுத்தவேண்டும்; அரசியலில் பெண்கள் தலையிடக்கூடாது. அப்பாவித்தனமும் உற்சாகமும் பெண்களுக்குத் தேவைப்படுவதாக யேட்சு கூறு கிறார்.

பெண்ணடிமை தீருமட்டும் பேசுந் திருநாட்டு
மண்ணடிமை தீரல் முயற்கொம்பு

என்றவர் பாரதிதாசன். அவர் மேலும் கூறுவார்:

கல்வியில்லாத பெண்கள்
களர்நிலம்! அந்நிலத்தில்
புல் விளைந்திடலாம் நல்ல
புதல்வர்கள் விளைவதில்லை.

(குடும்ப விளக்கு. ப, 69)

பெண்ணுரிமை பற்றிப் பெரிதும் பாடுகிறார். காதல் மணம், இளமை மணம், விதவை மணம் பற்றியும் அவர் பாடுகிறார். அவற்றுள் புதுமைக் கருத்துக்கள் உள்ளடங்கியுள்ளன. மண விலக்குக்கு இடம் தந்து, விதவை மணத்திற்கு வரவேற்பு தருகிறார்.

புலன் அற்ற பேதையாய்ப் பெண்மை செய்தால்அந்
நிலம் விளைந்த பைங்கூழ் நிலைமையும் அம்மட்டே.

(பாரதிதாசன் கவிதைகள், முதல் தொகுதி. ப. 3)

**சிறுமையைத் தூற்றுதல்**

பழம்பெருமை பேசும் கவிஞர்கள் சமகாலத்தில் நிலவும் சிறுமைகளைக் கண்டு கொதித்தெழுவது இயல்பே. அந்தச் சிறுமைகளை அவர்கள் தூற்றவும் தயங்குவதில்லை,

யேட்சு படைத்த அரசியல் சார்ந்த பாடல்களில், செப்டம்பர் 1913 குறிப்பிட வேண்டிய ஒன்று. அயர்லாந்தில் விடுதலைக்காகப் பாடுபட்ட தலைவர்களான வில்லியம் மார்பி போன்றோரை அவர் தூற்றுகின்றார். அவர்கள் எல்லாம், நாட்டுப்பற்று எனும் பெயரால் வியாபாரம் செய்வதாக யேட்சு கருதுவதே அதற்குக் காரணமாகும்.

உழைக்கும் வர்க்கம் ஓடாய்த் தேய்ந்து உழல்வதைக் காண்கிறார் பாரதிதாசன். அவர்தம் உழைப்பைக் கொள்ளையிடுவோரை,

உழைப்பிலார் அட்டை; உண்ணி
புல்லுருவிக் கூட்டத்தார்

(நாள் மலர்கள், ப. 119)

எனச் சாடுகிறார்.

ஓடப்பராயிருக்கும் ஏழையப்பர்
உதையப்பராகிவிட்டால் ஓர் நொடிக்குள்
ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி
ஒப்பப்பர் ஆய்விடுவார் உணரப்பா நீ

(பாரதிதாசன் கவிதைகள், முதல் தொகுதி. ப, 148)

என்று புரட்சி வெடிக்கும் என எச்சரிக்கிறார்.

சமுதாயத்தில் நிலவும் மூடப் பழக்க வழக்கங்களையும் பாரதிதாசன் சாடுகிறார்,

## புதியதோர் உலகு

தன் கண் முன்னால் நிகழ்கின்ற கொடுமைகளைக் காண இயலாமல், புதியதோர் நாடும் உலகும் படைப்பது / படைக்க விரும்புவது கவிஞர்களுக்குக் கைவந்த கலை. அயர்லாந்து நாடு அடிமைப்பட்டுக் கிடந்த நிலை, ஆங்கிலேயர்தம் ஆதிக்கவெறி, அடிமை உணர்வினை நீக்கவேண்டும் என எழுச்சியுறாத மக்கள் கூட்டம்...இப்படிப்பட்டவரை நினைத்துக் கொதிக்கும் யேட்சு, புதியதோர் நாட்டினை/நகரினைப் படைக்கிறார். இன்னிஸ்பிரீ எனும் ஏரித்தீவு, பைஸாண்டியம் ஆகிய இரண்டினைச் சான்றாகக் காட்டலாம்.

நான் அங்குச் சென்றாக வேண்டும்;
டேஃபோடில் அல்லி மலர்கள் கொண்ட
கல்லறை ஒன்று அங்கே உண்டு
தரையின்கீழ் உறங்கும்
உவகையற்ற சிறுதெய்வத்தையும்
மகிழ்ச்சிப் பாக்களால்
நான் மகிழ்விப்பேன்

(இன்ப இடையன் பாட்டு—தமிழாக்கம்: ந. கடிகாசலம்)

என்று யேட்சு பாடுகிறார்.

புதியதோர் உலகம் செய்வோம்—கெட்ட
போரிடும் உலகத்தை வேரொடு சாய்ப்போம்

(பாரதிதாசன் கவிதைகள், முதல் தொகுதி, ப. 158)

என்கிறார் பாரதிதாசன்.

தேசத்தினர்கள் ஓர்தாய் தந்திடுசேய்கள்—இதனைத்
தெளியா மக்கள் பிறரை நத்தும் நாய்கள்

(மேற்படி. ப. 161)

எனும் புத்துலகுக் கோட்பாட்டையும் அவர் வெளியிடுகிறார்.

## இயற்கையைப் பாடுதல்

யேட்சுக்கு இயற்கையின் மீது ஆறாக் காதல்; தம் கவிதைகளில் அதை வெளிக் காட்டவும் அவர் தயங்கியதில்லை. யேட்சின் இளமைக்காலம் இயற்கை எழில் நிறைந்த ஸ்லைகோ மலைப் பகுதியில் கழிந்தது.

The Wild Swans At Cooly எனும் பாடலில்,

இலையுதிர்காலத்து அழகுடன்
மரங்கள் நிற்கின்றன
காட்டுப் பாதைகளோ
காய்ந்து கிடக்கின்றன
அக்டோபர் மாதத்து மாலை வெயிலில்
வானத்தைக் கண்ணாடி எனக்
காட்டுகிறது தண்ணீர் (தமிழாக்கம்: ந. கடிகாசலம்)

என்கிறார் யேட்சு.

அனுசுயாவும் விஜயனும் எனும் பாடலில், இயற்கையைப் படைத்தவன் இறைவன்; அதை இறைவனே காக்கிறான் என்கிறார் யேட்சு.

ஓ பிரம்மாவே!
மகிழ்ந்து கிடக்கும் ஆடுகளையும்
கவலையற்றுக் கிடக்கும் பசுக்களையும்
இலையில் வாசம் செய்யும் பூச்சிகளையும்
மரவேர்களில் ஓடித்திரியும் சுண்டெலிகளையும்
..................
காப்பாற்றுவாயாக! (தமிழாக்கம் : ந. கடிகாசலம்)

இயற்கையைப் பற்றிய பாடல்களில் குறியீடுகளும் பயன்படுத்தப் பட்டுள்ளன.

பாரதிதாசன் இயற்கையைப் பலவாறாகப் பாடியிருப்பது நமக்குத் தெரியும். அழகுடைப் பொருள் அழியா இன்பம் என்பதில் பாரதிதாசனுக்கு நம்பிக்கை.

ஊருக்குக் கிழக்கே உள்ள
பெருங்கடல் ஓர மெல்லாம்
கீரியின் உடல் வண்ணம் போல்
மணல் மெத்தை (அழகின் சிரிப்பு. ப. 6)

அது மட்டுமா? தாமரையைப் பாடுகிறார் இப்படி:

கண்ணாடி தரையின் மீது
கண்கவர் பச்சைச் தட்டில்
எண்ணாத ஒளிமுத் துக்கள்
இறைந்தது போல் குளத்துத்
தண்ணீரிலே படர்ந்த
தாமரை இயல்பும், மேலே
தெண்ணீரின் துளியும் கண்டேன்

(அழகின் சிரிப்பு. ப. 26)

ஒற்றுமையில்லாத மனிதரைச் சாடுவதற்கும் அவர் இயற்கையைப் பயன்படுத்துகிறார்.

இட்டதோர் தாமரைப் பூ
இதழ் விரிந்திருத்தல் போலே
வட்டமாய்ப் புறாக்கள் கூடி
இரையுண்ணும்; அவற்றின் வாழ்வில்
வெட்டில்லை; குத்துமில்லை

(அழகின் சிரிப்பு. ப. 43)

குறியீடுகள்

தன் சொந்தப் பட்டறிவினையும் உணர்ச்சிகளையும் யேட்ஸ் உணர்த்துகிறார். The Song of Wandering Aengus எனும் பாடலில் யேட்சின் குறியீடாக ஏங்கஸ் அமைந்திருக்கிறான்.

ஏங்கஸ் ஒரு நன்னீர் வெள்ளி மீனைப் பிடிக்கிறான். அதைச் சமைக்க வேண்டி, தரை மீது வைத்து விட்டுத், தீ மூட்டச் செல்கிறான். அப்போது, தலையில் ஆப்பிள் மலர்க்கொத்துடைய ஒரு மங்கையாக அது உருமாறி, அவனைப் பெயர் சொல்லி அழைத்து விட்டு மறைந்து விடுகிறாள். அதன் பிறகு, வயதான ஏங்கஸ்,

நான்—
முதுமை எய்தி
பள்ளத்தாக்கு மலை என
அலைந்தே திரிந்தாலும்
அவள் சென்ற இடத்தை
என்றேனும் கண்டுபிடித்து
அவள் அதரங்களில் முத்தமிட்டு
அவள் கரங்களைப் பற்றியவாறு
பச்சை பசும் புல்வெளியில் உலாவி

நிலாவின் வெள்ளி ஆப்பிள்களையும்
சூரியனின் தங்க ஆப்பிள்களையும்
வாழ்நாள் இறுதிவரை
பற்றிக்கொண்டே இருப்பேன்

(தமிழாக்கம்: ந. கடிகாசலம்)

எனப் பாடி அலைந்து திரிகிறான். இப்பாடலில் தீ-யேட்சின் காதல் உணர்ச்சிக்கும் மங்கை-மாட்கானுக்கும், மங்கை மறைவது மாட்கான் யேட்சை விட்டு நீங்கியதற்கும், பள்ளத்தாக்கு மலை—யேட்சு சென்றுவரும் அயர்லாந்துக்கும் இங்கிலாந்துக்கும் குறியீடுகளாக அமைந்திருக்கின்றன.

பாவேந்தர் பாரதிதாசன் பாடல்களில் குறியீடுகள் இடம் பெற்றிருக்கக் காண்கிறோம். கதை மாந்தர் வாயிலாகக் கவிஞர் பேசுவது என்பது, அவர்தம் குறியீடாகவே அமைந்திருப்பதாகக் கொள்ள இடமுண்டு. விரிவாக ஆராய்வதற்கு மேலும் இடமுண்டு.

முடிவுரை

வில்லியம் பட்லர் யேட்சும் (1865—1939) பாவேந்தரும் (1891—1964) 74 / 73 வயது வரை வாழ்ந்த கவிஞர்களாவர். ஒருதலையாகத் தான் காதலித்த பெண் யேட்சின் கவிதைகளில் பெரும்பாலானவற்றில் தலை காட்டுகிறாள். அத்தகைய பிரச்சினைக்குப் பாவேந்தர் ஆளாகவில்லை. யேட்சுக்கு 52 வயதில் திருமணம் நடந்தது. பாவேந்தர் 30 வயதில் திருமணம் புரிந்து கொண்டார்.

இவ்விரு கவிஞர்களும் பிரெஞ்சு மொழி கற்றிருக்கின்றனர். யேட்சின் படைப்புகளில் பிரெஞ்சு மொழித் தாக்கம் உண்டு. பாவேந்தர்தம் பாடல்களில் அது இல்லை.

யேட்சு பிரான்சில் காலமானார்; பின்னாளில், அவர் உடல், அவர் விரும்பியவாறே அயர்லாந்தில் அடக்கம் செய்யப்பட்டது. பாவேந்தர் சென்னையில் மரணமடைந்தார்; புதுவையில் அடக்கம் செய்யப்பட்டார்.

பாவேந்தர் தமிழாசிரியராகப் பணியாற்றினார். யேட்சு படைப்பாளியாகவே இருந்தார். இலக்கியக் கழகங்களையும் நாடக அரங்குகளையும் நிறுவியிருக்கிறார்.

யேட்சு மூவரைக் காதலித்த காரணத்தால், காதல் பாட்டுக்களை அதிக அளவில் பாடியிருக்கிறார். பாவேந்தரும் அந்த அளவுக்குக் காதல் பாட்டுக்களைப் பாடியிருக்கிறார்.

யேட்சு, பாரதிதாசன் ஆகியோரின் நாடகங்களையும் ஒப்பு நோக்கினால் இவ்விருவர் பற்றி மேலும் ஒப்பீட்டுக் கருத்து பெறப்படலாம்.


பயன்பட்ட நூல்கள்

பாரதிதாசன் கவிதைகள், 3 தொகுதிகள்.

வில்லியம் பட்லர் யேட்ஸ் மற்றும் சுப்பிரமணிய பாரதியின் பாடல்களில் புலப்படும் புனைவியல் கூறுகள்—ஓர் ஒப்பாய்வு, துரை. ஜெகநாதன், சென்னைப் பல்கலைக் கழக பிஎச். டி. பட்ட ஆய்வேடு, 1987.

The Golden Treasury (Ed) Francis Turner Palgrave,. Oxford University Press, London, 1964.

W. B. Yeats, Balachandra Rajan, Hutchinson University Library, London, 1972.

# 5. பார்திதாசனும் இராபர்ட் ஃபிராஸ்ட்டும்

**இராம. குருநாதன்**

மண்பிடிப்பும் வேர்ப்பிடிப்பும் பிணைந்துள்ள நிலம் செழித்துப் பயன் தருவது போலச் சிந்தனை வளமும், மக்கள் நலமும் கொண்ட கவிதை, மனத்தைச் செழிக்கச் செய்வதாகும். அவ்வாறு செழிக்கத் துணையாக இருப்பவர்கள் செஞ்சொற் கவிஞர்கள் ஆவர். அத்தகைய திறன் பெற்ற கவிஞர்களுள் மேன்மைத் தமிழ்ப் பாவேந்தரும் மேலை நாட்டு இராபர்ட் ஃபிராஸ்ட்டும் குறிப்பிடத்தக்கவர்கள்.

பாவேந்தர், ஃபிராஸ்ட்டை விடப் பதினேழு வயது இளையவர். இருவருமே ஏறக்குறைய சம காலத்தவர் எனக் கொள்ளலாம். ஃபிராஸ்ட் இறந்த மறு ஆண்டில் பாவேந்தர் மறைந்தார்.

இருவரும் தத்தம் நாட்டின் மரபையும் மாட்சியையும் உணர்ந்து மாற்றியவர்கள்; புதுமைப் போக்கும் கொண்டவர்கள். சமுதாயம் இவர்களைப் பாதிக்க, இருவரும் சமுதாயத்தைக் கவிதைகளால் பாதிக்கச் செய்தவர்கள்.

## புதிய இங்கிலாந்து கவிஞரும் தமிழகப் புரட்சிக் கவிஞரும்

அமெரிக்காவில் உள்ள புதிய இங்கிலாந்து என்னும் பகுதியில் வாழ்ந்த மக்களுக்காகக் கவிதை யாத்து அமெரிக்க வானில் உலா வந்து ஒளி வீசிய கவிப்பறவை ஃபிராஸ்ட்.

புதிய இங்கிலாந்தில் வாழ்ந்த மக்களின் அன்றாட வாழ்க்கை, நம்பிக்கை, குறிக்கோள், ஒழுக்கம், பிற்போக்குத்தனம், அடிமைத் தளையில் கட்டுண்டமை முதலியவை ஃபிராஸ்ட்டைக் கவிதை எழுதத் தூண்டின. அவர் வாழ்ந்து பழகிய யாங்கி (Yankee) இன மக்களின் வாழ்வோவியங்கள் கவிதை வார்ப்பாயின.

யாங்கி இன மக்களின் எளிமையும், தூய்மையும், மறைத்துப் போசாத எளிய பேச்சும் கள்ளங்கபடமற்ற சிரிப்பும் ஃபிராஸ்ட் எழுதிய கவிதையின் ஆழங்கள், நுட்பங்கள் மெல்லிய உணர் இழைகள். இவ்வாறு மண்வாசனை நிறைந்து விளங்குவன ஃபிராஸ்ட்டின் கவிதைகள்.

பாவேந்தரின் வரவு தமிழகப் புரட்சி வரலாற்றின் உற வாகும். மக்களின் அறியாமை, மடமை, பழமைப்போக்கு, அடிமையாக அடங்கியமை முதலியவற்றை எதிர்த்துக் குரல் கொடுத்துப் பகுத்தறிவுப் பாதையில் பச்சை விளக்குக் காட்டியவர் பாரதிதாசன்.

ஃபிராஸ்ட்டும் பாவேந்தரும் தொழில்முறையில் ஆசிரியர் களாக இருந்தவர்கள். நெஞ்சில் உறுதியும் துணிவும் கொண்ட வர்களாய்த் திகழ்ந்தவர்கள்.

ஃபிராஸ்ட் வறுமையின் பிடியில் உழன்றவர்; ஆலையிலும் செருப்புத் தொழிற்சாலையிலும் கூடப் பணியாற்றியவர். பத்திரிகையாளராகவும் விளங்கியவர். பண்ணை விவசாயி யாகவும் இருந்துள்ளார். குடும்பச் சூழ்நிலையில் அதிகம் பாதிக்கப்பட்டவரும் ஆவார். அவர் குடும்பத்தில் அடுத்து அடுத்து மாண்டு போனவர்கள் பலர். வாழ்க்கையின் பல்வேறு கோணங்களைப் படம் பிடித்துக் காட்ட மேற்கூறிய சூழ்நிலைகள் உதவின.

தொடக்க காலத்தில் ஃபிராஸ்ட்டும் பாரதிதாசனும் அரசி யலில் வேட்கை கொண்டோராய் இருந்து, பின்னர் சமுதாயச் சிந்தனைக்குத் தங்களை ஈடுபடுத்திக் கொண்டவர்கள். அரசியலை விடச் சமுதாய நாட்டமிக்கவர்களாய் விளங்கினர்.

கவிதை என்பது வாழ்க்கையை ஒத்துக் காணுதலாகும் என்று கருதினார் ஃபிராஸ்ட்.* அத்தகைய வாழ்வின் ஒப்பு நோக்கை எளிமையான கவிதைகளில் வடித்துக் காட்டினார். கவிதை புனைந்துள்ளார் என்பதை விடக் கவிதையில் பேசியுள்ளார் எனச் சொல்வது பொருத்தமாக இருக்கும்.

பாவேந்தரும் ஃபிராஸ்ட்டும் கிட்டதட்ட ஒரே கோட்டில் உலா வந்த பெருங்கவிஞர்கள் எனலாம். எனவே இவர்கள் உணர்த்தும் பல்வேறு சிந்தனைகளின் ஒற்றுமை காணப்படுவது இயல்பே.

---

* Poetry is the clarification of Life, Quoted in Robert Frost by Elain Parry, p. 20

**கடவுட் சிந்தனையும் மதக் கொள்கையும்**

கடவுள் பற்றிய எண்ணங்கள் மனிதருக்குள்ளே வேறுபடுவது போலவே கவிஞர்களுக்குள்ளும் வேறுபடும். பாரதிதாசன் தொடக்க காலத்தில் ஆத்திகரே. கடவுட் பற்றுக் கொண்டிருந்த அவர், தொடக்கத்தில் மயிலம் ஸ்ரீ சுப்பிரமணியர் துதியமுது என்னும் பெயரில் சந்த அழகோடு மயிலத்து முருகனைப் பாடினார். அவர் மனத்தில் புரட்சி அரும்ப அரும்பப் பெரியாரின் சிந்தனை, கண்களைத் திறக்க இறைக் கொள்கையில் இருந்த நெருக்கம் நீங்கிப் போயிற்று. பகுத்தறிவுப் பகலவனால் அவர் பாதை மாறியது. கடவுள் பெயரால் இழைக்கப்படும் சமூகச் சடங்குகளைச் சாடினார். அறிவுக்குப் பொருந்தாத சடங்குகளில் மனிதன் இறங்குவதையும், உருவ வழிபாட்டில் உள்ளம் செலுத்துவதையும், மறுபிறவி எண்ணத்தில் நம்பிக்கை வைப்பதையும் கடுமையாக எதிர்த்தார். இத்தகைய புரட்சியினை இவரிடத்துக் கண்டறிந்த கவிமணி, “மதங்களிலும் பழைய ஆசாரங்களிலும் ஊறிக் கிடந்த மக்களிடையே இவருடைய பாடல்கள் ஒரு பெரிய மாற்றத்தையே உண்டுபண்ணியிருக்கின்றன”* எனக் கூறியிருப்பது உண்மையான கூற்றாகும்.

கடவுள் நம்பிக்கையில் தொடக்கத்திலிருந்த பற்றும் தெளிவும் பின்னர் அற்றுப் போயின; மதமும் கடவுளும் மனிதனை முட்டாளுக்குகின்றன,** என்றும் பெரியாரின் பகுத்தறிவு விழுதுகள் பாவேந்தரின் மனத்துள் ஊன்றின.

பாவேந்தர் கடவுளுக்கு உருவம் இல்லை எனக் கூறினாலும், ஒரு கடவுள் உண்டு என்பதை ஏற்றுக் கொண்டுள்ளதை எண்ணாமலிருக்க இயலவில்லை. ‘கடவுள் மறுப்பும், தன்மதிப்பும் (self respect) கொண்ட அவரை கடவுள் நம்பிக்கை உடையவர் எனவும், கடவுள் நம்பிக்கை அற்றவர் எனவும் இரு நிலைகளில் திறனாய்ந்து கூறுவர்.***

ஒரு கடவுள் உண்டு எனக் கூறுவாரேயானால், அதனை ஒரு சமரச நோக்கிற்காகவே சுட்டுவதாக எடுத்துக் கொள்ளலாம்.

---

* பாரதிதாசன், நறுமலர்க் கொத்து ப. 93

** மா. செல்வராசன், பாரதிதாசன் ஒரு புரட்சிக் கவிஞர் ப. 64

*** மேற்படி ப. 75.

ஒரு மதமும் வேண்டாம் உண்மையுடையார்க்கே* எனவும், உருவம் கடவுளன்று; உணர்வே கடவுள்** எனவும், ஊருக்கு உழைக்கும் உணர்வே கடவுள்***, எனவும் கூறியிருப்பதால் பகுத்தறிவு நோக்கில் கடவுள் என்பதனை மனித சமுதாய நல்லுணர்வுக்காக உழைக்கும் உணர்வுக்காகப் பயன்படுத்திக் கொள்கிறார் எனலாம்.

ஃபிராஸ்ட், தொடக்கத்தே கடவுள் பற்றுடையவரல்லர்; அவருடைய கவிதைகள் சிலவற்றில் கடவுட் கோட்பாடு தெளிவாக இருக்கிறது என்றும் கூற முடியாது. மதக் கோட்பாடு களிலும் அவர் தலையிட்டதில்லை. ஆனால் கடவுளும் மதமும் அவரால் திறனாய்வு செய்யப்பட்டுள்ளன. அவ்வகையில் தொடக்கத்திருந்தே கடவுட் கொள்கை மறுப்பாளராகவே (agnostic) தன்னைக் காட்டிக் கொள்ள முயன்றார்.

கடவுளைப் பற்றித் தொடக்க காலக் கவிதைகளில் யாதொன்றும் குறிப்பிடாதிருந்து, பின்னர் எழுதிய கவிதைகளில் ஓரளவு கடவுள் பற்றிய சிந்தனையை எண்ணியுள்ளார் என்பதையும் கூறவேண்டியிருக்கிறது. சிட்னி காக்ஸ் (Sidney Cox) இதுபற்றிக் கூறுகையில், இறையைப்பற்றி ஒன்றும் அறியாத நிலையில், ஃபிராஸ்ட்டால் தெளிவான கருத்தை எடுத்துரைக்க இயலவில்லை**** எனத் தெரிவிப்பர்.

கார்லோஸ் பேக்கர் (Carlose Baker) என்பவர், இயற்கையிடத்துக் கடவுளைக் காணலாம் என்றோ, அதில் உறைந்துள்ளார் என்றோ ஃபிராஸ்ட் கருதவில்லை***** என உரைப்பர்.

ஃபிராஸ்ட் திரையிடப்பட்ட அறிவு (Masque of Reason) என்னும் கவிதையில் மனிதன், இறைவன் இரண்டையுமே திறனாய்கிறார். கடவுள் மனிதனுக்குத் தீங்கிழைப்பதாகவே கருதுகிறார். ஜாப் (JOB) வழியேயும், அவனது மனைவி வழியேயும் மதம் பற்றியும், கடவுள் மறுப்பையும் வெளியிடுகிறார்.

---

* பாரதிதாசன் கவிதைகள் தொகுதி III ப. 183

** மேற்படி பன்மணித் திரள் ப. 115

*** மேற்படி ப. 162.

**** Quoted in Robert Frost and Subramania Bharathi by Subramanian p. 105

***** Robert Frost, Studies of poetry, p. 30

மனிதனின் உழைப்பே உலகின் முழுமைக்குக் காரணம் என்பதைத் தெரிவிக்கும் ஃபிராஸ்ட், மனித உணர்விற்கு மதிப்பளித்து உண்மை, உழைப்பு ஆகியவற்றின் வழியாகவே கடவுள் நிலை நிறுத்தப் பெறுவதையும் அக்கவிதையில் காட்டுகிறார். உண்மையே தன் விழைவு (My forte is truth) என்பதை வெளிப்படுத்துகிறார்.

பாவேந்தரின் கொள்கையில் துலங்கும் கடவுளுக்குரிய விளக்கம் ஃபிராஸ்ட்டின் கவிதையிலும் செறிந்த விளங்குகிறது.

இறைமை மனித இயற்கைக்கு மாறானது எனக் கருதும் ஃபிராஸ்ட் போலவே, பாவேந்தரும் மனித சமுதாயத்திற்கு இறைமை எதிரானதை எடுத்துக் கூறுவார். கடவுளைப் புறக்கணிக்கும் போக்கு (rejection of the Christian God/chronic tendency to tease) ஃபிராஸ்ட் கவிதைகளில் உண்டு.

மத நம்பிக்கையில் ஃபிராஸ்ட் முரண்பாடு கொண்டிருந்தாலும், பாவேந்தர் போலவே கடவுட் சிந்தனை ஓரளவு அரும்பியிருந்ததையும் காண முடிகிறது. திரையிடப்பட்ட கருணை (Masque of Mercy) என்றும் கவிதையில், ஃபிராஸ்ட் கடவுளை ஏற்கிறார் எனலாம். பாவங்களுக்குக் கடவுளே தீர்வு என்று கருதுகிறார்.

*நிலையிலா உலகில் நேயந் தருவது*
*கலைதவழ் அமைதியும் கனிந்த சாந்தமும்*
*நிதமும் காணும் விதமாய்க் கொடுமைகள்*
*இதமாய் மாறும் இறைவன் கருணையால்!!**

எனப் பாடியுள்ளார். இறைவனிடமிருந்து மனிதன் பெறுகிறான்; அவனே மீட்பவன்; தோல்வியில் கரையேற்றுபவனும் அவனே எனக் கூறுவதிலிருந்து அவரது கடவுட் மறுப்புக் கொள்கையைத் துணிவாக ஏற்றுக் கொள்ளவில்லை. வாழ்வு பற்றிய நோக்கில் இவர் ஓர் ஐயுறவாளராக (Sceptic) இருப்பது போலவே, சமயச் சிந்தனைகளிலும் அவ்வாறே உள்ளார் என்பது திறனாய்வாளர் கணிப்பு.

---

* I can see that the uncertainty
To which we act is a serenity
A cruelty, amounting to injustice
That nothing but god's mercy can assuage.

ஃபிராஸ்ட் இறைமை பற்றிய கோட்பாடுகளில் இருவித நிலைகளையும் கொண்டவரெனத் தெரிகிறது. பாரதிதாசன் தொடக்கத்தில் ஆத்திகவாதியாக இருந்து, பின்னர் நாத்திக வாதியாக மாறியதும் ஈண்டு எண்ணற்குரியது.

### அரசியல் நெறியும் சமூகப் புரட்சியும்

ஃபிராஸ்ட்டும் பாரதிதாசனும் வாழ்ந்த காலம் அரசியலில் புரட்சியை விரும்பும் காலமாயிருந்தது. இந்திய விடுதலைக்கு முன் அவரது பாடல்கள் சிலவற்றில் தேசிய நீரோட்டம் கலந்திருந்தது. ஆனால் இந்திய அரசியல் போக்கு அவரை மிகுதியாக ஈர்க்கவில்லை. தென்னகத்தில் நிலவிய திராவிட உணர்ச்சியே அவரைப் பெரிதும் ஆட் கொண்டது. திராவிடர் நலனுக்காக அவர் தீட்டிய கவிதைகள் மிகுதி; அவற்றில் கருத் தோட்டமும் மிகுதி. அவர் வாழ்ந்த பிரெஞ்சு ஆட்சியின் கீழ் அடங்கிய புதுச்சேரி வாழ்வும் கூட அவரது விடுதலை உணர்விற்கு வித்திட்டது. ''பாரதிதாசன் புதிய பாதையில் திரும்பியபோது (192·) தமிழகத்தின் நிலை பலவாறு தேக்கமுற்றிருந்தது...... மக்கள் அறியாமையில் மூழ்கிக் கிடந்தனர்''* எனக் குறிப்பிடுவர்.

இந்நிலையில் பாவேந்தர் மக்களுக்குப் புத்துணர்வு தர முயன்றார். ''விடுதலை உணர்ச்சியும் ஏற்றத்தாழ்வற்ற சமநிலையும் உலகம் ஒன்று என்னும் உணர்வும் பாவேந்தரின் உள்ளத்தினைப் புரட்சி மயமாக்கின''.** தமிழகத்தில் பகுத்தறிவும் தன் மானமும் கோலோச்சின. அரசியல் விடுதலையிலும் சமூக விடுதலையே அன்றைய முதல் தேவையாக இருந்தது. எப்பணிக்கும் அப்பணியே முதற்பணியாக வேண்டியிருந்தது. ''இந்திய சமூக அமைப்பைத் திருத்தி அமைக்க வேண்டுமானால் அரசியல் சீர் திருத்தத்திற்கு முன் சமூகச் சீர்திருத்தம் ஏற்பட வேண்டும் என்ற அம்பேத்கார் கொள்கையும் வலிமைபெறத் தொடங்கியது.*** ''பாவேந்தர் அடிமை மனப்பான்மையை ஒழித்துத் தன்னிச்சையான எண்ணத்தையும் பரந்த நோக்கத்தையும்

---

* மா. செல்வராசன், மு. நூ. ப. 32.

** மேலது ப. 33.

*** மேலது ப. 23

வளர்க்க முற்படவேண்டும் என்ற கருத்தில் வளரலானார்.* இதனால் பாரதிதாசனின் வெடித்துப் பிறந்த சிந்தனைகள் தமிழகத்தில் வேரூன்றின. பாவேந்தர் சமுதாயப் புரட்சியாள ராகவே கவிக்கோல் ஓச்சினார்**.

ஃபிராஸ்ட் அரசியல் பற்றியும் அதன் செயல்திறம் பற்றியும் அமெரிக்க மண்ணில் பேசியவர். முப்பதுகளில் அமெரிக்க அரசியலில் முற்போக்கு வேண்டிக் கவிதையில் புதிய நம்பிக் கைகள் தளிர்விட்டன. புதிய உண்மைகள் பல புலப்படலாயின. ஃபிராஸ்ட் தன் காலத்தில் ஈடு இணையற்ற கவிஞராகவே வளரத் தொடங்கினார்.

ஃபிராஸ்ட், பழமைவாதியாக இருப்பினும், சீர்திருத்தப் போக்கில் உறுதி கொண்டவராக இருந்தார். அமெரிக்க அரசை ஆண்ட முன்னோடியான பிராங்க்ளின் ரூஸ்வெல்ட் கொள்கைக்கு எதிராகப் புரட்சிக்குரல் கொடுத்தவர். இதனை வடிவமைந்த நிலம் (Built Soil) என்ற கவிதை உணர்த்தும். இதில் ரூஸ்வெல்ட் காலச் சமூக அரசியல் பொருளாதாரக் கொள்கைகளையும், உள் நாட்டுப் பண்புகளையும் எடுத்துரைத்து அன்றைய அரசியல் போக்கையும் சோசலிசத் தன்மையையும் கண்டித்தவர். இவர்,

> ''குடியாட்சியின் நிலையிலிருந்து எதையும் எழுதுகிறேன் உணர்வின் நிலையில் உணர்ந்ததை எழுதுகிறேன்; இந்த மண் எப்போதும் என்னுடைய எலும்பில் உணர்வாக உறைந்திருப்பதாகவே கருதுகிறேன்''.***

என்று ஒரு சமயம் நேர்முகப் பேட்டி ஒன்றில் தெரிவித்துள்ளார்.

> ''தான் சரியென்று நினைத்ததை எவருக்கும் அஞ்சாமல் பின் விளைவுகளைச் சிறிதும் கவலைப்படாமல் எவன் எழுதுகிறானோ அவன்தான் உண்மைக் கவிஞன்; பாரதி தாசனிடம் இப்பண்பு முனைப்பாகவே இருந்தது''****

---

* பாரதிதாசன் மலர், சுடர் ப. 180.

** மா. செல்வராசன் மு. நூ. ப. 23.

*** Interview with Robert Frost, Quoted in Studies of Poetry p. 54.

**** புதுவைக் கல்லறையில் புதிய மலர்கள். ப. 50.

என்று பாரதிதாசனைத் திறனாய்வது போன்றே ஃபிராஸ்ட்டை யும் திறன் தெரிந்து மகிழலாம்.

ஃபிராஸ்ட் அரசியல் போக்கில் துணிவுமிக்கவராய் இருந்துள்ளார்; தன் கருமத்தை யாருக்கும் அஞ்சாமல் எடுத் துரைக்கும் கவிஞராய் விளங்கினார்; தனிமனித உணர்வு பறிக்கப் படக் கூடாது என்றார்; மனிதனுக்கும் சமூகத்திற்கும் உள்ள உறவைத் தீர்மானிக்கத் தனிமனித அறிவும் கட்டற்ற போக்கும் வேண்டும் என்பது அவரது கவிதையின் எதிரொலிகளில் ஒன்றெனலாம்.

பாவேந்தர் சமூகத்தை அணுகிய முறையும், ஃபிராஸ்ட் அணுகிய முறையும் ஒரே இலக்கை நோக்கியவை. எனினும் உணர்த்திய கோணங்கள் வெவ்வேறானவை. இருவருமே மக்களுக்குச் சமநிறை வேண்டும் என்று குரல் கொடுத்தவராவர். பாவேந்தரிடம் இப்பண்பு தீவிரமாக விளங்கிற்று. ஃபிராஸ்ட்டிடமோ மெல்லத் தலை எடுத்தது.

யாவருக்கும் சமநீதி கிடைக்க வேண்டும்; சமூகத்தில் பொருளாதார மாற்றம் உருவாக அரசியலில் நடுநிலைமை (Moderation) வேண்டும் என்பது ஃபிராஸ்ட் சமூகக் கொள்கை களில் ஒன்று. சமுகத்தில் நிரந்தரமான சிக்கலுக்குக் காரணம் சமநீதி இல்லாமையே என்பர். சமுதாய மாற்றமும் புரட்சி இயக்கமும் பெரிதும் ஏழை பணக்கார வேற்றுமையைச் சார்ந் துள்ளன. எந்த ஒரு சமூகத்திலும் இத்தகைய வேறுபாடு தீமை தருவதாகும் என்பதை உணர்ந்தவர். எல்லோரும் ஓர் குலம்; எல்லோரும் ஓர் நிறை; எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்னும் பாரதியின் சிந்தனையை ஃபிராஸ்ட்டிடம் காண்கிறோம். சமநிலை யாளன் (An Equalizer) என்னும் கவிதையில்,

செல்வம் தொலைவழிச் சேர்த்திட் டாலும்
மல்கும் எண்ணம் மக்கள் நலமே!
ஏழை நெஞ்சில் என்றும் இல்லை
ஊழ்படு களவே! ஓங்குக சமநிறை*

என்னும் கருத்தை மொழிவர். அரசு வழியாக அனைவருக்கும் சமநீதி கிடைக்க வேண்டும் (Egalitarian distributive justice)

---

* And when get too far apart in wealth
It was his idea that for the public health
So that the poor won't have to steal by stealth
We now and then should take an equalizer.

என்பதைத் திரையிடப்பட்ட கருணை(Masque of Mercy) என்னும் கவிதையிலும் தெரிவிப்பர்.

ஃபிராஸ்ட் சமநீதியை விரும்பினாலும் வன்முறை போன்ற ஒரு தீவிரமான புரட்சியில் அவரது சிந்தனை செல்லவில்லை. தனிமனித சுதந்திரம் சமூகத்தை உணர்த்தக் காரணமாகும் கட்டமைப்பில் (Collectivism) உள்ளோர் தங்களைத் தியாகம் செய்ய வேண்டும் எனப் புரட்சியாளர் கூறுவதை இவர் ஏற்கவில்லை.*

**தனியுடைமையும் பொதுவுடைமையும்**

மெல்ல வளரும் சமூக மாற்றத்தை விரும்பினார் ஃபிராஸ்ட். திடீர்ப் புரட்சியை வெறுத்தார். சமுதாயப் புரட்சியாளர் என்ற பெயரில் சமூகத்தில் ஊடுருவிய புல்லுருவிகளின் போக்கைக் கண்டித்தார். அவர்கள் சமுதாய வீதிகளில் போலிகளாகவும். திறமையற்றவராயும், செயல்திறன் அற்றவராயும் இருப்பதைச் சாடினார். திடீரென்று புரட்சி விரும்பும் மனப்பான்மை கொண்டோரையும் உடனடி விளைவை எதிர்பார்ப்போரையும் திரையிடப்பட்ட அறிவு (Masque of Reason) கவிதையில் திறனாய்கிறார்.

வன்முறையில் உருவாகும் முழுப்புரட்சியில் (Total Revolution) நம்பிக்கை கொள்ளாத ஃபிராஸ்ட் மார்க்சிய புரட்சியில் எண்ணங் கொள்ளவில்லை. உருசியப் புரட்சியைக் கண்டித்தவர் அவர். உருசியமக்களையும் உருசியாவையும் ஏற்றுப் போற்றும் மனப்பான்மை அவரிடத்து இருந்ததில்லை. புதிய இங்கிலாந்துப் பகுதியின் அன்றைய போக்கிற்கு ஏற்ப உருசியத் திட்டங்களை எதிர்த்துவந்தவர்.

தான் புரட்சி மனங் கொண்டதில்லை எனக் கருதும் அவரே, தனிமனிதப் புரட்சியை (one man revolution) விரும்பி ஒரு பாடலில் எடுத்துக் கூறியுள்ளார்.** அறிவு, அறம், கலை ஆகிய இவை தனிமனிதச் சிந்தனையின் உருவாக்கமே என்பார் ஃபிராஸ்ட். தனியரசு போக்காத நோயை நானே தவிர்க்கின்ற பேறு பெற்றால் மகிழ்வேன்*** என்று பாரதிதாசன் கூறுவது இவ்விடத்தில் எண்ணிப் பார்க்கத்தக்கது.

---

* Robert Frost, Studies of Poetry, p. 125.

** I bid you to a one man revolution
The only revolution that is coming

*** பாரதிதாசன் பாடல்கள், ப. 77.

பாரதிதாசன் சமுதாயப் புரட்சியைப் பொதுவுடைமை வழியே கண்டவர். ஆயின் பொதுவுடைமையைச் சில சூழ்நிலைகளில் திறனாய்வும் செய்துள்ளார். வரிசை கெட்ட ருசிய நாடு என்ற பாடலில், உருசியாவில் ஏழைகள் இல்லை என்று கூறும் இழிந்த அறிவினர் இதனை எண்ணி அடங்கிவிட வேண்டும்* என்று பாடினாலும் பொதுவுடைமைச் சோலையில் பூத்து மணங்கமழ்வதை அவரது பல பாடல்கள் காட்டும்.

உழைப்பில் உயர்வு

சமுதாயத்தில் ஏழை—பணக்காரர் வேற்றுமை களையப்பட வேண்டும்; உண்மை உழைப்பே உயர்வடைய வேண்டும் என்பதில் தன் முனைப்பாக இருந்தவர் பாவேந்தர். தொழிலாளர் உயர்வடைய வேண்டும்; ஏழை பசி நீங்கிச் சுகமுற வேண்டும் என்பது அவரது கொள்கைகளில் ஒன்று.

சமுகத்தில் உயர்வு தாழ்வு வகுக்கும் மடமை, மண்ணிலிருந்து மறைய வேண்டும் என்பது கவிஞரின் தணியாத ஆசையாகும்.

உண்ண உடுக்க உறைய நுகராும்
மண்பொருள் சரிநிகர் மக்கள் பொதுவெனச்
சட்டம் செய்வதாம்**

என்பது கவிஞரது அவா.

"சாதியம் தேசியம் என்னும் குறுகிய நோக்கினை விட்டு, உழைக்கும் வர்க்கத் தத்துவம் என்ற நிலையிலிருந்து காண்பார்க்குச் சமூகச் சீர்திருத்த இயக்கங்களின் வரலாற்றுப் பாத்திரம் புலனாகும்"*** என்பர். இந்த நோக்கில் ஃபிராஸ்ட்டும் பாரதிதாசனும் அடங்குவர். இருவருமே உலகத் தொழிலாளர் ஒன்றுபடக் குரல் கொடுத்தவர்கள்.

தொழிலில் பற்றும் பக்தியும் வேண்டும்; வாழ்க்கையைச் செம்மையாக்க உழைப்பாளர்களால் மட்டுமே இயலும் என்பதைத் தெரிவிக்கும் ஃபிராஸ்ட், பிறரை மதித்துப் பழகும் பெருவாழ்வை விரும்புபவர்.

பாவேந்தர் கொண்டிருந்த தன் மதிப்புத் தன்மையை ஃபிராஸ்டிடமும் காண்கிறோம். மனித நலம் பற்றிக் குறிப்பிடு

* (குயில் பாட்டு 21-1-60) நாள் மலர்கள் பக். 40-41.

** பா. ப. ப. 34.

*** நறுமலர்க் கொத்து, ப. 48.

கையில், மனிதனால் உருவாக்கப்படும் அனைத்தும் உழைப்பால் உயர்ந்தது; அழகு செறிந்தது என்பதையும் எண்ணுகிறார் ஃபிராஸ்ட்.

மனிதனே உலகை முழுமையாக்க முயல்பவன்; அவனது உழைக்கும் கரங்களே உலகை ஓர் ஒழுங்கிற்குக் கொணரும். உழைப்பின் அருமையை 'பன்னிலப் பரப்பு' (There Are Roughly Zones) என்னும் கவிதையில், மனிதனின் கை மென்மைச் சோலையை உண்டாக்குவது; அதுவே வலிய நெடுமதிலையும் ஆக்கவல்லது; அவனது கைகளால் எல்லாமே பொலிவுறும் எனத் தெரிவிப்பர்.

புரட்சிக்கவி என்னும் பாவேந்தரின் கவிதையில், உதாரன் நாட்டுமக்களிடம் இறுதியாகப் பேசும் பேச்சில்* உழைப்பாளர் திறன் உரைக்கப்படுவதை ஃபிராஸ்ட்டின் மேற்கூறிய கருத்தினடிப்படையில் பொருத்திக் காணலாம்.

ஒவ்வொரு துளியிலும் கண்டேன்
இவ்வுலகு உழைப்பவர்க் குரிய தென்பதையே**

எனவும் பாவேந்தர் குறிப்பிட்டுள்ளமை காண்க.

உழைப்பிற் காணும் இன்பம் உவமையில்லா இன்பம் எனலாம்; உழைத்து அதனால் முழுப்பயன் அடைந்தால் அதுவே பேரின்பம்.

அறுவடை (Mowing) என்னும் கவிதையில் ஃபிராஸ்ட், அரிவாள் தன்னை நோக்கிப் பேசுவதான உத்தியில் உழைப்பின் இனிமையை உரைப்பர்.

உழைப்பின் அருமை தெரியாது எப்படியெல்லாமோ செல்வம் பெறுவாரை எண்ணிப் பார்க்கிறார் ஃபிராஸ்ட். அரிவாள், தன் தொழிலை மேற்கொள்வதிலேயே இனிமை காண்கிறது. 'உண்மை ஒன்றே உழைப்பவன் காணும் இனிய கனவு'*** என்பதைக் கவிஞர் அதன் வழியே தெரிந்து கொள்கிறார். கடின உழைப்பின் உயர்வை மதிக்கிறது அப்பாடல். மனிதனுக்கு இனிய கற்பனை மிதப்பானது; அது கனவுலகு; அக்கனவுலகைக் காட்டிலும் மிக இனிமையானது கடின உழைப்பு என்பது பெறப்படும் செய்தி ஆகும்.

---

* பா. க. தொகுதி I ப. 32.

** பா. க. தொகுதி II ப. 47.

*** 'The Fact is the Sweetest Dream that Labour knows' Mowing, line 13.

**உலகளாவிய சிந்தனை**

கவிஞரின் பொதுநலப் பார்வை உலகை அளப்பது. மனித நேயம் ஒரு குறுகிய வட்டத்துக்குள் சுருங்கி விடுவதன்று. மனிதருக்குள் வேற்றுமை கூடாது; அவர்களுக்குள் குறுக்குச் சுவர்களோ, தடுப்பு வேலிகளோ, எல்லைக்கோடோ இருக்கக்கூடாது என்பதே ஃபிராஸ்ட் கொள்கை. இதனைச் சுவரைப் புதுப்பித்தல் (Mending Wall) என்னும் கவிதையில் தெரிவிப்பர். ஃபிராஸ்ட் வீதி கடந்து, ஊர் கடந்து, நாடு கடந்து பரந்து விரியும் மனித உள்ளங்களை அக்கவிதையில் காட்ட விழைகிறார். அக்கவிதை உலகளாவிய சிந்தனையின் ஊற்று.

கவிஞருக்கும் அண்டைவீட்டானுக்கும் நடக்கும் உரையாடலாக அமைகிறது அப்பாடல். இதில் ஒருவர் இளைஞர். இன்னொருவர் விவசாயி.இளைஞராகிய கவிஞர் புதுமையின் அடையாளம். விவசாயியோ மரபின் ஆணிவேர். ஒவ்வொரு வசந்த காலத்தின் போதும் கவிஞரும் விவசாயியும் தத்தம் சொத்தினைப் பாதுகாக்க வேண்டிக் குறுக்குச் சுவர் எழுப்புவது பற்றிப் பேசுகிறார்கள். அண்டைவீட்டு விவசாயி சுவர் அமைப்பதில் நாட்டங் கொண்டவன்; அதற்கான காரணத்தைக் கூட விளங்கிக் கொள்ளாத அவன், அவன் தந்தை எப்போதோ சொல்லிய, ‘நல்ல வேலிகளே நல்ல அண்டை வீட்டாரைப் பெற்றுத் தரும்’ (Good fences make good neighbours) என்ற தொடரைத் தாரக மந்திரமாக எண்ணி வருபவன். கவிஞராகிய இளைஞனுக்குச் சுவர் எழுப்புவதில் விருப்பமில்லை. கவிதை முடிவில் இருவருமே தத்தம் வீட்டெல்லையில் சுவர் எழுப்பிக் கொள்கிறார்கள். காரணம் ‘நல்ல வேலிகளே நல்ல அண்டைவீட்டாரைப் பெற்றுத்தரும்’.

இக்கவிதையில் சுவர், குறியீடாகத் தேசியம், வகுப்பு, பொருளாதாரம், சமூகம், இனம், மதம் ஆகிய தடுப்புச் சுவர்களையே குறித்து நிற்கும்.

உலகம் உன்னுடையது என்னும் பாரதிதாசன் பாடலில், மனிதன் எழுப்பியுள்ள சுவர்களைக் கடந்து உலக மக்களை ஒருங்கிணைக்க வேண்டும் என எண்ணுவதைக் காண முடிகிறது.

> உன்வீடு உனது பக்கத்து வீட்டின்
> இடையில் வைத்த சுவரை இடித்து
> வீதியில் இடையில் திரையை விலக்கி
> நாட்டொடு நாட்டை இணைத்து மேலே
> ஏறு...*

---

* பா. ப. தொகுதி I, ப. 149.

என்று கூறுவது, ஃப்ராஸ்ட் போலக் குறியீடாகக் காட்டாது கருத்தை நேராகத் தெரிவிக்கும் பாணியில் அமைந்து கவிஞரின் குறிக்கோளைப் புலப்படுத்துகிறது.

உலக மக்களை ஒன்றுபடச் செய்யும் இணைப்புப் பாலமாகக் குறுக்குச் சுவர் அற்ற நாட்டெல்லைகளைக் கருதும் போக்கை இரு கவிஞரிடமும் காணலாம்.

**இயற்கையும் மனிதனும்**

இயற்கையைப் பாடுவதில் கவிஞர்கள் ஒன்றுபடுவதும் வேறுபட்டு நிற்பதும் இயல்பு. இயற்கையைத் தாயாக—தெய்வமாக வழிபடுவது ஒரு வகை. இயற்கை மனிதனுக்குப் பாடம் புகட்டுவதாக—பின்னணியாக இருப்பது ஒரு வகை. இயற்கையின்மீது வெறுப்புக் கொள்வதும் கூட அப்பின்னணியில் அடங்கும்.

இயற்கையை மனிதனுக்குத் தொடர்புபடுத்திக் காட்டும் கவிஞர்களே மிகுதி. இயற்கையைப் பாரதிதாசன் 'அழகின் சிரிப்பாகக்' கண்டவர். அழகுதனைக் கண்டேன்; நல்லின்பம் கண்டேன் எனப் பாடியவர். இயற்கை அரங்கில் காணும் எல்லாமே புலனின்பம் நிறைத்தலால் அதில் நல்லழகு வசப்படத் துன்பம் இல்லை என உணர்த்தியவர்.

இயற்கையைப் பற்றிய ஃப்ராஸ்டின் எண்ணம் பாரதிதாசனி லிருந்து ஒன்றியும் வேறுபட்டும் அமைந்துள்ளது. இயற்கையைப் பெரும்பாலும் மனித நிலைக்கு அப்பாற்பட்டே காண்கிறார் ஃப்ராஸ்ட். இயற்கை மனிதனுக்கு உறுதுணையாக இருந்த தில்லை என ஃப்ராஸ்ட் கருதுவதைத் திறனாய்வாளர்கள் எடுத்துக் காட்டுவர்; அவர் இயற்கைக் கவிஞர்தானா? இல்லையா? என்பதையும் திறனாய்ந்துள்ளனர்.*

இயற்கை அரங்கில் மனிதன் நிலை என்பது ஃப்ராஸ்ட் தரும் இயற்கை பற்றிய சிந்தனை. 1952இல் தொலைக்காட்சிக்கு அளித்த பேட்டியிலிருந்து அவர் இயற்கைக் கவிஞர் அல்லர் எனவும், மனிதனைப் புலப்படுத்தாமல் அமைந்தவை இரண்டே கவிதைகளாம் என்றும் தன் கருத்தை வெளிப்படுத்தி இருப்பதை அறியலாம்.** அவர் பார்வையில் அவர் இயற்கைக் கவிஞராக

---

* Raghul Tilak, Robert Frost, p. 24.

** Robert Frost, A collection of critical Essays.

இல்லாமல் இருக்கலாம். ஆனால் இயற்கையின் ஆட்சியை அவரது கவிதைகளில் காணலாம்.*

இயற்கையின் ஊடே அல்லவா மானிடப் பண்புகளைக் காண இயலும்!

ஃபிராஸ்ட் தான் வாழ்ந்த புதிய இங்கிலாந்தின் ஒவ்வொரு பகுதியையும் இயற்கைப் புனைவில் கருதியுள்ளார். அவர் வாழ்ந்த பாஸ்டன் வடக்குப் பகுதியின் இயற்கைக் காட்சி அவரது கவிதைகளுக்குப் பின்னணியாயிற்று.

பாரதிதாசனின் இயற்கைப் பாடலில் காட்சி இன்பம், கருத்தின்பம் ஆகியன ஒருசேர இருப்பது போலவே, ஃபிராஸ்ட்டின் கவிதைகளிலும் இருக்கக் காணலாம். இயற்கைத் தேவியால் இவ்வையம் நடப்பதாகக் கூறுவர் பாவேந்தர். காலைப்பரிதி, கடற்பரப்பு, ஒளிப்புனல், சோலை, மலர்கள், மாலைப் பொழுதின் மேற்றிசை வானம், மரக்கிளையில் அமரும் கிளிகள் ஆகிய கண்ணிற்பட்ட வண்ண அழகு அவருக்குக் கவிதை தந்தது. 'எங்கெங்குக் காணினும் சக்தியடா' எனச் சொல்ல வைத்தது.

வசந்தகால வேண்டுதல் (A Prayer in Spring) என்னும் கவிதையில் எல்லா இன்பங்களையும் பெறுதற்கு இறைவனிடம் இறைஞ்சுகிறார் ஃபிராஸ்ட். மலர்களில் சோலைகளில், குயில் தரும் ஓசையில் இனிமை சேரவேண்டும்; அவற்றின் வழி இன்ப முற வேண்டும் எனக்கூறும் ஃபிராஸ்ட் இயற்கையை இங்கு இன்பந்தரும் சக்தியாகவே காண்பதாகக் கொள்ளலாம். அழகில் இன்பம் துய்ப்பதை வேண்டி நிற்கும் அவர்,

> இனிய இயற்கையே!
> மலர்களின் காட்சியில் மனமகிழ் வெய்தவை!
> ஏலா வெண்ணம் எமக்கினி வேண்டா!
> அறுவடை பற்றிய ஐயமேன்; நிறைவளி!
> பெறுவ துன்னிடம் பேணும் வசந்தமே**

எனப் பாடுகிறார்.

---

* Raghul Tilak. op. cit, p. 24-25.

** Oh, give us pleasure in the flowers to-day
And give us not to think so far away
As the uncertain harvest; keep us here
All simply in the Springing of the year.

**இயற்கையின் மறுபக்கம்**

மலர்களிலே தளிர்கள் தம்மில் தொட்ட இடம் எலாம் கண்ணில் தட்டுப்படும் அழகை வியக்கும் பாவேந்தரைப் போல இயற்கையை உணர்த்தினாலும், ஃபிராஸ்ட் அழகுணர்ச்சிக்கு அப்பாற்பட்டு விளங்குவதாகவே இயற்கையைக் கண்டவர். வெறும் அழகுணர்ச்சி சில மணித்துளிகளே என்பார். இயற்கை, புலனுகர்விற்கே என்ற வேர்ட்ஸ் வொர்த்தின் கருத்தை ஏற்ப வரல்லர் ஃபிராஸ்ட். வேர்ட்ஸ்வொர்த் அக்கொள்கைக்கு வேறானவர்.

ஃபிராஸ்டின் இயற்கை பற்றிய எண்ணங்கள் கசப்பான இனிப்பு மாத்திரைகள் எனலாம். இயற்கையின் ஒவ்வொரு காட்சியின் விளிம்பிலும் ஏதாவது ஒரு தடை அல்லது ஓர் இடர்ப் பாடு இல்லாமல் இருப்பதில்லை என்பது அவரது எண்ணம்.

மனித வாழ்க்கைக்கு ஓர் அறைகூவலாய் இயற்கை இருப்பது தான் அதற்குக் காரணம் என உணர்த்துவர். இயற்கை தாயு மல்லள்; கொடை தருபவளும் அல்லள்; மனிதர்க்கு எந்த நன்மை யையும் அது தருவதில்லை. அதன் தோற்றம் அழகும் அமைதியும் தருவதாக இருக்கலாம். ஆனால் அகத்தில் பகையினை ஊட்டி அச்சம் விளைவிப்பது; பகைமையைப் பார்வைக்குப் புலப்படுத் தாமல் பதுக்கி வைத்திருப்பது; அது திடீரென்று தன் கோரப் பற்களைக் காட்டிவிடும் என ஃபிராஸ்ட் கருதினார். இவ்வாறு கருதுவதற்கு அவருடைய தனிப்பட்ட வாழ்வும் காரணமாய் இருந் திருக்கலாம்.

இயற்கை நட்புடையதன்று; அந்நியப்பட்டது; மனிதன் அதனை எதிர்த்துப் போராட வேண்டியவனாகிறான் என்பது அவரது கருத்து.

காற்றில் இலை எழுப்பும் ஒலியும் கூடத் துன்பந் தருவ தாகவும், தன் வீட்டின் சன்னலருகே மரக்கிளையில் அமர்ந்து ஓயாது குரல் கொடுக்கும் பறவையின் ஒலிகூடப் பகையாவதை எண்ணி விரட்ட நினைப்பதையும் அவரிடம் காண முடிகிறது.*

மனிதனுக்கு முரணாக விளங்கும் காட்சிகளே இயற்கையில் மிகுதி எனக் கருதும் ஃபிராஸ்ட், இயற்கை மனிதனைப் புறத்தே நிறுத்தி வைத்திருப்பதாக உணர்த்துவர். இயற்கை மனிதனி லிருந்து விலகியே நிற்கிறது. அது மனிதனுக்கு அமைக்கப்பட்ட தடுப்புச்சுவர் என்றே அவருக்கு எண்ணத் தோன்றுகிறது.

---

* Bereft, Minor Bird ஆகிய கவிதைகளின் கருத்து.

மலைகூட ஃபிராஸ்ட்டின் பார்வைக்கு வெறுப்பாகத் தோன்றுகிறது. திரும்பிடம் (Turn out) என்ற கவிதையில் மலையானது நிலமென்னும் புத்தகத்தைப் பார்க்க இயலாதவாறு தடுக்கிறதே எனக் குறித்துள்ளார். மலையில் (In the Mountain) என்ற கவிதையில், ஒரு கிராமம் உருவாகி வளர்வதற்குத் தடையாக, நிலப்பரப்பை மலை அடைத்துக் கொண்டு நிற்கிறதே எனச் சுட்டுவர். இவற்றைக் காணும்போது இயற்கையில் அவருக்குள்ள வெறுப்புணர்ச்சியை ஓரளவு உணர முடிகிறது. இயற்கையில் அழகுணர்ச்சியைக் காண அவர் மனம் மறுக்கிறது.

பாவேந்தர் இயற்கையில், இன்புறும் கவிஞரேயாயினும், மக்கள் நிலையை இயற்கையில் வைத்துக் கூறுவது அவருக்கு உடன்பாடு. அதனை உள்ளுறையாக வைத்துப் பாடுவதையும் காணலாம். ஃபிராஸ்ட் மறைமுகமாகக் கூறும் போக்கை இயற்கை பற்றிய காட்சியில் எடுத்தாள்வர். ஃபிராஸ்ட்டின் இயற்கைப் பாடல்களில் நுட்பமாக உணர்ந்தாலன்றிப் பொருள் துலங்குவதில்லை. பாரதிதாசனிலோ கூற வரும் செய்தி வெளிப்படையாக நின்று கவிதைக்கு அழகு சேர்க்கும்.

பாரதிதாசன், "இயற்கையைத் தெய்வ வடிவமாகக் காட்டும் போக்கை விரும்பவில்லை. இயற்கையைப் பௌதிகக் கருத்தாகவே காண்கிறார்"* எனத் திறனாய்வாளர் ஒருவர் கூறியிருப்பது சிந்தனைக்குரியது.

**காட்சியின்பமும் கருத்தின்பமும்**

ஃபிராஸ்ட்டும் பாவேந்தரும் இயற்கைப் பொருள்களில் நிலவு, விண்மீன், கடல் முதலியவற்றை மிகுதியும் கவிதைகளில் ஆங்காங்கே குறித்துள்ளனர்.

புரட்சிக்கவியில் பாவேந்தர் நிலவின் அழகைப் பெரிதும் வியந்து போற்றுவர். நீலவான் ஆடைக்குள் உடலை மறைத்து வரும் நிலவு, தன் முகத்தை மட்டுமே காட்டி வருகிறது; அது முழு உடலையும் வெளிப்படுத்திக் காட்டினால் காதற்பெருக்கில் உலகோர் அழிவர் என்று உணர்ச்சி வயப்பட்டுப் பாடுவர். நிலா மெல்ல மெல்ல வானில் வெளிப்படுவது படம் பிடித்துக் காட்டப்படுகிறது.

---

* டாக்டர் நசீம்தின், பாரதிதாசன் பாடல்களில் இயற்கை, ப. 44.

ஃபிராஸ்ட்,அடிமையின் மரணம் (The Death of a Hired Man) என்னும் கவிதையில், நிலவு பற்றிப் பாடியுள்ளார். வானவெளியில் தோன்றும் நிலவு தன் உடலை ஓரளவு மறைத்துக் கொண்டு, தன் அழகால் ஈர்த்த வண்ணம் மலைப்பக்கம் செல்கிறது. ஒளியால் மலையின் மடியை ஒளிரச் செய்கிறது. மலைமகளோ நிலவிற்கு மேக ஆடை போர்த்துகிறது.

நிலவொளி மிச்சம் நீண்டது மேற்கில்
இலங்கொளி வானை இழுத்துச் சென்றே
குன்றவள் மடியில் கொண்டொளி பரப்ப
நின்றவள் நோக்கினள்; நீளாடை போர்த்தியே!*

எனப் பாடுவர் ஃபிராஸ்ட்.

புரட்சிக்கவியில் நிலவைப் பற்றிய காட்சி, பாவேந்தரை உலகப் பெருங்கவிஞராக எண்ணச் செய்கிறது** என்பர். ஃபிராஸ்ட்டின் மேற்கண்ட நிலவுக்காட்சி அவர் இயற்கை வருணனைத் திறன் மிக்கவர் என்பதைச் சொல்லவைக்கும்.

விண்மீன் பற்றிய காட்சியில் ஒன்றுபட்டும் வேறுபட்டும் கவிஞர்கள் விளங்குவதை அறியலாம். பாரதிதாசன் விண்மீனை நோக்குகிறார். விண்மீன்கள் ஒளி வீசுகின்றன. அவை விண்மீன்களா? அல்ல! உழைக்கும் ஏழை மக்கள் வெயிலில் ஓயாது பாதம் நோக நடந்து திரிந்த உழைப்பை வானம் பார்த்தது. ஏழைபடும் கொடுமையைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் அகத்தே கனன்று புறத்தே கொப்பளித்த கனற் கொப்புளங்களே அவை! பகலில் கண்ட காட்சிக்கு இரங்கி அந்திக்குப் பின் விண்மீனாகக் கொப்பளித்தது வானம்*** எனத் தெரிவிப்பர் பாரதிதாசன்.

விண்மீன்கள் (Stars) என்னும் கவிதையில் ஃபிராஸ்ட், மனிதனுக்கு அப்பாற்பட்டு இயற்கை விளங்கும் நிலையைக் குறிப்பால் உணர்த்துவர். மினர்வா சிலையில் வெள்ளை நிறப் பளிங்குக் கற்கள் உள்ளன. அவை ஒத்தன விண்மீன்கள். பளிங்கிற்குப் பார்க்கும் ஆற்றல் இல்லை. புலனால் காணும் திறனும்

---

* Part of the moon was falling down the west
Dragging the whole sky with it to the hills
It's light poured softly in her lap, she saw it
And spread her apron to it.

** சி. பாலசுப்பிரமணியன்; வாழையடி வாழை. ப. 67.

*** அழகின் சிரிப்பு: வான் 1-8.

கிடையாது. விண்மீன்கள் ஒளியுள்ளவேனும் அவற்றின் ஒளி பார்வையை அறியா விழிகளே! உணரா விழிகளே!

மனிதனின் அவலத்தை மிகத் தொலைவிலிருந்து ஓரளவு காண இயலுமாயினும், அவற்றால் மனிதனுக்கு ஒரு வழிகாட்டுதலும் கிடையா! அவை பேசாப் பொருள்! ஊமைகள்! அவற்றிற்கு விருப்போ வெறுப்போ கிடையா! மனிதரிலிருந்து வேறுபட்டவை. இவ்வாறு விண்மீன்களின் புற அழகினைப் படிமமாகக் கண்டு அவை மானிட வாழ்விற்குத் துணையாக இல்லாததை எண்ணுவர்.

விண்மீன் ஒளியோ வெண்பனி போலாம்
கண்கள் 'மினர்வா' கண்ணொளி போலே!
காணும் ஆற்றல் கண்பளிங் கில்லை!
பேணும் அன்பும் பெரிது மிலாமல்
வீணாய் உமிழும் வெறுப்பு மிலாமல்
விண்ணில் திரிவது வீணே யல்லவா!*

எனக் காட்டுவர் ஃபிராஸ்ட்.

விண்மீன் பற்றிய காட்சியில் கருத்துச் செலுத்திய இருவருமே ஒன்றுபட்டு விளங்குவதையும், வேறுபட்டு நிற்பதையும் மேற்கூறிய சூழ்நிலையால் அறியமுடிகிறது.

அழகின் சிரிப்பில் இயற்கையின் வெளிப்பாடு, பல நிலைகளில் எடுத்துக் காட்டப்படுகிறது. கவிஞர் தன் கூற்றில் ஆற்றினைக் காண்கிறார். புதுப்புனலாக—வெள்ளமாக சல சலத்து ஓடும் ஆறு, மணற்கரையை இடித்துச் செல்கிறது. அதன் கரையில் நின்ற ஆலமரத்தையும் அடித்துச் செல்கிறது. காட்சிப் பட வரும் இவ்வருணனையைப் பாடிய பாரதிதாசனைப்போல, ஃபிராஸ்ட்டும் தன் கூற்றில் ஆற்றுக் காட்சி ஒன்றை மலை (The Mountain) என்னும் கவிதையில் திறம்படக் காட்டுவர்.

புதியன காணப் புகுந்தேன் விடியலில்,
பதிந்தன கண்ணில் பசுமை வயல்கள்;
பார்க்கும் இடமெலாம் பச்சைப் புல்வெளி
ஆர்ப்பொடு வீழும் ஆற்றுநீர் கீழே

---

And yet with neither love nor hate
Those stars like some snow white
Minerva's snow white marble eyes
Without the gift of sight

கல்லொடு பொருது கலகலவெனவே
பொல்லாச் சண்டை போட்ட தாங்கே
வசந்த கால வருகையின் அறிகுறி
பசிய புல்வெளிப் பரப்பில் தெரிந்தது.
திட்டை மணல்வெளி சேர்ந்த மரத்தின்
பட்டை உரித்த படியே சென்றது*

என அக்காட்சியை இயல்புபடச் சித்திரிப்பர் ஃபிராஸ்ட்.

தென்றல் என்னும் பாவேந்தரின் கவியிலும், சீதக்காற்று (Thawing wind) என்னும் ஃபிராஸ்ட்டின் கவியிலும் காற்றின் ஆளுமை ஏறக்குறைய ஒரே மாதிரியாக எடுத்தாளப் பெற்றிருக்கிறது. காற்றின் ஆளுமையில் எழுது தாளும், எழுத்தாளனும் இடம் பெறுகின்றனர். ஒத்த உணர்வை இருவரிடத்தும் அத்தகு சூழ்நிலையில் காண முடிகிறது.

### மனித வாழ்வின் உருவகம்

இயற்கையை உள்ளுறைப் பொருளில் காணும் போதும், படிமமாக உணர்த்தும் போதும், கவிதை, அழகு பெறுகிறது; நுட்பத் திறனையும் அறிய முடிகிறது.

மனித வாழ்க்கைக்குரிய சிந்தனைகள் ஃபிராஸ்ட்டின் கவிதையில் நேரடியாக இடம்பெற்றதில்லை. அவர் பிறிது மொழிதலாகவே வாழ்வின் இயல்புகளைப் புலப்படுத்த விழைகிறார். வாழ்வு பற்றிய உண்மைகளை உருவகமாகவும் குறியீடாகவுமே வெளிப்படுத்துவர். இதை அவரே ஒத்துக் கொண்டிருக்கிறார்.**

மேற்கில் ஓடும் ஓடை (West Running Brook) என்னும் கவிதையில் ஃபிராஸ்ட் அலையை வாழ்வின் உருவகமாகவே

---

* When I walked forth at dawn to see new things
Where fields a river and beyond move fields
The river at the time was fallen away
And made a widespread brawl on cobble-stones
But the signs showed what it had done in spring
Good grass land gullied out, and in the grass
Ridge of sand, and driftwood stripped of bark.

** An Anthology of American Literature (Ed.) Eqbert S.Oliver, p. 380.
(I might be a synecdochest; for I prefer the synedoche in poetry)

உணர்த்தியுள்ளார். கணவன் மனைவி இருவரையும் மேற்கில் ஓடும் ஓடையைக் காணச் செய்து அதன்வழி அலை தரும் பாடத்தை உணர்த்த முற்படுகிறார்.

மருங்கினில் பாய்ந்து மடையாய்ப் பெருகி
விருட்டென நமக்கு மேலே ஓடிக்
கால்களி னிடையே கிளைகளைப் பரப்பி
நாற்புறம் நம்மை நலிவினில் ஆழ்த்தி
நம்மில் ஒடுங்கும் நதியாம் காலமே!*

ஓடையில் பாயும் அலை, வாழ்வின் பழைய சுவடுகளைப் பார்க்கிறது; பின்னோக்கிச் செல்கிறது. வாழ்வின் தேடல் அங்கே கிட்டுகிறது. மனித வாழ்வின் நிகழ்காலத்தில் நம்மோடு நெருக்கமாகிறது; அதனோடு இரண்டறக் கலந்தும் கரைந்தும் விடுகிறது. எந்நிலையிலும் அதனை ஏற்றுக் கொள்ள வேண்டி யிருக்கிறது. மனித வாழ்வு மறைந்தாலும் எஞ்சுதலும் தொடர்தலும் உண்டு போலும்! அந்த அலையின் போக்கில் மனிதன் எதிர்நீச்சலும் கொள்கிறான்; முறை வழிப்படுஉம் போக்கிற்கு ஆளாகிறான். இக்கருத்தின் அடர்த்தியை அக்கவி கொண்டுள்ளது.

பாவேந்தரின், கடல் என்னும் பாடலும் வாழ்விற்கு உருவ மாக விளங்குவதைச் சுட்டுகிறது. மனத்தில் அடங்கி எழும் ஆரவாரம் வேகமாகப் பெருகுவதையும், ஆழ்ந்தடங்கிய உணர் வால் மனம் அமைதி பெறுவதையும் அலை உணர்த்துகிறது. மனித வாழ்வு கடலலையாக நோக்கப் படுகிறது. ஆரவாரமும் அமைதியும் கொண்ட மனித வாழ்வு மனம் சார்ந்ததன் வண்ண மாகவும் ஆகிவிடுகிறது. இந்த நுட்பத்தைப் 'பெருநீரை வான் முகக்கும்; வான்நிறம் பெருநீர் வாங்கும்'** எனப் பாவேந்தர் உணர்த்துவர்.

வாழ்வின் தத்துவங்களை இயற்கை வழி உணர்த்தும் இயல்பு கவிஞர்களிடத்து உண்டு. நேர்முகமாக அல்லது மறை முகமாக இதனை உணர்த்துவர். வாழ்வில் உண்மை தேடலை யும் 'ஒன்று வேறாதல்,' (For once, then something) என்னும் கவிதையில் ஃபிராஸ்ட் உள்ளீடாக உணர்த்துகிறார்.

---

* It flows beside us in this water brook
Bur it flows over us, It flows between us
Go separate us for a panic movement
..............................
It is most of us.

** அழகின் சிரிப்பு, கடல், வரி 3/7-8

இருட்டான கிணற்றில் ஒருவன் தன் முகத்தைப் பார்க்கிறான்; உற்று நோக்க வேண்டியிருக்கிறது; நீர்ப்பரப்பில் ஏதோ ஒரு பொருள் தோன்றி மறைகிறது; மீண்டும் அவன் உற்று நோக்கி அறிய இயலாவாறு, திவலைகள் தோன்றின. இனி அதனை அவன் காண இயலாது. அந்தப் பொருள் என்ன என்பதிலேயே அவனது சிந்தனை சென்றது. உண்மைத் தோற்றமா? வெள்ளைக் கல்தானோ? மாயமா? வெறும் நிகழ்வு தானா? என்றெல்லாம் கேள்விகளை மனத்துள் எழுப்பியவன் விடைகாண இயலாது தவிக்கிறான்.

இந்தக் கருத்தின் அடிப்படையில் மனிதன் தேடும் வாழ்வின் உண்மையைக் குறியீடாக்குகிறார் ஃபிராஸ்ட். முதுமை, இறப்புப் பற்றியவற்றின் நிகழ்காலத் தேடலாகக் காட்டப்படுகிறது என்பர் திறனாய்வாளர்.

பாவேந்தர் 'இரட்டைப்பேறு' என்னும் கவிதையில் முதுமையையும் சாவையும் பற்றிய வாழ்வியல் உண்மைகளைத் தேடும் முயற்சியைக் காட்டியுள்ளார்.

சுவரில் பதித்துள்ள கண்ணாடியில் குழந்தை உருவம் தெரியக் கிழவி ஒருத்தி, கண்ணாடியைப் பார்த்துப் பேசுவதாக அமைந்தது அப்பாடல். தன் முதிய உருவத்தை அது காட்டாதது கண்டு முதுமையும் சாவும் வெறுமை; அவை ஒன்றே என்பதை அவளுள் உணர்த்தியதாக விளங்க வைக்கிறது அப்பாடல்.*

வாழ்க்கையின் உண்மைகளைப் பிரதிபலித்துக் காட்ட நீர்நிலையும், நிலைக் கண்ணாடியும் கவிஞர்கள் நெஞ்சில் வெளிப்பட்டுச் சிந்தனை அலைகளாகச் சிதறுகின்றன.

---

* சுவர்க் கண்ணாடியே சுவர்க் கண்ணாடியே
பிள்ளை உருக்காட்டும் பெருங் கண்ணாடியே
என்னுருக் காட்டா திருந் தென்ன
முதுமையும் சாவும் ஒன்றெனும் முடிபா?
என்று துடிக்கையில் ஈன்றவள் வந்தே
இரண்டும் என்உடைமை என்றெடுத்தாள்
எதிரில் நின்ற கிழவி
முதுமையும் சாவும் எனக்கென் றாளே

—(குயில் பாடல்கள், ப. 63.)

**உயிரின உருவகம்**

உயிரினங்களைப் பாடலில் எடுத்துக் கூறி அவற்றின் வழியே மனித எண்ணங்களையும் செயல்களையும் உணர்த்துவது கவிமரபு. விலங்கினையும், பறவையினையும் பாடலுள் படிமமாகப் படைப்பர்.* ஃபிராஸ்ட் கவிதைகளில் பல அத்தகையன. மனிதப் பண்புருவை உயிரினங்கள் மீது சாற்றியுரைக்கும் போக்கு (Anthromorphic Comparison) ஃபிராஸ்ட்டின் கவிதை இயல்பு. மனிதனை விலங்கோடும், விலங்கை மனிதனோடும் தொடர்பு படுத்திக் காட்டும் கவிப்பண்பு சுவையுடையது.

பாவேந்தர், விடுதலை வேட்கை உயிரின் வேட்கை, காக்கை, கிளிக்குஞ்சு கண்ட உலகம், வீட்டுக் கோழியும் காட்டுக் கோழியும், எறும்பின் தவம், புறாக்கள் முதலிய கவிதைகளில் மனித மன உணர்வுகளை உயிரினங்கள் வழிப் பொருத்திக் காட்டுவர். அவற்றில் நேரிடையாயும் குறிப்பாகவும் நுட்பமாகவும் எடுத்துரைப்பர்.

ஃபிராஸ்ட் விதியொழுங்குக் கட்டுப்பாட்டைத் துறையின் போக்கு (Departmental) என்ற கவிதையில் நகைத்திறம்பட எடுத்துக் காட்டுவர். அக்கவிதையில் எறும்புலகத்தைப் படைத்துச் சமூகத்தில் நடைமுறைக் கடுமையை எள்ளி நகையாடுவர். எறும்பின் ஒழுங்கு முறையான அதன் வாழ்க்கை அமைப்பைக் கொண்டு ஆட்சி அதிகாரங்களுக்கு இயைபுபடுத்தும் போக்குச் சுட்டப்படுகிறது. குருவாக இருந்து ஒருவனுக்கு இழைக்கும் மறைமுகச் செயல்கள் (Red Tapism) அக்கவிதையில் நுட்பமாக விளங்கும்.

எறும்பின் தவம் என்னும் பாரதிதாசனின் பாடலில் இரை தேடச் செல்லும் எறும்புகளைக் காட்டி அவற்றின் வரிசை, ஒழுங்கு மாறுபடாமை; ஆகிய இயல்புகள் வழிச் சிந்தனை செலுத்துவர். தடை எந்த உருவில் வந்தாலும் தன் போக்கில் கவனமாயிருத்தலை எறும்புக் கூட்டம் வழி விளக்குவர். அக்கவனம் எறும்புகளுக்கு மட்டுமா? அவற்றின் சுறுசுறுப்பும், ஒழுங்கும், குறிக்கோளும் மனிதர்களுக்குத் தேவை அல்லவா?

---

* Robert Frost Centinneal vol. II p. 165.

ஃபிராஸ்ட்டும் பாரதிதாசனும் உயிரினத்தை மனித உணர்விற்குப் பயன்படுத்திக் காட்டும் போக்கினை இதன்வழி அறியலாம்.

ஃபிராஸ்ட், கரடி (Bear) என்ற கவிதையில், மிகவும் அதிகமாகச் சிந்திக்கும் அறிவார்ந்த சிந்தனையாளனைக் கூண்டில் அடைபட்டக் கரடியாகக் காட்டுவர். விடுதலை உணர்வுடைய கட்டற்ற சிந்தனையாளனைக் கூண்டில் அகப்படாத—வெளியே இயல்பாகக் காணப்படும் கரடியாக உணர்த்துவர். மிகுந்த சிந்தனையாளன் அறிவார்ந்த மிருகமாக உள்ளான் போலும்!

பழக்கவழக்கம், மரபு ஆகியவற்றிலிருந்து சிந்தனையாளன் விலகிநின்றால் குழப்பவாதியாகி விடுவான்; அவன் அமைதி கொள்ள வழியில்லை; மனநோயாளியாகவோ, பேதையாகவோ மாறிவிடுவான் என அந்தக் கவிதையைத் திறனாய்ந்துரைப்பர்.* அறிவே பேதைமை என்று கூறவைத்துவிடுமோ, என்னவோ!

பாரதிதாசன், விடுதலை வேட்கை உயிரின் இயற்கை என்னும் கவிதை வழியே காட்டும் விடுதலை உணர்வு ஃபிராஸ்ட்டின் கவிதையிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. கறுப்பு நாயும் வெள்ளை நாயும் உரையாடுவதைப் போலமைந்த அப்பாடலில் வெள்ளை நாய் அடிமைத் தளையில் அடங்கிக் கிடப்பதையும், கறுப்பு நாய் விடுதலை வேட்கைக் கொள்வதையும் படம்பிடித்துக் காட்டுவது உயிரின உருவகத்திற்கு எடுத்துக்காட்டு.

வீட்டுக் கோழியும் காட்டுக் கோழியும் என்னும் கவிதையும் கோழிவாயிலாக விடுதலை உணர்வைக் காட்டும் உருவகப் பாடலாகும்.

**கவிதை உத்திகள் சில**

கவிஞர்கள் இருவரும் கவிதைக் கலை நுட்பத்தில் சிறந்தவர்களாய் உள்ளனர். கலை நுட்பமான பாடல்களால் அவ்விருவரும் ஒரே கோட்டில் உலா வருவோராய்த் திகழ்கின்றனர்.

இருவரிடத்தும் புரட்சி உள்ளம் காணப்பட்டாலும் மரபு வழிக் கவிதையில் சிந்தை செலுத்தியவர்கள். ஃபிராஸ்ட் வடிவத்திற்கு முதலிடம் தருவது போலவே, பாவேந்தரும் தந்துள்ளார். வடிவமே பொருளைத் தருவது; பொருள் வடிவத்தைத் தராது** என்பது ஃபிராஸ்ட்டின் கவிதைக் கொள்கை.

---

* Robert Frost (Ed.) James M. Cox, pp. 64-65

** Elaine Parry, op. cit. p. 25.

மரபு வழிப்பட்ட யாப்பை மிகவும் போற்றும் பாவேந்தர் புதிய கவிதை வடிவங்களிலும் பாடல் எழுதியுள்ளார்.

பாவேந்தரின் மரபு வழிப்பாட்டு ஓசை நிரம்பிச் செவியைக் குளிரச் செய்யும். ஃபிராஸ்ட்டும் ஓசைக்குச் சிறப்பிடம் தருகிறார். 'ஓசையில்லா யாப்பு, கீழே வலை கட்டாமல் டென்னிஸ் விளையாடுவதை ஒக்கும்' என்பது ஃபிராஸ்ட்டின் கருத்து.

உருவத்தை வெளிப்படுத்தும் உத்தி இருவரிடம் ஏறக்குறைய சமநிலையில் விளங்குகிறது. நிகழ்ச்சிகளை உரையாடலில் அமைத்துக் கவிஞரும் பொருளும் பேசுவதுபோல் காட்டும் நாடகப் பாங்கு பரவலாகக் காணப்படுகிறது. தன்னோடு ஒருவனை அழைத்துச் செல்வது போன்றோ, தான் காணும் காட்சியை அவனும் காணவேண்டும் என்பது போன்றோ நிகழ்ச்சிகளை உருவாக்கும் போக்கு இருவரிடத்தும் பொதுப்பட அமைந்துள்ள மற்றோர் உத்தி.

இருவருமே, பேச்சு மொழியைப் பயன்படுத்தியும், கொச்சை வழக்குகளைப் பயன்படுத்தியும் கவிதை யாத்துள்ளனர்.

### வரலாற்றில் நின்றவர்கள்

கவிஞர்கள் இருவரும் பல வகைகளில் ஒத்த நிலையினர்; வாழ்க்கையின் பரந்த வயலில் கவிதை வடிவு நடத்திய சொல் லேருழர்கள். வாழ்க்கையின் பல்வேறு கோணங்களை மக்களுக்குப் புரிய வைத்தவர்கள்; நெஞ்சில் பதிய வைத்தவர்கள். என் கடன், வாழ்க்கைப் போக்கில் மிதந்து செல்வதற்கல்ல; பாதையில்லாக் காட்டில் பயணம் செய்வதற்கே—சுவடுகள் பதியாத பாதையில் தடம் பதிப்பதற்கே என ஃபிராஸ்ட் கூறுவார். அந்த அளவிற்கு அவருக்குத் துணிவு இருந்தது.

தனிப்பட்ட வாழ்வில் சோகமே போர் மேகமாகச் சூழ்ந்து இருள் பரப்பி நின்றாலும்கூட, இருள் கிழித்துப் புறப்பட்ட அமெரிக்க மண்ணின் மைந்தராக ஃபிராஸ்ட் விளங்கியது போல, சமூகக் கொடுமைகளும், சாதி வேற்றுமைகளும், அடிமை விலங்குகளுமாக நிறைந்திருந்த அன்றைய இருண்ட வீடாக இருந்த தமிழகத்திற்கு, இந்த நூற்றாண்டின் தமிழ்ச் சமுதாயக் குடும்ப விளக்காகச் சுடர் வீசியவர் பாவேந்தர்.

காலம் வரலாற்றைப் படைக்கிறது. வரலாற்றை இவர்கள் படைத்திருக்கிறார்கள். இவர்களே கவிதை உலகிலும் வரலாறாய் நின்றவரும் ஆவர்.

# 6. பாரதிதாசனும் ஜீவனானந்ததாசும்

**தி. இராசகோபாலன்**

அடிமை இந்தியாவில் இரண்டு சுதந்திரக் குயில்கள் தோன்றின. தமிழகப் பூங்காவில் கூவிய குயில் பாவேந்தர் பாரதிதாசன்; வங்காளப் பூங்காவில் கூவிய குயில் ஜீவனானந்த தாஸ். இவ்விரண்டு குயில்களுக்கும் சங்கீதம் வெவ்வேறே தவிர, சாகித்யம் ஒன்றுதான். தந்தை பெரியாரின், மகாகவி பாரதியாரின் சமுதாயச் சிந்தனைகள் பாவேந்தருக்கு உரமூட்டியதைப் போல, இராசாராம் மோகன்ராய், இரவீந்திரநாத தாகூரின் சிந்தனைகள் ஜீவனானந்ததாசுக்கு உரமூட்டின. பௌராணிய மேகங்களுக்கிடையே திரிந்து கொண்டிருந்த படைப்பிலக்கியத்தை காலில் செருப்பில்லாமல் நடமாடிக் கொண்டிருந்த பாதசாரிகளின் மூச்சுக்காற்றாக ஆக்கிய பெருமை இருவருக்குமுண்டு. "நான் கொதிக்க விட்டிருக்கும் அண்டாவின் மூடியை இவன் திறப்பான்" என்று ஷா அப்துல் லத்தீப் தம்முடைய சீடராகிய ஸச்சலைப் பற்றிச் சொன்னார். அந்த வகையில் பார்த்தால், மகாகவி பாரதியார் கொதிக்க வைத்த அண்டாவின் மூடியைப் பாவேந்தர் பாரதிதாசன் திறந்தார்; கவியரசர் தாகூர் கொதிக்க வைத்த அண்டாவின் மூடியை ஜீவனானந்ததாஸ் திறந்தார் எனலாம். பாரதியாரின் வார்ப்பாகப் பாவேந்தர் திகழ்வதை நீதிபதி மகராசன் அவர்கள், "பாரதி உலகுக்களித்த ஒப்பற்ற முதற் பாடல் பாவேந்தர் பாரதிதாசனே" என்பார். குறுக்கும் நெடுக்குமாக வளைந்து வளைந்து கிடந்த சமகாலத்தை, பாரதிதாசன் (1891—1964) ஜீவனானந்ததாஸ் (1899 — 1954) எனும் இரண்டு பேரும் தட்டித் தட்டிச் சரி செய்ய முயன்ற சிற்பிளாவர்.

இரண்டு மகாகவிகளின் சீடர்களாகிய இவ்விரண்டு பேரும் தொடக்கத்தில் அடியெடுத்து வைத்தது என்னவோ ஆசிரியத் தொழிலில்தான். பாரதிதாசன் சமுதாயத்திற்காகப் பாடினாலும், அவர் சமுதாயத்தோடு இரண்டறக் கலந்துவிடவில்லை; எப்பொழுதும் உணர்ச்சிக் கொந்தளிப்பில் இருந்ததால்,

நேயர்கள் அவரைச் சந்திக்க அஞ்சினர். அவரது கம்பீரமான முகத்தையும் கரகரத்த குரலையும் கண்டே பலர் அஞ்சி நடுங்கினர். பாரதிதாசனைக் காட்டிலும் இன்னும் அதிகமாக ஜீவனானந்ததாஸ் சமுதாயத்திலிருந்து விலகிச் சென்றார். "எப்போதும் ஒருவகை முகமூடியைத் தம்முகத்தில் அணிந்தவரைப் போன்று, இவர் காட்சியளித்தார். அம்முகமூடிக்குள்ளே புகுந்து இவருடைய உணர்வுகளைப் புரிந்து கொண்டவர்கள் மிகச் சிலரேயாவர்" என்று அவரோடு நெருங்கிப் பழகிய புத்ததேவ போஸ் குறிப்பிடுகிறார். இவ்விருவருடைய வாழ்க்கைப் பண்புகள் வேறுபட்டு நின்றதைப் போலவே, இவருடைய படைப்புக்களும் வேறுபட்டே நின்றன.

மகாகவி பாரதியார்—கவியரசர் ஆகிய இருவரும் காண விரும்பியது மறுமலர்ச்சி; பாரதிதாசன் — ஜீவனானந்ததாஸ் இருவரும் காண விரும்பியது புரட்சி. என்றாலும், இரண்டு பேரும் தத்தம் குருநாதர்களுக்கு அவமானம் வந்தபோது, துடித்தெழுந்தனர். இன்றைக்கு மகாகவி எனப் புகழப்படுகின்ற பாரதியார், ஒரு காலத்தில் 'கஞ்சாப்புலவர்', 'டப்பா பாட்டுக்காரர்' என இழித்துரைக்கப்பட்டதுண்டு. அதனைக் கேட்டுச் சினந்த பாரதிதாசன், "ஒரு கவிஞனின் கவிதை ஆயிரமாயிரம் நெஞ்சத்திலிருந்து செயல்பட்டால்தான் கவிதை; இல்லேன்னா அது வெறும் சொற்குப்பை. பலர் பாட்டெழுதுகிறான்—பத்திரிகைகளிலும், புத்தகத்திலும் அச்சாகிறது; ஆனால், மக்கள் மனசிலே தங்கலையே; ஐயர் (பாரதியார்) பாட்டு அழுத்தமான பாட்டு; மக்கள் வாழ்வுதான் அவர் பாட்டு இலக்கியம் எல்லாம்" என்று குருநாதருடைய பெருமையை அழுத்தம் திருத்தமாகச் சொன்னார்.

பாரதிதாசனைப் போன்று ஜீவனானந்ததாசும், கவியரசர் தாகூர் பழித்துப் பேசப்பட்ட நேரத்தில் கனன்று எழுந்தார். தாகூரின் செல்வாக்கைக் குறைப்பதற்கென்றே 'கல்லோல் குழு' வைப் போன்ற அமைப்புக்கள் தோன்றின. "தாகூரை வாணிகச் சரக்காக சந்தைதனில் விலை கூறி விற்க இனி முயலோம்" என விஷ்ணு டே பகிரங்கமாகப் பிரகடனம் செய்தார். ஆனால் ஜீவனானந்ததாஸ், "தனக்கு முற்பட்ட காலத்திய கவிஞரைத் தூக்கியெறிய வேண்டும் என்னும் சதித்திட்டத்தின் விளைவாகக் கவிஞர்கள் பிறப்பது இல்லை...தாகூரின் ஓர் இசைப்பாடல் அல்லது கவிதையோடு கணப்பொழுது போரிடுவோமானால், அவற்றிலிருந்து பரந்துபட்ட நிலையில், அவர் வேறுபட்டிருப்பதற்கு நாம் நன்றி பாராட்ட வேண்டும்" என்று குருநாதரின்

மேல் வீசப்பட்ட மாசினைத் துடைத்தார். இவ்விரண்டு பேரின் நடப்புக்குக் காரணம் குருநாதரின் மேல் வைத்த பற்று மட்டு மன்று; எத்தகைய எதிர்ப்பு இருந்தாலும், உண்மையை உண்மை என்று எடுத்துரைக்கும் அஞ்சாமையும் காரணமாகும்.

பாரதிதாசனும் ஜீவனானந்ததாசும் இன்று நாடு போற்றும் நல்ல கவிஞர்கள். ஆனால், அவர்கள் தாம் வாழ்ந்த காலத்தில் ஏச்சுக்கும் பேச்சுக்கும் இலக்கானவர்கள்தாம். பண்டிதமணி கதிரேசஞ்செட்டியார் பாரதிதாசனுடைய கவிதைகளைப் பொரு ளற்ற பாட்டு என்றும் நச்சுக்காற்று என்றும் வசை பாடினார். பன்மொழிப்புலவர் தெ. பொ. மீனாட்சிசுந்தரம், 'சிறு பிள்ளை களும் இப்படி எழுத மாட்டார்கள்' என்று பாரதிதாசன் பாட்டைக் கிண்டல் செய்தார். ஆனால், அதே தெ. பொ. மீனாட்சிசுந்தரம் அவர்கள் 'தமிழின் நரம்பறிந்து பாடியவர்; பாரதியாரிடமில்லாத இந்திர ஜாலங்கள் பாவேந்தரிடமுண்டு' என்று பாடுமளவுக்குப் பாரதிதாசன் உயர்ந்து நின்றார்.

பாவேந்தர் தமது குருநாதர் பாரதியாரையே வென்றவ ராகத் திகழ்கிறார். பசுமலை சோமசுந்தர பாரதியார், 'புரட்சிப் பாவலர்கள் பலரையும் புறங்காண வல்ல பாரதிதாசனாரைப் பாரதியின் நேசன் என்று சொல்லலாமே தவிர, தாசன் என்று யார் சொன்னது?' என்று கேட்க வந்தபொழுது,

பாரதிர வேபுரட்சி பாடும் புலமைவிறல்
போரெதிர் வாரைப் புறங்காண்பான்—பாரதி
நேசனையார் தாசனென நிந்திப்பர் பல்புலவர்
பூசனை போதாதோ புகழ்ச்சிக்கு

என்று பாடுகிறார்.

பாரதிதாசனைப் போலவே ஜீவனானந்ததாசும் பத்தாம் பசலிகளால் பழிவாங்கப்பட்டார். கஜனிகாந்த தாஸ் என்பவர், 'ஷானிபாரர் சித்தி' என்னும் வங்காள இதழில் ஜீவனானந்த தாசைத் தாக்கி எழுதிவந்தார். பாரதிதாசனைத் திருபுவனைப் பள்ளியிலிருந்து அரசு வேலை நீக்கம் செய்ததைப் போலவே, ஜீவனானந்ததாசும் கல்கத்தா நகரக் கல்லூரியிலிருந்து வேலை நீக்கம் செய்யப்பட்டார். கவிஞர்கள் இருவருமே தொடக்கத்தில் காட்டாறுகளைக் கடந்து வந்தவர்கள்தாம்.

சோதனைகளில் கைகோர்த்து நடக்கும் இவ்விரு கவிஞர் களும், சாதனைகளிலும் சமமாகவே நடக்கின்றனர். பாரதி-

தாசனின் கரங்கள் இரண்டும் வையத்தையே அளாவி நின்றாலும், அவரது கால்கள் வலுவாகத் தமிழக மண்ணிலேதாம் காலூன்றி நிற்கின்றன. தமிழ்நாட்டின் முன்னேற்றத்திற்காகத் தமது உயிரையும் கொடுக்கத் தயார் என்பதை,

எனையீன்ற தந்தைக்கும் தாய்க்கும் மக்கள்
இனமீன்ற தமிழ்நாடு தனக்கும் என்னால்
தினையளவு நலமேனும் கிடைக்கு மென்றால்
செத்தொழியும் நாளெனக்குத் திருநாள் ஆகும்

என்று கவிதை வாக்குமூலமாகத் தருகிறார் கவிஞர். தமிழும் நாடும் பாரதிதாசனின் இரத்தமாகவும் நரம்புகளாகவும் அமைந் திருக்கின்றன.

ஜீவனானந்ததாசும் இந்தப் பேரண்டத்தைப் பாடிய கவிஞன் என்றாலும் அவரது உயிர்—ஆன்மா வங்காள மண்ணில்தான் லயித்திருக்கின்றன. மனிதப் பிறவி நீங்கி, குருவியாக—காகமாக—நாரையாகப் பிறந்தாலும் வங்காளத்தையே வலம் வருவேன் என்பதை,

ஒருநாள் நான் திரும்பி வருவேன்!
திரும்பவும் வங்காளத்திற்கு வருவேன்!
..............................................
ஒருவேளை மனிதனாக வரமாட்டேன்
ஆனால், தூக்கணாங்குருவி வடிவில் வருவேன்;
ஒருவேளை வைகறைக் காகமாக வருவேன்;
............................ ...................
வங்காளத்தின் ஆறுகளும் வயல்களும்
அழைப்பதால் நான் வருவேன்

எனும் கவிதை மூலம் பிரகடனம் செய்கிறார் கவிஞர். வேரும் வேரடி மண்ணும் ஜீவனானந்ததாசுக்கு வங்காளமாகவே இருப்ப தால், பாரதிதாசனைப் போலவே வட்டாரக் கவிஞராகவே மதிக்கப்பெறுகிறார்.

எந்த எழுத்தாளன் தான் வாழுகின்ற சமுதாயத்திலுள்ள நோய்களைச் சுட்டிக்காட்டுவதுடன், அந்நோய்களைத் தீர்ப்ப தற்குரிய மருந்துகளையும் சொல்லுகிறானோ அவன்தான்

மக்கள் கவிஞன் எனப்படுவான். பாரதிதாசன் இதனை, 'இருக்கும் நிலை மாற்றுமொரு புரட்சி மனப்பான்மை ஏற்படுத்தல் பிறருக் குழைக்கும் எழுத்தாளர் கடமை' என்று பாடுவார். பாரதிதாசன் செல்லரித்துக் கிடக்கும் இச்சமுதாயத்தை எக்ஸ்—ரே எடுப்பது போல், "வாழ்கின்றார் முப்பத்து முக்கோடி மக்கள் என்றால், சூழ்கின்ற பேதமும் அந்தத் தொகையிருக்கும்; ஆகையால் எல்லோரும் அங்கே தனித்தனிதான். ஏகமனதாகி அவர் நம்மை எதிர்ப்ப தெங்கே? பேதம் வளர்க்க பெரும் பெரும் புராணங்கள்! சாதிச்சண்டை வளர்க்க தக்க இதிகாசங்கள்!......இந்த நிலையில் சுதந்திரப் போரெங்கே?" எனப் பாடுகிறார். சமுதாயச் சீர் திருத்தம் வரவில்லை என்றால், அரசியல் மாற்றம் வராது என்கிறார்.

தமிழகத்தைப் போலவேதான் வடமாநிலங்களும் இருந்தன என்பதை,

அந்தோ கட்டுமரம் கடலில் தத்தளிக்கிறது...
எல்லாப் பக்கங்களிலும் சீறும் அலைகள்!
கணிக்கமுடியாத இருள் என்னும் கடல்!
குருடாகிப்போன அதுவேதான் கடலாக இப்படி
நாற்புறமும் சீறுகிறதோ?...
அதே இடம்தான்—நாம் இருப்பதும்

எனும் ஜெய்சங்கர் பிரசாத் கவிதையால் அறியமுடிகிறது. ஜெய்சங்கர் பிரசாத் மென்மையாகச் சொன்ன இச்சமூகச் சூழலை ஜீவனானந்ததாஸ்,

பகற்பொழுதைக் கவ்விய இந்தப் புதுமை இருளில்
நேர்த்திமிகு காட்சி குருடர்க்கே உரியதாகும்!
அன்பற்ற இரக்கமற்ற பேய்களான
ஆலோசகர்களால் உலகம் நடத்தப்படுகிறது!
ஒளியில், மனிதனின் நீடித்த வேட்கையின்
அணையாத ஆர்வ அவற் கொழுந்தில்
கழுதைப்புலிகளும் கழுதைகளும் விருந்து உண்ணுகின்றன

எனக் கடுமையாகச் சாடுகின்றார். ஏற்றத் தாழ்வுடைய சமுதாயமெனும் கப்பலைக் கொண்டு, சுதந்திரம் எனும் கரையை அடையமுடியாது என்பதில் பாரதிதாசனும் ஜீவனானந்ததாசும் ஒருமித்த கருத்துடையவர்கள்.

பாரதிதாசனும் ஜீவனானந்ததாசும் இயற்கையைக் கவிதையாக்கினர்; கவிதையில் இயற்கை, இயற்கையாயிற்று. பாரதிதாசன் சஞ்சீவிப் பர்வதத்தின் சாரல் காதலுக்கு ஏற்ற

இடமாகவிருப்பதை, "குயில் கூவிக் கொண்டிருக்கும்; கோல மிகுந்த மயிலாடிக் கொண்டிருக்கும்; வாசமுடைய நற்காற்றுக் குளிர்ந்தடிக்கும்; கண்ணாடி போன்ற நீரூற்றுக்கள் உண்டு; கனிமரங்கள் இருந்தபடி இன்னிசை பாடிக்களிக்கும். அன்பு மிகுந்தே அழகிருக்கும். நாயகரே! இன்பமும் நாமும் இனி" என வருணிப்பார்.

பாரதிதாசன் இயற்கையில் தோய்ந்ததைப் போலவே ஜீவனானந்ததாசும் ஒன்றித் தோய்ந்து பாடியிருக்கிறார். "ஆற்றின் அணங்கு . வெண்பனி மலரை ஓயாமல் தூவும்!... ஏற்றமிகு இவ்வினிய காட்சி இயற்கையின் எழில் ஓவியமாகும்! ஓலைக்கூரை நிழலைச் செதுக்கும் நிலவொளி நந்தா விளக்கோ! அலையாவது உமிழும் பேரொளி! உலகின் நயமிகு நங்கையர் மலைபடு நறுமணப் பொருளால், மணங்கமழ் உடல்வனப்புறுவர்; கலையுணர்வால் கசிந்து, கண்ணசைவால் காளையரை ஏவல் கொள்வர்" என இயற்கை எழில், காதலுக்குக் கை கொடுப்பதைச் சுவையாகப் பாடியிருக்கிறார். "பசுமையான காட்டிலிருந்து வரும் ஒரு சிறிய அசைவு மட்டுமே, மனிதர்களைவிட மிகுதியாகக் கற்பிக்கும் ஆற்றலுடையது. அருளாளர்கள் கற்பிக்கும் நன்மை தீமை பற்றிய ஒழுக்கங்களைவிட மிகுதியாக இயற்கையின் இயக்கம் நமக்குப் போதனை செய்கிறது" எனும் வோர்ட்ஸ்—வொர்த்தின் கணிப்பு, இவ்விரண்டு கவிஞர்களிடத்தும் ஆழமாக வேரூன்றியிருக்கிறது.

பாரதிதாசனும் ஜீவனானந்ததாசும் பல நேரங்களில் ஒட்டிச் செல்வதைப் போலவே, சில நேரங்களில் ஒதுங்கியும் நடக்கின்றனர். பாரதிதாசன் மரபு வழிப்பட்ட யாப்பிலக்கணத்தைப் போற்றிப் பாதுகாக்கிறார்; ஆனால், ஜீவனானந்ததாசோ மரபு வழிப்பட்ட யாப்பிலக்கணத்தை உடைத்தெறிந்தார். ஜீவனானந்ததாசின் கவிதைகளில் படிமக்காட்சிகள் மிகுதியாக உண்டு. பாரதிதாசனோ உவமை உருவகங்களுக்கே முதன்மை கொடுத்துப் பாடியிருக்கிறார். பாரதிதாசனுக்கு அரசியல் சார்பு உண்டு; ஜீவனானந்ததாசுக்கு அரசியல் சார்பு எதுவும் கிடையாது.

இருவருக்கும் இடையில் வாழ்க்கைப் பண்புகள் சிலவும் ஒன்றாகவே இருக்கின்றன. பாரதிதாசனுக்கும் ஜீவனானந்த தாசுக்கும் பழைய பண்டிதர்கள்—பேராசிரியர்கள் மீது ஒரு மரியாதை கிடையாது. பாரதிதாசன் இளமைக் காலத்தில் கடவுட் கொள்கையை ஏற்றுக் கொண்டிருந்ததைப் போலவே,

ஜீவனானந்ததாசும் பிரம்ம சமாஜத்தின் கொள்கைகளுக்கு ஆட்பட்டிருந்தார். பாரதிதாசன் இறுதிக் காலத்தில் திரைப்பட மாயைகளுக்கு ஆட்பட்டு, சென்னையில் பற்றாக்குறைகளுக்குள்ளாக்கி—பொது மருத்துவமனையில் காலமானார். ஜீவனானந்ததாசும் பற்றாக்குறையினால் — இன்சூரன்ஸ் முகவராகத் திரிந்து, இறுதியில் ட்ராம் வண்டியில் சிக்கி மரணமுற்றார்.

நார்வே நாட்டுக் கவிஞன் பிஜோர்சனைப் பற்றிக் குறிப்பிட வந்த பிராஸ்டஸ், ''அவருடைய நாட்டு மக்கள் பலர் ஒன்றாகக் கூடியிருக்கும் பெருங் கூட்டத்தில் அவருடைய பெயரைக் குறிப்பிடுவது, தேசியக்கொடி ஏற்றுவதைப் போன்ற புனிதமானதும் சிறப்பு மிக்கதுமான செயலாகக் கருதப்படுகிறது'' என்றார். நார்வே நாட்டுக் கவிஞனுக்குக் கிடைக்கும் மரியாதையைத் தமிழ்நாட்டில் ஒரு கவிஞன் பெறமுடியும் என்றால், அது பாரதிதாசனால்தான் முடியும்; வங்காளத்தில் ஒருவர் பெற முடியுமென்றால், அது தாகூரின் தாசனாகிய ஜீவனானந்த தாசால்தான் முடியும்.

# 7. பாரதிதாசனும் இந்திக் கவிஞர்களும்

பி. கே. பாலசுப்பிரமணியன்

கலைஞர்களும் பெரியார்களும் ஓர் இனம், ஒரு சமூகம், ஒரு மாநிலம் ஒரு நாடு வரை மட்டுமே போற்றப்படுபவர் அல்லர். அவர்கள் தங்கள் எண்ணங்களாலும் படைப்புகளாலும் உலகம் முழுவதும் போற்றப்படுகிறார்கள். இந்த உயரிய நோக்குடன் விருப்பு வெறுப்பின்றி எண்ணங்கள் அல்லது கருத்துகளை மட்டும் ஆராய்வோமானால் பெரியோர்கள் ஒரே நோக்குடையவர்கள் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெள்ளத் தெளிவாகப் புலப்படும்.

அரசியலில் தான் வாழ்ந்த காலத்திலேயே அண்ணல் காந்தியடிகள், நேரு அவர்களைத் தன் வாரிசு எனக் கூறிப் போந்தார். மகாகவி சுப்பிரமணிய பாரதியும் பாவேந்தர் பாரதிதாசனைத் தன் வாரிசாக ஏற்றுப் போற்றினார். பாரதிதாசனும் பாரதியைத் தன் ஆசானாக ஏற்றார்.

சுவை புதிது பொருள் புதிது வளம் புதிது
சொற்புதிதுது சோதிமிக்க நவகவிதை
எந்நாளும் அழியாத மகாகவிதை

என்ற பாரதியின் கூற்றுப்படி பாரதிதாசனும் தன் கவிதையை அதே முறையிலும் போக்கிலும் எழுதியிருக்கிறார். இதனையே சூர்யகாந்த் திரிபாடி நிராலா என்பவர் தன் கவிதையில்,

புதிய லயம், புதிய சந்தம், புதிய வாக்கு
புதிய வானம், புதிய மேகங்களின் முழக்கம்

எனக் கூறி, புதிய வானத்தே புதிய வண்ணச் சிறகுடைய பறவையாகப் பறந்து புதிய வழியை அமைக்கக் குரல் கொடுத்தார். "என்றும் புதுமை எதிலும் புதுமை" என்ற இந்தக் குறிக்கோளே புதிய முறையில் அனைத்தையும் நோக்கத் தூண்டியது.

பாரதிதாசன் (1891-1964) நாட்டு விடுதலைக்கு முன்னரும் பின்னரும் வாழ்ந்த பெரும் பேறு பெற்றவர். பாரதி (1882-1921) சுதந்திரக் கனவுதான் காண முடிந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இந்திய தேசிய சூழ்நிலையில் அரசியல், சமூகம், மதம் போன்ற வெவ்வேறு துறைகளிலும் பெருத்த மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. மூடநம்பிக்கைகள் ஒழிந்து சமுதாய சீர்திருத்தங்கள் ஏற்படலாயின. வங்காளத்தில் தோன்றிய இராசாராம் மோகன்ராய், குஜராத்தைச் சேர்ந்த சமாஜ நிறுவனர் தயானந்த சரசுவதி போன்றவர்கள் சமுதாய சீர்திருத்தத்திற்காகப் பாடுபட்டனர். அதே போன்று தமிழகத்தில் தந்தை பெரியாரும் மற்ற மாநிலங்களிலும் பல பெரியோர்களும் பழமையின் மூடத்தனததை ஒழித்துச் சீர்திருத்தக் கருத்துகளைப் பரப்பலாயினர்.

பாரதிதாசனுக்கு முன்னோடியான பாரதியார் தனது தேசியக் கவிதைகளாலும், பெண் விடுதலைக் கருத்துக்களாலும், தீண்டாமை ஒழிப்பு எண்ணங்களாலும் பெரும்புகழ் அடைந்தார். பாரதியின் கவிதா மண்டலத்தைச் சேர்ந்த பாரதிதாசனும் புதிய கருத்துகளோடு சமூகப் புரட்சிக்கு அடிகோலினார்.

1857-ஆம் ஆண்டு முதல், இந்தி இலக்கியத்தில் ஒரு புதுத் திருப்பம் நிகழ்ந்தது. 1850 முதல் 1885 வரை வாழ்ந்த பாரதேந்து ஹரிச்சந்திரர் காலத்தில்தான் தற்கால உரைநடை, புதிய பொருட்கவிதை, நாவல், சிறுகதை, நாடகம், ஆராய்ச்சி ஆய்வுகள் ஆகிய வெவ்வேறு துறைகள் இந்தி இலக்கியத்தில் தோன்றலாயின. அதற்கு முன்னர் பழைய கருத்துப் பொருள் கொண்ட வெறும் கவிதைகள்தான் இருந்தன. இயல் அல்லது உரைநடை இலக்கியம் பெயரளவில் இருந்தது. அந்த உரைநடை இலக்கியமும் கவிதை நடையிலேதான் இருந்தது. பிற்காலத்தில் தான் பரந்த தேசியம், சமூக உணர்வுகள், பக்தி ஆகிய பற்பல பொருட்களில் இலக்கியம் தோன்றியது. அதுவரை வழக்கிலிருந்த இந்தியின் ஒரு கிளை மொழி 'விரஜபாஷை'க்குப் பதில் தில்லி, மீரட் ஆகிய பகுதிகளில் பேசப்பட்டு வரும்

'கடிபோலி'யில் இந்தி இலக்கியம் எழுதப்படலாயிற்று. பாரதேந்து அவர்கள் காலத்தில் கவிதை, 'விரஜ பாஷை'யிலும், உரைநடை இலக்கியம் 'கடிபோலி'யிலும் எழுதப்பட்டது. அதுவரை வேற்றுக் கிளை மொழிகளிலே ஈடுபட்டிருந்தோரைக் 'கடிபோலி' இந்தியில் எழுத ஊக்குவிக்க வேண்டியிருந்தது. பாரதேந்து அவர்களின் முயற்சியினால் எழுத்தாளர்களும் கவிஞர்களும் பலர் தோன்றலாயினர். இக்காலத்தை மறுமலர்ச்சிக் காலம் என்று கூறுவர்.

அவருக்குப்பின் வாழ்ந்த மகாவீரபிரசாத் துவிவேதி அலகாபாத்திலிருந்து வெளியாகும் சரஸ்வதி என்னும் பத்திரிகைக்கு ஆசிரியர் ஆனார். அவர்தம் முயற்சியால் இலக்கண சுத்தமான இந்தி எழுதப்பட்டது. எனவே, 1900 முதல் 1915 வரையான காலம் துவிவேதி காலம் எனப் பெயரிடப்பட்டது. பின்னர் ஐரோப்பிய இலக்கியங்களின் தாக்கம் காரணமாக இந்தி இலக்கியத்தில் அநேக கொள்கைவாதம் (ism) பரவலாயின. 1198 முதல் 1938 வரையிலான காலம் சாயாவாதகாலம் (Romantic Age) எனக் கூறப்படுகிறது. இதற்குப் பிந்தைய 1938 முதல் 1953 வரையிலான காலம் முற்போக்கு சாதனைக் காலம் எனவும் மலர்ச்சி-சீர்திருத்தக் காலம் எனவும் கூறப்படுகிறது. புதிய எழுத்துக் காலம் 1954-க்கு மேல் ஆரம்பமாகி நடந்து வருகிறது. இந்தி இலக்கியத்தில் இத்துணைப் பாகுபாடுகள் தற்காலத் தமிழிலக்கியத்தில் இல்லாதிருந்தாலும், அக்கால காவியங்களின் மாறுபாடுகளும் கூறுகளும் நிறைந்துள்ளன.

நூற்றுக்கணக்கான கவிஞர்கள் இருந்தபோதிலும் 1921 முதல் 1964 வரையிருந்த கவிஞர்களிடையே பொதுவான கொள்கைகளே மலிந்திருந்தன. ஏற்கனவே கூறியபடி தேசிய உணர்ச்சி, புதுநோக்கு, புதிய திருப்பங்கள் இலக்கியத்தின் சிறப்பியல்புகளாயின. மேலே குறிப்பிட்டுள்ள அனைத்து இயல்புகளும் பாரதிதாசன் அவர்களின் படைப்புகளில் நிறைந்துள்ளன. பற்பல இந்திக் கவிஞர்களிடையே காணும் இக்கருத்து ஒற்றுமைகளை வெளிக்கொணர்வதே இக்கட்டுரையின் சிறப்பு நோக்கமாகும்.

பாரதியைப் போன்று பாரதிதாசனை தேசியக் கவிஞராக ஏற்பதில் தயக்கங்கள் காணப்படலாம். ஆனால் கவிநயத்திலோ, புதிய கருத்துக்களிலோ, புரட்சி எண்ணங்களிலோ பாரதிதாசன் எந்த வகையிலும் குறைந்தவர் அல்லர். எனவேதான், தமிழின் அல்லது திராவிடக் கவி என்றாலும் அவர்தம் மலர்ச்சிக் கருத்துக்களை ஏற்பதில் எவரும் தயக்கமுறத் தேவையில்லை. நாத்திகவாதியாக இருந்தாலும் அவர் வாழ்ந்த சூழ்நிலையைக் காணும்

போது அதனை வெகுவாகப் பொருட்படுத்தத் தேவையில்லை. பாரதி போன்று இந்தியநாடு முழுவதும் செல்லப் பாரதிதாச னுக்கு வாய்ப்பில்லாது போயிற்று. வாய்ப்புகள் கிட்டியிருந்தால் பாரதிதாசனும் பாரதியைப் போன்று அகில இந்தியப் புகழ் பெற்றிருப்பார். பாரதி பாடுமாறு கேட்டபோது பாரதிதாசன் பாடிய கவிதை,

எங்கெங்குக் காணினும் சக்தியடா—தம்பி
ஏழுகடல் அவள் வண்ணமடா—அங்குத்
தங்கும் வெளியினிற் கோடியண்டம்—அந்தத்
தாயின் கைப்பந்தென ஓடுமடா!

என்பதாகும்.

முதற் சந்திப்பிலேயே பாரதிதாசனின் இக்கவிதையைக் கேட்டு, 'பலே பாண்டியா' என்று பாரதி பாராட்டியதாக வரலாறு உள்ளது. பாரதிதாசனின் சக்திப் பாடலையொத்து, **ராம்கீ சக்தி பூஜா** எனும் கவிதையில் கவிஞர் நிராலா அவர்கள் சக்தியை அனைத்துத் தேவி தேவதைகளின் திருவுருவாக வர்ணித்துள்ளார். நூற்றெட்டாவது தாமரைப்பூ மறைந்ததும் பதிலாக தனது செந்தாமரைக் கண்ணை அளித்து சக்தி பூசையை இராமர் முடிக்கலானார். உடனே சக்தி அவர்முன் தோன்றி வரமளித்ததே ராமரின் சக்தி பூஜை கவிதையின் கருப் பொருளாம்:

அண்டம் அலற, உடன் கூறலானாள் சக்தி
.........................................
கண்டான் ராமன் தன்முன், துர்க்கையினை,
அசுரனின் கழுத்தைத் தன் வலக்கை கொண்டு நெரிக்க
ஒளி வெள்ளம்; பத்து கைகளிலும் பற்பல ஆயுதங்கள்;
வலப்புறம் இலக்குமி; இடப்புறம் சரசுவதி;
தலையின்மேல் சிவம்; வலப்புறம் கணேசன்; இடப்புறம்
குமரன். மகா சக்தி வரம் தந்து மறைந்தனளே.

இயற்கையும் கவிதையும் இணைந்தே செல்வனவாகும். பாரதிதாசனும் தன் கவிதைகளில் இயற்கையின் வெவ்வேறு காட்சிகளை வருணித்துள்ளார். சூரிய உதயக் காட்சியைக் கண்டு அவர்,

எழுந்தது செங்கதிர்தான்
கடல்மிசை! அடடா எங்கும்
விழுந்தது தங்கத் தூற்றல்!
வெளியெலாம் ஒளியின் வீச்சு

என எழுதியுள்ளதைப் போன்றே ஜயசங்கர் பிரசாத் காமாயனி என்னும் மகா காவியத்தின் இரண்டாவது சருக்கம், 'ஆஷா'வின் தொடக்கத்தில் கூறுகிறார்:

பொழிந்தனளே அதிகாலை தன் பொற்கிரணங்களை
தோன்றினளோ வெற்றிச் செல்வி!

இதனையே ஹரிவம்சராய் பச்சன், லஹரோங் கா நிமன்த்ரன் என்னும் கவிதையில் வருணிக்கிறார்.

பச்சனின் முன் திடீரென இருள் ஒழிந்து இரத்தினச் சிப்பி களால் அமைந்த ஒரு அழகிய மாளிகை தெரிந்தது. காலைக் காட்சி அவருக்கு இரத்தின மாளிகையாகத் தெரிகிறது.

எதிரே நின்றனளே அதனிடையே காலைக்கன்னி
ஒளி மிக்க கதிர்களை வீசி
அவ்வொளியிடையே தங்கத் தூற்றலிடையே
அழகிய கடற்கன்னி தோன்றினளே
பொருள் செறிவுள்ள முகம் காட்டி
அழகிய பாட்டி சைத்து
இன்னும் அதனை அசாதாரணமாக்கி
தாளத்தோடு தாண்டவமாடினளே!

காலை வேளையின் அழகைக் கண்டு மெய்மறந்த இந்திப் பெண் பவிஞர் மகாதேவிவர்மா புத்துணர்ச்சி பெறுகிறார். வேதாந்தத் தத்துவத்தில் மூழ்கியுள்ள அவர் வருணிக்கிறார்:

உனது செங்கிரணங்கள் பட்டதுமே
அணுஅணுவிலும் பீறிட்டு எழுகிறதே
இனியதே னருவிப் பாட்டு
பொற்கிரகணங்களிடையே
ஆழ இருட்கடல் அலை பாயுதே!

இயற்கையின் அழகிலே ஈடுபட்டுத் தம்மை மறப்பது கவிஞர் களுக்கு உள்ள ஒரு சிறப்பு. பாரதிதாசனும் சுமித்ரானந்தன் பந்த்தும் இதற்கு விதி விலக்கல்லர்.

பாரதிதாசன் இயற்கை எழிலைக் கண்டு கூறுகிறார்:

என்னை நான் இழந்தேன் இன்ப
உலகத்தில் வாழலுற்றேன்
பொன்துகள் தென்றற் காற்றுப்
புதுமணம், வண்டின் பாட்டுப்
பன்னூறு செழுமா ணிக்கப்
பறவைபோல் கூட்டப் பூக்கள்
இன்றெலாம் பார்த்திட் டாலும்
தெவிட்டாத எழிலின் கூத்தே (அழகின் சிரிப்பு, ப. 37)

அதே போன்ற காட்சியைக் கண்டு சுமித்ரானந்தன் தனது கவிதையில் கூறுகிறார்.

அவர் வண்டினத்திடம் இனிய பாடல்களைக் கற்க விரும்பினார். அது மட்டுமல்ல, பறவைகளிடம், 'உங்களுக்குக் காலையில் வரவைக் கூறியவர் யார்?' எனக் கேட்டுத் தன் வியப்பை வெளிப்படுத்துகிறார்:

கற்பிப்பாய் வண்டரசியே!
எனக்கும் உன் இனிய இசையை
(பல்லவினி, ப. 19)

முதற் கதிர் வரவை வண்ணப்பறவையே!
எவ்வாறு நீ அறிந்தனையோ!
எவர் கூறினார் உனக்கு உள் மனத்தினிலே
அதன் வரவை!
(வீணா, ப. 78)

இயற்கையின் ஒவ்வோர் அசைவிலும் வியப்பைத் தெரிவிக்கும் கவியின் பண்பை யார் போற்றாது இருப்பர்?

தென்றலின் நலம் பற்றி,

குளிர்நறுஞ் சந்த னஞ்சார்
பொதிகையில் குளிர்ந்து ஆங்கே
ஒளிர் நறுமலரின் ஊடே
மணத்தினை உண்டும் வண்டின்
கிளர்நறும் பண்ணில் நல்ல
கேள்வியை அடைந்து நாளும்
வளர்கின்றாய் தென்றலே! உன்
வரவினை வாழ்த்தா ருண்டோ?

எனப் பாடியுள்ளார் பாரதிதாசன்.

இதனையொத்த ஜயசங்கர் பிரசாத்தின் கவிதையைக் காண்போம்.

ஆகா! திடீரென எந்தத் தென்றல் வீசியது?
மலர்களின் வாசனையால் முழுவதும் நிரம்பியது
வந்ததுமே கைபட்டதும் புல்லரித்ததே நம்மை
கண் திறந்து ஆனந்தக்காட்சி காட்டியதே
(ஜரீனா—அருவி)

இதனையே பாரதிதாசன் 'தென்றல் இன்பம்' என்ற கவிதையில் கூறுகிறார்:

இருந்த ஓர் மணமும் மிக்க
இனிய தோர் குளிரும் கொண்டு
விருந்தாய் நீஅடையுந் தோறும்
கோடையின் வெப்பத்திற்கு
மருந்தாகி அயர்வினுக்கு
மாற்றாகி பின்னர் வானிற்
பருந்தாகி இளங்கிளை மேற்
பறந்தோடிப் பாடு கின்றாய்!

இயற்கையின் இனிமையைக் கவிஞர்கள் அனுபவிக்கும் முறையே புதுமையானது. இயற்கையை ஒரு பெண்ணாக நினைத்துப் பாடுவது மரபு.

காலை இளம்பரிதியிலே அவளைக் கண்டேன்!
கடற் பரப்பில், ஒளிப் புனலில் கண்டேன்! அந்தச்
சோலையிலே, மலர்களிலே, தளிர்கள் தம்மில்
தொட்டஇடம் எலாம் கண்ணில் தட்டுப்பட்டாள்!
மாலையிலே மேற்றிசையில் இலகு கின்ற
மாணிக்கச் சுடரிலவள் இருந்தாள் ஆலஞ்
சாலையிலே கிளைதோறும் கிளியின் கூட்டந்
தனில்அந்த அழகென்பாள் கவிதை தந்தாள்
(அழகின் சிரிப்பு—1)

காலை இளம்பரிதியைப் பெண்ணாக உருவகித்துக் கவிஞர் காதலிக்கிறார். "பழமையினால் சாகாத அந்த இளையவளைக்" கண்டு தன்னை மறக்கிறார்.

இதேபோன்று "ஸந்தியா ஸுந்தரி" என்னும் கவிதையில் சூர்யகாந்த் திரிபாடி நிராலா அந்திவேளையை அழகான வானுலக மங்கையாக வருணித்துள்ளார்.

அந்தி மயங்கும் நேரம்
மேகமய ஆகாயத்திலிருந்து இறங்குகிறாள்
அந்தி அழகி வானத்து தேவதை போன்று
மெதுவாக மெதுவாக
இருள் சஞ்சலம் என்றும் தெரியவில்லை
அலர் அதரங்கள் இனிமை—
ஆனால் ஆழ்ந்து—ஆனால் இல்லை மந்தகாசம்.

முதன் முதலில் அமுதவல்லியினைக் கண்ட உதாரன் கூற்றாகப் பாரதிதாசன், அவர்கள் முதற் சந்திப்பினைப் பின்வருமாறு வருணித்துள்ளார்.

என்ன வியப்பிது? வானிலே—இருந்
திட்டதோர் மாமதி மங்கையாய்
என்னெதிரே வந்து வாய்த்ததோ—புவிக்
கேதிது போலொரு தண்ணொளி
மின்னற் குலத்தில் விளைந்ததோ?

(புரட்சிக்கவி)

இதனையே ஜயசங்கர் பிரசாத் எவ்வாறு கூறுகிறார் என்று பார்ப்போம். முதன்முதலில் தன் காதலியைக் காணும் காதலன் கூறுகிறான்:

மெல்நிலவில் குளித்து
மின்னல் வந்ததோ!
அவ்வழகிய மெய்யினைக்காண
ஐயகோ! என் உள்ளம் துடிக்கிறதே!
இனிய நிலா புன்னகைத்ததே
முதற் சந்திப்பிலே! ஆனால்
நீ எனக்கு அறிமுகமாயிருந்தனையே
வெகுமுன்னரே.

இந்தியில் சச்சிதானந்த ஹீராநன் புதிய முறைக் கவிதைக்கு, அடிகோலியவர். எனவே, அவருடைய காதல் உணர்வு புது முறையில் வெளிப்படுகிறது.

கூடல் நேரத்தில் காதலியின் உடல் பொன் மலர்க்கொடியின் மொட்டினை நினைவுறுத்துகிறது:

உன்னுடல்
எனக்குச் செண்பகமொட்டு!
தொலைவிலிருந்து
நினைத்தாலும் நறுமணம் வீசுகிறது!

(உணர்விற்கப்பால் அது கேட்கிறதே
மூடுபனிபோல உணர்வுகளை மயக்குகிறதே!)

காதலுணர்வு வாழ்ந்த காலத்து எரியாக நின்று எரிக்குமென்பதைக் கவிஞர் பாரதிதாசன்,

தாழச்சுடு வெயில் தாளாமல் நான் குளிர்ந்த
நீழலைத் தாவினேன்

என்று கூறியுள்ளார். இதனையே மற்றோரிடத்தில்,

கால் நெருப்பால் கடலுன்மேல் தாவிடுவேன்

என்றும் கூறியுள்ளார். மேலும்,

காய்ச்சிய இரும்பாயிற்றுக் காதலால் எனது தேகம்
குளிர்ப்புனல் ஓடையேநான்
கொதிக்கின்றேன் இவ்விடத்தில்

என்று பாடுவதாலும், காதலின் இயல்பு தீயோடு சார்த்திக் கூறப்பட்டுள்ளதை அறிகிறோம். இதனையே இந்திக் கவிஞர் 'பீகாரி' வேறு முறையில் கூறியுள்ளார்.

பிரிவாற்றாமையால் தலைவியின் தேகம் தீயெனக் காய்கிறது. அதன் வெம்மையைத் தணிக்க பன்னீர் செப்பினைத் திறந்து அவன் உடம்பின்மேல் தெளிக்கிறார்கள். ஆனால் மூடி திறந்த செப்பிலிருந்து ஒரு சொட்டுப் பன்னீர் கூட விழவில்லை. தலைவியின் உடல் வெம்மையினால் அனைத்துப் பன்னீரும் நடுவிலேயே ஆவியாகிவிடுகிறது.

பிரிவாற்றாமையால் தலைவியின் வேதனையை வேறு முறையில் ஜயசங்கர் பிரசாத் கூறுகிறார். கொழுந்துவிட்டு வெளிப்படையாக வேதனைத் தீ எரிவதில்லை. சாதாரணத் தீயானால் அது எரிவது வெளிப்படையாகத் தெரியும். அதைத் தண்ணீர் விட்டு அணைக்கலாம். ஆனால் பிரிவாற்றாமை என்னும் தீ, 'கண்ணீர் என்னும் தண்ணீரால்' கொழுந்துவிட்டு எரிகிறது. பெருமூச்சோ அதனை எரிக்கும் துருத்தியாக உள்ளது.

குளிர்ந்த தீச்சுடர் எரிகிறதே
கண்ணீரே அதன்எரிபொருளே
வீணாகச் சென்று வரும் இம்மூச்சு
காற்றடிக்கும் துருத்தியாகிறதே!

இந்த நிலையில், 'இதயம் கல்லறையாகும்; இன்பம் ஒரு மூலையில் கண்ணீர் சொரிந்து நிற்கும்.'

நீரின் தன்மையும் தீயின் வெம்மையும்
சாரச்சார்ந்து தீரத்தீரும்
சாரனாடன் கேண்மை
சாரச்சார சார்ந்து
தீரத்தீரத்தீர் பொல்லாதே.

சாரல் நாடனொடு தலைவிகொண்ட நட்பிலும் தண்மையும் வெம்மையும் காணப்படுகிறது. தலைமகன் காதலியோடு கூடும் போது தண்மையும் பிரிவின்போது வெம்மையும் உண்டாவது காதலின் இயல்பாகும்.

உலகத்து நெருப்பு நீரால் அவியும்; ஆனால் காமத்தீயோ நீருள் (கண்ணீருள்) குளித்துச் சுடும்.

காதலர் இயல்பையும் காதலின் தன்மையினையும் அனைத்துக் கவிஞர்களும் சித்திரித்துள்ளனர்.

பாவேந்தர் பாரதிதாசன் இயற்கையின்பத்தில் திளைத்ததற்கு அவருடைய பழந்தமிழ் நூலறிவு ஒரு காரணமாகும். தவிர, தமிழாசிரியராக இருந்ததனால் தமிழ் இலக்கிய ஈடுபாடு அவருக்கு இயல்பாக ஏற்பட்டுள்ளது. பாரதியாருக்குப் பல மொழிகள் கற்கும் வாய்ப்பிருந்தது. ஆனால் பாரதிதாசனுக்குப் பிரெஞ்சு மொழி கற்க மட்டுமே வாய்ப்பிருந்தது. அவருடைய முழுக்கவனமும் தமிழைச் சார்ந்திருந்தது.

பாரதிதாசன் தமிழ்மொழிபால் கொண்டிருந்த அன்பு போற்றற்குரியது. தமிழை வளர்க்க அவர் கூறிய அறிவுரைகளை ஏற்று நடக்க வேண்டியது நம் கடமையாகும்.

எளிய நடையில் தமிழ்நூல் எழுதிடவும் வேண்டும்
இலக்கண நூல் புதிதாக இயற்றுதலும் வேண்டும்
வெளியுலகில் சிந்தனையில் புதிது புதிதாக
விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்களெலாங் கண்டு
தெளிவுறுத்தும் படங்களோடு சுவடியெலாம் செய்து
செந்தமிழைச் செழுந்தமிழாய்ச் செய்வதுவும்
வேண்டும்

(பாரதிதாசன் கவிதைகள், தொகுதி—1)

மொழி வளர்ச்சிக்கு பாரதியார் கூறியது போன்றே பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்களையெல்லாம் தமிழிலே கொண்டு வரப் பாரதிதாசனும் கூறியுள்ளார். இதனையே பாரதேந்து ஹரிச்சந்திரர்,

அனைத்திலும் முன்னேற்றம் பெறு; தன்மொழியை வளர்க்க!
தன்மொழி அறிவு இன்றேல்
அடங்காது இதய வேதனை

என்று கூறியிருக்கக் காணலாம்.

செந்தமிழே! உயிரே! நறுந்தேனே
செயலினை மூச்சினை உனக்களித்தேனே
நைந்தாயெனில் நைந்து போகுமென் வாழ்வு
தன்னிலை உனக்கெனில் எனக்குத்தானே

எனத் தன் மொழியைப் பாதுகாக்க அனைத்து நடவடிக்கைகளும் எடுக்கப் பாவேந்தர் கூறியது பொருத்தமானதுதான்.

தமிழினை அன்னையாகப் போற்றுவது தமிழ்நாட்டின் தனிச்சிறப்பாகும். தேசியகவி சுப்பிரமணிய பாரதி தமிழன்னையின் பெருமைகளை எடுத்துக்கூறியுள்ளார். அதே போன்று தமிழ்நாட்டின் அரும்பெரும் சிறப்புகளை முதன் முதலாகப் பாடியதும் அவரேதான்.

தமிழன்னைக் கொள்கை ஆந்திரத்தில் அண்மையில்தான் தெலுங்கு தல்லி (தெலுங்கு அன்னை) வழிபாட்டைத் தோற்றுவித்துள்ளது. இந்தியை அன்னையாகப் போற்றும் பண்பு இன்னும் பரவவில்லை.

ஆனால் 'பாரதமாதா' கொள்கை சுதந்திரப் போராட்டக் காலத்தில் பரவியது. "வந்தே மாதரம்" என்ற தேசிய முழக்கம் அனைத்து இந்தியாவிலும் பரவியுள்ளது. சுப்பிரமணிய பாரதியும் 'வாழிய செந்தமிழ், வாழ்க நற்றமிழர்!' எனக் கூறியதோடு 'வாழிய பாரத மணித்திருநாடு' என்றும் கூறியுள்ளார்.

பாவேந்தர் தமிழுக்காகத் தன் இன்னுயிரையும் தருவதற்கு முனைந்திருந்தார்.

எனையீன்ற தந்தைக்கும் தாய்க்கும் மக்கள்
இனமீன்ற தமிழ்நாடு தனக்கும் என்னால்
தினையளவு நலமேனும் கிடைக்கும் என்றால்
செத்தொழியும் நாளெனக்குத் திருநாளாகும்

என்கிறார். திராவிட நாட்டுப் பண்ணில் பாரதிதாசன் தான் பிறந்த நாட்டின் எல்லையைச் சுட்டிக்காட்டி அறிவும் திறனும் செறிந்த நாடாகப் பெருமைப்படுகின்றார். தனது தாய் நாட்டை,

வாழ்க வாழ்கவே
வளமார் எமது திராவிடநாடு
வாழ்க வாழ்கவே
சூழும் தென்கடல் ஆழும் குமரி
தொடரும் வடபால் அடல்சேர் வங்கம்
ஆழும் கடல்கள் கிழக்கு மேற்காம்
அறிவும் திறனும் செறிந்த நாடு
(பாரதிதாசன் பாடல்கள், தொகுதி—2)

எனப் பாடி மகிழ்கிறார்.

இதனையே பாரதத் திருநாட்டு வருணனையாக, பாரத அன்னையை வணங்கு முகமாகப் பற்பல கவிஞர்கள் எழுதி யுள்ளனர்.

பாரதியே அருள்வாய் வெற்றி
பொன்மணி தானிய தாமரைச் செல்வியே!
இலங்கை காலடித்தாமரை
முழங்கும் கடலலைகள்
உன்பாதங்களை வருட
பொருளார்ந்து உன்னைத் துதிப்போம்!

என்று நிராலா, பாரதி வணக்கம் என்ற கவிதையில் கூறியுள் ளார். பாரதி அன்னையின் திருமுடியாக வெள்ளிப் பனிமலை இமயமலையைக் கூறியுள்ளார். இங்குப் பாரத அன்னையையே சரசுவதியாகக் கருதி வணங்கியுள்ளார்.

நாட்டு வருணனையையும் செழிப்பினையும் அனைத்துக் கவிஞர்களும் தங்கள் படைப்புகள்மூலம் வெளிப்படுத்தியுள்ளனர்.

பாரதிதாசன் கூண்டிலடைபட்ட கிளிக்குச் சுதந்திர உணர்வு ஊட்டும் முறையில் அடிமையாக வாழும் மக்களுக்கு விடுதலை வேட்கையை ஊட்டுகிறார்:

தித்திக்கும்பழம் தின்னக் கொடுப்பார்
மதுரப்பருப்பு வழங்குவார் உனக்கு
பொன்னே! மணியே! என்றுனைப் புகழ்வார்
ஆயினும் பச்சைக்கிளியே அதோ பார்

---

தச்சன் கூடுதான் உனக்குச் சதமோ
அக்கா! அக்கா! என்று நீ அழைத்தாய்
அக்கா வந்து கொடுக்க
சுக்கா! மிளகா! சுதந்திரம்! கிளியே!

அடிமையாக இன்பம் அனுபவிப்பது இழிசெயலாகும். அதனின்று விடுபட்டு விடுதலை பெற வேண்டுமென்பதைப் பாவேந்தர் 'கூண்டுக்கிளி' கொண்டு அருமையாக விளங்கு கிறார். இவ்விடுதலை உணர்வை,

அடிமைத்தனம் உள்ள இடம் வாழ்க்கைகள் தப்பித்த இடம்;
சுதந்திரப்போர் என்றும் நடக்கும் போர்;
சுதந்திரப் பிரச்சினை இன்றல்ல நேற்றல்ல நாளையது அல்ல
என்றும் இருக்கும் விழிப்புணர்வே அது!
கணநேரமும் அகலாது அதுவே

என்று திலகர் தன்னுடைய 'தேவை பரசுராம்' என்னும் கவிதையில் அழுத்தம் பெறக் கூறுகிறார்.

இதனையே ராஷ்டீரிய ஆத்மா மாகன்லால் சதுர்வேதி, கைதியும் குயிலும் என்ற கவிதையில் அறிவுறுத்தியுள்ளார்.

'சாதிகள் இல்லையடி பாப்பா' என்றார் பாரதி. அவர்வழி வந்த பாவேந்தர் பாரதிதாசனும் சாதி ஒழிப்புக் கருத்துகளை,

இருட்டறையில் உள்ளதடா உலகம்; சாதி
இருக்கின்றது என்பானும் இருக்கின்றானே

எனக் கண்டிப்புடன் கூறியிருக்கக் காணலாம்.

சாதிகளின் காரணமாக நாட்டில் இருக்கும் இழிநிலையைக் கண்டு பாவேந்தர் கண்ணீர் வடிக்கிறார். பிறப்பிலும் இறப்பிலும் வேற்றுமை இருப்பதில்லை. ஆனால் வாழ்வில் மட்டும் இந்த ஏற்றத்தாழ்வு ஏன் எனச் சாடுகிறார் பாவேந்தர்.

செத்து மடிவதிலும் சேர்ந்து பிறப்பதிலும்
இவ்வுலக மக்களிலே என்ன பேதம் கண்டாய்

என வினவி,

வாழ்கின்றார் முப்பத்து முக்கோடி மக்கள் என்றால்
சூழ்கின்ற பேதமும் அந்தத் தொகையிருக்கும்

எனக்கூறி மக்களிடையே உள்ள எண்ணற்ற பேதங்களைக் கண்டு பாவேந்தர் உள்ளம் குமுறுகிறார்.

இன்று பாரதத்தின் மக்கள் தொகை எண்பது கோடி. ஆனால் அவர்களிடையே உள்ள சாதிமத இன பேதங்களோ எண்ணிலடங்கா. அவற்றை ஒழிக்கும் அவசியத்தை உணர்ந்து பாவேந்தர் வினவுகிறார்:

தாழ்வென்றும் உயர் வென்றும்
சமூகத்தில் பேதங் கொண்டால்
வாழ்வின்பம் உண்டாகுமோ?—சகியே!
வாழ்வின்பம் உண்டாகுமோ!

பாரதத்தின் இழிநிலைக்குப் பிரிவினையே காரணம் என்று பாரதேந்து கூறியுள்ளார். 'அநேக சாதி உண்டாக்கினாய்! உயர்வு தாழ்வு உண்டாக்கியே அழிந்தாய் நீ' என்கிறார்.

தீண்டாமையையும் சாதி வேற்றுமையையும் ஒழிக்கப் புராணப் பாத்திரங்களில் கர்ண சரித்திரம் ஒரு சிறந்த ஆதார மாகும். கர்ணனையே தன் காப்பிய நாயகனாகக் கொண்டு இந்திக்கவி ராம்தாரி சிங் தினகர் ரஷ்மி ரத் என்ற ஒரு குறுங் காப்பியத்தை எழுதியுள்ளார். அதில் கர்ணனது கூற்றாகச் சாதியைச் சாடியுள்ளார். பரசுராமர் மூலம் தினகர், சாதி கோத்தரங்களை ஆதாரமாகப் போற்றுகிற நாடு அழிந்திடட்டும் எனச் சாபமிடுகிறார்.

குணத்தை அறிந்து போற்றாத நாடு அதளபாதாளத்தில் அமிழ்ந்து அழியட்டும். சாதி இன அடிப்படையில் அறிஞர்களைப் போற்றும் நாடு உடன் அழியட்டும். இக்கூற்றைக் கேட்டவுடன் கவியுடன் சேர்ந்து நமது எண்ணங்களும் விழிப்புறுகின்றன. யார் எக்குலத்தில் பிறப்பார்? இதனை எவர் அறிவார்? ஆனால் கீழ்க்குலத்தில் பிறந்தால் எத்துணை சிறுமைப்படுகிறார்? ஐயகோ! சாதி கீழானால் நமது குணமும் கீழா? உயர்சாதியினால் சிறி யோர் பெரியோர் ஆகிவிடுவரோ?

எக்குடிப் பிறப்பினும் யாவரேயாயினும் அறிவிற் சிறந்த மக்களே போற்றப்படுவர் என்பது உயர்ந்தோரின் அறிவுரை. இதனால்தான் 12 ஆம் நூற்றாண்டில் பிறந்த கபீர்,

சாதுக்களின் சாதியை அறிய முயலாதே!
அவர் அறிவையே அறிவாயாக!

என்றும்,

வாள் வாங்க உறை ஏன்? பார் அதன் வீச்சை

என்றும் கூறியுள்ளார். கர்ணனும் இதனையே வேறு முறையில் கூறுவான்:

எனது சாதியை ஆற்றலிருந்தால் கேள், என் புயவலியை
பரிதி போன்று ஒளிரும் என் நெற்றியை, கவசகுண்டலங்களை
ஆங்குத் தோன்றும் எனது பேரொளியை, ஒளிமிகும்
ஆற்றலை,
என்குடலின் அணு அணுவில் உள்ள என் வரலாற்றை.

கர்ணனைத் தாழ்ந்த இனத்தின் பிரதிநிதியாகச் சித்திரித்து அவனது உயர்ச்சி மூலம் அனைத்துக் கீழின மக்களையும் திலகர் உயர்த்தியுள்ளார்.

அனைவரையும் சமநோக்குடன் காணவும் அனைவரையும் சமமாக உயர்த்தவும் பாவேந்தர் பாடுபட்டார்.

பிறப்பிலுயர்வு தாழ்வு
பேசும் சமூகம் மண்ணில்
சிறக்குமோ சொல்வாயடி—கிளியே
சிறக்குமோ சொல்வாயடி
தாழ்வென்றும் உயர்வென்றும்
சமூகத்திற் பேதங் கொண்டால்
வாழ்வின்பம் உண்டாகுமோ—சகியே
வாழ்வின்பம் உண்டாகுமோ?

பொதுவுடைமைச் சமுதாயம் அமைய வேண்டும் எனப் பாவேந்தர் விரும்பினார். 'எல்லோரும் ஓரினம் எல்லோரும் ஓர் நிறை எல்லோரும் இந்நாட்டு மக்கள்' என மகாகவி பாரதியார் முழங்கினார். அதனையே பாவேந்தர் பாரதிதாசன்,

எல்லோர்க்கும் எல்லாம் என்றிருப்பதான
இடம்நோக்கி நடக்கின்றது இந்த வையம்

என்றும்,

எல்லார்க்கும் தேசம் எல்லார்க்கும் உடைமை
யெலாம்
எல்லார்க்கும் எல்லா உரிமைகளும் ஆகுகவே

என்றும் தெளிவுபடுத்துகிறார்.

தன்னலம் தீர்ந்தால் சண்டை யிருக்காது என்றும், தூய உள்ளம், அன்பு உள்ளம், பெரிய உள்ளம், தொல்லுலக மக்க ளெல்லாம் ஒன்றே என்னும் தாயுள்ளம் வேண்டுமென்றும் அறிவுறுத்துகிறார். இதனையே மைதிலி சரண்குப்தா அவர்கள் 'விஸ்வராஜ்யம்' என்னும் கவிதையில்,

அனைவருக்கும் சமமான இடம் கிடைக்கட்டும்
அனைவரின் நலனே பொது நாலமாகாட்டும்

எனக் கூறுகிறார். மேலும் குப்தஜி,

இந்துவோ முஸல்மானோ இழிமகன் இழிமகன்தான்
சிறந்தது மனிதத்தன்மையே! மதிக்கத்தக்கதும்
புவியில் அதுவே

எனக் கூறி அனைவரையும் மனிதனாக்க முயல்கிறார். மேலும் அவர்,

இந்துவோ முஸல்மானோ கிறிஸ்தவரோ
அனைவரும் பரமபிதாவின் புத்திரர்கள்

எனக் கூறி அனைவரையும் சமமாகப் பாவிக்கின்றார்.

குருகுலம் எனும் கவிதையில் குரு கோவிந்த சிங்கின் கூற்றாக அனைவரையும் ஒன்றாக விழிப்புணர்வு பெற வைக்கிறார். அவர்,

வருக வருக! அனைவரும் ஒன்றாக எழுவோம்

என்றும்,

அனைவரின் இதயத்திலே
எப்போழ்தும் ஒத்துணர்வு எழுகவே!

என்றும் கூறுகிறார்.

இதனையே குருக்ஷேத்திர காவியத்தில் பீஷ்மர் வாயிலாக "அனைவருக்கும் சமமான வாய்ப்புகள் உரிமைகள், உடைமைகள் இல்லாவிடில் போர் புரிவது உலகில் மிகத் தேவையானது" எனத் திலகர் கூறுகிறார். மனித குல மாணிக்கம் எனப் போற்றப்படும் நேரு பெருமகனாரும் இதனையே வலியுறுத்தி வந்தார்.

மதுசாலா என்னும் கவிதையில் ஹரிவம்சராய் பச்சன் கூறுகிறார்: "என் புத்தக மதுக்கடையிலே கவிதை என்னும் கோப்பையிலே, காவிய இன்ப மது பருகுகையில் இந்து, முஸல்மான், கிறித்தவர் என்ற பாகுபாடு இருக்காது" என வேறுபாடற்ற நிலையைப் புலப்படுத்துகிறார்.

பாரதிதாசன் ஆத்திகராக இருந்து நாத்திகராக மாறியவர். கண்ணதாசன் நாத்திகராக இருந்து ஆத்திகரானவர். மைதிலி சரண்குப்தா ஆத்திகர். திலகர் பொதுவுடைமை முற்போக்கு எழுத்தாளர். ஆனால் இனர்களில் எவரும் விதியை நம்பவில்லை. திலகர், "பாக்கியம், விதி என்பவை பாவத்தை, இழிசெயல்களை மறைக்கும் போர்வை" எனக் கூறியுள்ளார்.

பெண்விடுதலை நாட்டு விடுதலைக்கு இன்றியமையாதது என்பதைப் பாரதிதாசன் உணர்த்தியுள்ளார். குடும்ப விளக்கில் நல்ல குடும்பத் தலைவியை அவர் படைத்துக் காட்டியுள்ளார.

கல்வி இல்லை, உரிமை இல்லை, பெண்கள் கடைத்தேற வழியின்றி விழிக்கின்றார்கள் என இந் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே பாவேந்தர் விளக்கியுள்ளார்.

பெண் விடுதலைக்காகப் பரிந்து,

பெண்ணடிமை தீருமட்டும் பேசுந்திருநாட்டு
மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே!

என்று பாடியுள்ளார்.

அச்சமும் மடமையும் இல்லாத பெண்களே
அழகிய தமிழ்நாட்டின் கண்கள்

எனக்கூறி பெண்களைப் பெருமைப்படுத்துகிறார். பெண்களை இழிவுபடுத்துபவரை இகழ்கின்றார் அவர். மேலும் குழந்தை மணம், பொருந்தாத்திருமணம் ஆகியவற்றைக்கண்டித்தும் காதல் திருமணம், கலப்புத் திருமணம், விதவைமணம் ஆகியவற்றை ஆதரித்தும் எழுதியுள்ளார்.

இளங்குழந்தை கைம்பெண்ணாகும் அவல நிலையைப் பாவேந்தர்,

கூவத் தெரியாத குயிலின் குஞ்சு
தாவாச்சிறுமான் மோவா அரும்பு
தாலியறுத்துத் தந்தையின் வீட்டில்

இருக்கின்ற கொடுமையைக் கண்டு வருந்திப் பாடுகிறார்.

பொருந்தா மணத்தை 'மண்ணாய்ப் போக! மண்ணாய்ப் போக!' என இருமுறை சபித்த பாவேந்தர்,

காதல் சுரக்கின்ற நெஞ்சத்திலே கெட்ட
கைம்மையைத் தூர்க்காதீர்—ஒரு
கட்டழகன் திருத்தோளினைச் சேர்த்திடச்
சாத்திரம் பார்க்காதீர்

எனக் கூறி விதவைமணத்தை ஆதரிக்கிறார். பாவேந்தர் பெண்கள் இழிநிலையைப் போக்க, பெண்கல்வி அவசியம் என்பதை வற்புறுத்துகிறார்.

பெண்களின் அவல நிலையை இந்தியில் புத்துலக முதற் கவிஞர் பாரதேந்து முதல் இன்றைய கவிஞர் வரை அனைவரும் சித்திரித்து அவர்களை மேனிலைப்படுத்தக் கூறியுள்ளனர்.

பலதார மணத்தை ஆதரித்தும், விதவை மணத்தை தடை செய்தும், விபசாரத்தை வளர்த்தும் பாரதம் இழிநிலையை அடைந்துள்ளது எனப் பாரதேந்து ஹரிசந்திரர் கூறியுள்ளார் (பாரத் துர்தசா).

மைதிலி சரண்குப்தா பெண்களின் அவல வாழ்க்கையை உருக்கமாகச் சித்திரித்துள்ளார்:

அபலையின் வாழ்க்கை! அந்தோ இதுவே உனது வரலாறு!
மடியிலே பாலேந்தி, முகத்திலே கண்ணீரேந்தி!

பிள்ளைகளை வளர்க்கும் பாங்கு ஒருபுறம். அதே நேரத்தில் சொந்த வாழ்க்கையில் கண்ணீரும் கம்பலையுடன் வாழுகின்ற அவலம் ஒருபுறம்; இதுவே பெண்களின் வாழ்க்கையாகிறது. பெண்களுக்கு உரிய இடம் தராது அவர்களை அவமதிக்கும் போக்கைக் கண்டும் அவர் மனம் குமுறிக் கூறுகிறார்:

அந்தோ பெண் மாப்பிள்ளையை முழுதும் அறிந்தாளா!
ஏன் பெற்றோராவது, பிள்ளையோ, உடன்பிறந்தானோ?
ஆணின் கையில் பெண்ணின் ஒரு மூர்த்திதான்
கிடைத்ததோ!
அன்னை, பெண், சகோதரி அல்லவோ அவள்! அவள்
உடன் யாது கொண்டு வந்தாள்?

பாரதிதாசன்.

கல்லென உன்னை மதிப்பர் — கண்ணில்
கல்யாண மாப்பிள்ளை தன்னையும் காட்டார்

என்று கூறியது நோக்கற்பாலது.

அவநம்பிக்கை! ஆண் பெண்மேல் அவநம்பிக்கை!
ஆணின் குற்றம் மன்னிக்கலாம்! ஆம் அவன் வீட்டுக்காரன்!
அந்தோ பிறந்தது அவநம்பிக்கை ஆணிடம்!
பெண்ணே உன்னால்!
மனைவியும் மாதாவானாலும் நீயே பாவக்கிடங்கானாய்!

என்று கூறி, பெண்ணை நம்பாது கொடுமைப்படுத்தும் ஆண் வர்க்கத்தையே குப்தஜி சாடியுள்ளார்.

கணவன் வாழ்க்கையில் சமபங்கை நிர்வகிக்கும் பெண்ணின் உரிமையை நிலைநாட்ட குப்தஜி வற்புறுத்துகிறார்.

ஜயசங்கர் பிரசாத் காமாயனி (காமன் மகள்) எனும் தனது மகாகாவியத்தில்

பெண்ணே! நீ சிரத்தையில் திருஉரு
நம்பிக்கையின் வெள்ளிமலையின் திருவடியில்
அமுததாரையென்ப் பெருக்கெடுத்து
வாழ்வின் அழகிய மைதானத்திலே

என்று கூறி இமயத்தில் தோன்றி சமவெளியில் ஓடி வளம் படைக்கும் கங்கை போன்று சிரத்தையில் தோன்றி நம்பிக்கையைப் பெருக்கி வாழ்வினை வளப்படுத்துபவளாகப் பெண்ணைச் சித்திரித்துப் போற்றுகிறார்.

குடும்ப வாழ்க்கையில் கணவன் மனைவி மீது அதிகாரம் செலுத்தி அடக்கி ஆள விழைகிறான். இதனால் அவள் வாழ்வு நரகமாகிறது. பெண்ணுக்கும் வாழ்க்கையில் ஓரிடமுண்டு என உணர்த்தும் பொது நோக்குடன் வாழ்ந்தால் குடும்ப வாழ்க்கை செவ்வனே நடைபெறும் என்பதை மனுவுக்கு அறிவுரை கூறுமுகத் தான் ஜயசங்கர் பிரசாத் உணர்த்துகிறார்:

கணவனென்ற மமதையில் மறைந்தனையே நீ
மாதருக்கும் வாழ்விலே ஒரு அதிகாரமுண்டு
ஆள்பவனுக்கும் ஆளப்படுவனுக்குமிடையே
உள்ளதுவே சமபங்கு சமரசப் பாங்கு.

ஆம்! ஆள்பவரும் ஆளப்படுபவரும் ஒத்துணர்வுடன் செயல் படாவிடில் நாடு எவ்வாறு நலமுறும்? கணவனும் மனைவியும் ஒத்துணர்வுடன் ஆணுக்குப் பெண் சரிநிகர் சமானமாகச் செயல் படாவிடில் அமைதி ஏது? வாழ்க்கையில் வெற்றி ஏது?

பாரதத்தின் கைம்பெண்ணின் அவல நிலையை, சூர்யகாந்த் திரிபாடி நிராலா பின்வருமாறு படம் பிடித்துக் காட்டுகிறார்:

எரிகின்ற தீபமாய் அமைதியுடன்
கவலைகளில் தன்னை மறந்து
கொடிய காலத்து ஊழிக்கூத்தின்
நினைவுக்கோடு போன்று
கொழு கொம்பற்று விழுந்த கொடியெனத் துவண்டு
இழிந்த பாரதத்தின் கைம்பெண்
கவலையில் காய்ந்த உதடுகள்
அச்சம் மிக்க பார்வை
உலகத்தின் பார்வையிலிருந்து மறைந்து
தெளிவற்ற மொழியிலே—
உள்ளக் குமுறல்கள்
ஆண்டவா? என்ன கொடுமை! என்ன கொடுமை!
கைம்பெண்ணின் கண்ணீரை என்றாவது துடைத்தாயா நீ?
அல்லது அனைவரையும் துக்கமுறச் செய்வதுதான்
உன் பணியோ?

பெண்களின் அவல நிலையை ராம்தாரிசிங் தினகர், ரஷ்மிரதி என்னும் காவியத்தில் குந்தியின் கூற்றாக கூறியிருப்பது நமது மனதைத் தொடுகிறது.

பிள்ளாய்! பாரிலே பெண்ணின் நிலை மிக தீனமானது
உண்மையிலே அபலை! அதிலும் கன்னி!
கடினமே ஊர் வாயை மூடுவது!
வழுக்கி விழுந்தவள் என்றும் தன்வதனம்காட்ட முடியாதோ!

இதனையே,

சாத்திரம் அனைத்தும் எழுதியவன் ஆணே!
அடக்கியாள நினைத்தனனே பெண்ணை!
அநுகூல விதிகள் தனக்கெனவே!
தளையிட்டுத் தவிக்க வைத்தனரே பெண்களை!

என்று குப்தஜி எழுதியுள்ளார்.

தினகரும் ஆணின்மீது குற்றம் சாட்டிக் கேட்கிறார்.

சிந்தூரமிட்டுப் பெண்ணைப் பூட்டிவைப்பது சிறந்த விதியோ
முந்தானையிலே முடித்து வைத்துப் பின்னர்
தெருவிலே தூக்கி எறிவது நீதியோ!
ஆணுக்கு மட்டும் கற்புநெறி ஏன் இல்லை?

என்று கேட்டு, ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரே கற்புநெறி கேட்ட பாரதியை இங்குக் கவிஞர் நினைவுபடுத்துகிறாரோ?

பாரதிதாசனுடைய கருத்துகளையும் இந்திக் கவிஞர்களின் கருத்துகளையும் ஒப்பிட்டு நோக்குவோமானால் ஆவேசக்கவி பாரதிதாசனும், தினகரரும், அழகுக்கவி பிரசாத்தும், மற்றும் பற்பல கவிஞர்களும் எண்ணத்தால் ஒருவரே என்பதை உணரலாம். பாரதி, "செப்பு மொழி பதினெட்டுடையாள் சிந்தனை ஒன்றுடையாள்" என்று பாரதத்தைப் பற்றிக் கூறியது நமது நினைவுக்கு வருகிறது.

பாரதிதாசன் கூறியபடி, தமிழில் பிறமொழி நூல் அனைத்தையும் நல்ல தமிழாக்கிப் படிக்க முயல்வோமானால் கவிஞர்கள் மொழியாலோ, இருப்பிடத்தாலோ வெவ்வேறாகத் தோன்றினாலும் எண்ணங்களாலும், உள்ளக்கிடக்கைகளாலும் அவர்கள் அனைத்துலக சமுதாயத்தினர் என்பது நன்கு விளங்கும். பாரதிதாசன் கூறியபடி "புதியதோர் உலகம்" படைத்துச் சமநோக்குடன் அனைத்துக் கவிஞர்களின் நற்கருத்துகளையும் நாம் ஏற்போமாக!

# 8. பாரதிதாசனும் தாராசு செவ்செென்கோவும்

**சு. செல்லப்பன்**

## இருபெருங் கவிஞர்கள்

உலகில் எத்துணையோ மலைகள் இருப்பினும் இமயம், ஆல்ப்சு போன்ற மலைகளே உயர்ந்து நிற்கின்றன. அது போன்றே உலகம் பல்லாயிரக் கணக்கில் கவிஞர்களை ஈன்றெடுத்துள்ளது என்றாலும் அவருள் ஒரு சிலர் மட்டுமே உலகளாவிய புகழுக்கு உரியவராக உயர்ந்து நிற்கின்றனர்.

பாவேந்தர் பாரதிதாசன் இந்தியாவின் பிரெஞ்சுப் பகுதியாக விளங்கிய புதுச்சேரியில் 1889 ஏப்ரல் 29இல் தோன்றி எழுபத்து மூன்று ஆண்டுகள் வாழ்ந்து 1964 ஏப்ரல் 21இல் மறைந்தார். சோவியத் குடியரசின் பகுதியாயுள்ள உக்ரெயின் கீவ் நகருக்கு அருகிலுள்ள மோரின்த்சி என்னும் சிற்றூரில் பாவேந்தர் தோன்றுவதற்கு 75 ஆண்டுகள் முன் தோன்றி (9-3-1814) நாற்பத்தேழு ஆண்டுகள் மட்டுமே வாழ்ந்து 1861-இல் (10-3-1861) மறைந்தவர்.

பாவேந்தர் பாரதிதாசனும், உக்ரேனியக் கவிஞர் செவ்செென்கோவும் மக்கள் கவிஞர்களாக மதிக்கப்பட்டு வருபவர்கள். இருவரையும் சம காலத்தவர் என்று சொல்வதற்கில்லை. செவ்செென்கோ தோன்றி முக்கால் நூற்றாண்டுக்குப் பிறகே பாவேந்தர் தோன்றியுள்ளார். என்றாலும் அடிமையையும் மடமையையும் எதிர்த்துக் குரல் கொடுத்ததில் ஓரணியில் நிற்பவர்களாதலின் அவ்வகையில் அவர்கள் இருவரையும் இணைத்துப் பார்ப்பது பொருத்தமேயாம்.

## காலக் கட்டாயம்

உலகில் கொடுமைகள் தோன்றும்போதெல்லாம் அக் கொடுமைகளைக் கண்டிக்கவும், களையவும் அறிஞர்கள் தோன்றுவது

இயற்கை. கொடுமை என்ற ஒரு சக்தி இருக்கும் வரை அதைக் களைகின்ற ஆற்றலும் இருந்தே வரும்.

மக்கள் தொகுதி எக்குறை யாலே
மிக்க துன்பம் மேவு கின்றதோ
அக்குறை தீர்க்கும் ஆற்றல் வாய்ந்தோனைச்
சிக்கென ஈன்று சீர்பெறல் இயற்கையாம்

என்பார் பாவேந்தர். கொலை மலிந்த நாளில் கொல்லா நோன்பை நிலை நிறுத்த சமணம் தோன்றுவதும், முத்தி சிலரின் சொத்தென இருக்கையில் இராமானுசன் தோன்றுவதும், சார் மன்னன் கொடுமையால் உருசியா இலெனினை ஈன்றெடுத்ததுவும் இயற்கை. இந்த இயற்கை நியதியின் அடிப்படையில் தங்கள் தங்கள் காலத்திலிருந்த கொடுமை தீர்க்கப் போராடிய கவிதைப் போராளிகளாகப் பாவேந்தரும் செவ்சென்கோவும் விளங்கியிருக்கிறார்கள்.

**காலச் சூழல்**

அறிஞர்களும், கவிஞர்களும் தோன்றக் காலச் சூழலும் காரணமாக அமைகிறது. உருசியாவில் சின்ன உருசியா என்று அழைக்கப்பட்டு வரும் உக்ரேனியாவில் சார் ஆட்சியில் மேல்தட்டு மக்களின் பிடியில் ஏழை மக்கள் சிக்கித் தவித்தனர்; பண்ணை அடிமை முறையால் பெரிதும் துன்புற்றனர். பண்ணையார் இட்ட கட்டளைகளை நிறைவேற்றுவதைத் தவிர வேறு எதுவும் செய்ய இயலாத நிலையில் அவர்கள் இருந்தனர். பெண்கள் கொடுமைப் படுத்தப்பட்டனர். இவற்றை எதிர்த்துக் கலகங்கள் விளைந்தன. என்றாலும் ஏழைகள் அடக்கி ஒடுக்கப்படுவது இயற்கைதானே! இச் சூழலில்தான் செவ்சென்கோ ஓர் பண்ணை அடிமைக் குடும்பத்தில் பிறந்தார். உள்ளூரில் இருந்த கிறித்தவப் பாதிரியாரின் உதவியால் எழுதப் படிக்கக் கற்றார். ஆடு மேய்ப்பவனாகவும் வேலைக்காரனாகவும் பாதிரியாரிடம் வேலை பார்த்தார். சிறு வயதிலேயே ஓவியம் வரையும் ஆற்றல் பெற்றிருந்தார். இவரது திறமையைக் கண்ட அவரது பண்ணையார் இவரை அடிமை ஓவியனாக ஏற்றுக் கொண்டார். பண்ணையாருடன் பீட்டர்சுபர்க் சென்றபோது இவரது திறமையைக் கண்டவர்கள் இவரை அடிமைத்தளையிலிருந்து விடுதலை செய்தனர். செவ்சென்கோவின் கலை ஆர்வத்தைக் கண்ட கலைஞர் கார்ல்பிருலோவ், சுகோவ்கி என்ற மாகவிஞனின் படத்தை வரைந்து இரண்டாயிரத்து ஐநூறு ரூபாய்க்கு அதை விற்றுக் கிடைத்த பணத்தைக் கொண்டு அடிமை விலங்கொடித்து அவரை மீட்டார். ஓவியரான செவ்சென்கோ கவிதையிலும்

நாட்டம் செலுத்தினார். 1840-இல் அவருடைய முதல் கவிதைத் தொகுதி கொப்சார் வெளிவந்தது. சார் மன்னனை எதிர்த்து மக்கள் போராட்டச் சக்தியை இவருடைய கவிதைகள் ஊட்டின. செவ்சென்கோ,கீவ் நகரில் உருவான இரகசிய அரசியல் அமைப்பில் சேர்ந்தார். கைது செய்யப்பட்டு ஏழு ஆண்டுகள் இராணுவச் சிறைத் தண்டனைக்கு ஆளாக்கப்பட்டார். அங்கு அவர் படிக்கவும் எழுதவும் தடைவிதிக்கப்பட்டது. ஆயினும் அவர் எழுத்துப் பணியை விட்டாரில்லை; எழுதியவற்றைத் தன் காலணியில் மறைத்து வைத்துக் காத்தார். உருசிய ஓவியர் ஒருவர் முயற்சியால் விடுவிக்கப்பட்ட இவர் தன் தாய்நாடு திரும்பினார். என்றாலும் மீண்டும் புரட்சிச் செயல்களில் ஈடு பட்டதால் மீண்டும் கைது செய்யப்பட்டு பீட்டர்சுபர்க்கு அனுப்பப்பட்டார். விடுதலைப் போரில் ஈடுபடும்படி எழுத்தாளர் களை அழைத்தார். உடல் நலக் குறைவினால் பீட்டர்சுபர்க்கில் மரணமடைந்தார். 24 ஆண்டுகள் அடிமையாகவும், 10 ஆண்டுகள் நாடு கடத்தப்பட்டும், 4 ஆண்டுகள் காவல்நிலையக் கண் காணிப்பிலும் இருந்தவர் செவ்சென்கோ. இந்த வாழ்க்கை முறையினால் தோன்றியவைதான் அவருடைய புரட்சிக் கவிதைகள்.

கொப்சார் என்ற உக்ரேனியச் சொல் பல நரம்புகளைக் கொண்ட உக்ரேனிய இசைக் கருவியைக் குறிப்பது. கொப்சா வைக் கைகளிலேந்தி ஒரு பாடகன் பண்டைய நாளில் ஊர் ஊராகச் சுற்றித் திரிந்திருக்கிறான். கொப்சா-பாடகர்கள் அநேகமாகக் குருடர்களாகவும், ஏழைகளாகவுமே இருந்திருக் கின்றனர். கிராமியப் பாடல்களைப் பாடிக் கொண்டும், மக்கள் போற்றும் வீரர்களை வணங்கிக் கொண்டும், நாட்டின் பண்டை வரலாற்றை மக்களுக்கு எடுத்துச் சொல்லிக் கொண்டும், ஊர் ஊராக அவர்கள் சுற்றித் திரிந்திருக்கிறார்கள். உக்ரேனிய மக்கள் இந்த கொப்சார்களுக்குப் பெரு மகிழ்ச்சியோடு உணவு உடை மற்றும் பணம் கொடுத்து உதவியிருக்கிறார்கள். பின்னைய நாட்களில் உக்ரேனின் முதலாவது மக்கள் கவிஞர் என்ற வகையில் தராசுவைக் கொப்சார் என்றே மக்கள் அழைத்தார்கள். கொப்சார்களது கலை இன்னமுங்கூட சோவியத் உக்ரேனில் நின்று நிலவுகிறது.

பாவேந்தரோ புதுவையில் கூலவாணிகரின் மகனாகப் பிறந்தார். தமிழ் பயின்று ஆசிரியரானார். மேலலுவலர்கள் தவறான செயல்கள் செய்தால், தான் அவர்கள் கீழ் வேலை

பார்க்கிறோமே என்ற எண்ணத்தையும் மறந்து அத்தவறுகளைச் சுட்டிக் காட்டத் தயங்கமாட்டார். ஆதலின் அவர்களுடைய சினத்துக்கு அடிக்கடி அவர் ஆளானதுண்டு. அவர் ஆசிரியராக அலுவல் பார்த்த 37 ஆண்டுகளில் 20 இடங்களுக்கு மேலாக மாறுதல் செய்யப்பட்டுள்ளார். அரசியல் காரணங்களுக்காகவும் அடக்குமுறைக்கு உள்ளாகியிருக்கிறார்.

1919-இல் அவர் திருபுவனையில் ஆசிரியராய் இருந்தார். அப்போது நடந்த தேர்தலில் அப்போது மிகப் பெருஞ் செல்வாக்குடன் ஆட்சி நடத்திக் கொண்டிருந்த கெப்ளே என்பவருடைய கட்சி தோற்றதற்கு காரணம் சுப்புரத்தினமே என்பதறிந்து கெப்ளே, கவிஞர் மீது பொய்க்குற்றம் சாட்டிச் சிறையில் இட்டார். $1\frac{1}{4}$ ஆண்டுகள் சிறையிருந்தார். அவருக்காகக் குட்டியா பிள்ளை என்ற வழக்கறிஞர் வாதாடி கவிஞருக்கு வழக்கில் வெற்றியைத் தேடித்தந்தார்.

செவ்செென்கோ, பாரதிதாசன் ஆகிய இருவருமே கொடுமைக்கு ஆளான மக்களுக்காக ஆட்சியிலிருப்பவர்களை எதிர்த்துக் குரல் கொடுத்ததால் பெருந் தொல்லைக்கு ஆளாகியிருக்கிறார்கள். இத்தொல்லைகள் அவர்களுடைய நியாய உணர்வுகளைக் கூர்மைப் படுத்தியுள்ளனவே தவிர ஒருபோதும் அவர்களைத் துவண்டு தளரச் செய்ததில்லை.

**விடுதலை உணர்வு**

அடிமைச் சேற்றில் ஆழ்ந்த மக்கள், தாங்கள் வாழ்கின்ற மண் தங்களுக்குரியது என்பதையே மறந்து விட்டார்கள். மக்கள் யாரும் எங்குமே இந்நிலையில் இருப்பது இயற்கையே! நம் நாடு ஆங்கிலேயரிடம் அடிமைப்பட்டு நின்றபோது வழியில் செல்லும் இருவரிடம் வேறுபாடு தோன்றினால் இந்த வழியில் நீ நடக்கக் கூடாது என்று ஒருவன் சொன்னால்-மற்றவர், "இது உன் சாலையா? கம்பெனியார் சாலை. இதில் என்னைத் தடுக்க உனக் உரிமை!" என்று கேட்பான். இந்திய மண்-கம்பெனியார் சாலையாம்! அதனால்தான் இந்த மண் உன்னுடையது என்ற எண்ணத்தை ஊட்டவே பாரதியார் "நாமிருக்கும் நாடு நமதென்பது அறிந்தோம்; அது நமக்கே உரிமையாம் என்பதறிந்தோம்" என்று பாட வேண்டியவரானார். "இந்திய நாடிது என்னுடைய நாடு, என்று தினம் தினம் நீயதைப்பாடு" என்று இந்தியா உன்நாடு என்பதை மறந்துவிடாதே எனப் பாடுகிறார் நாமக்கல்லார். பாவேந்தர் தான் கொண்ட கொள்கைக்கேற்ப,

வாழ்க வாழ்கவே!
வளமார் எமது திராவிடநாடு
வாழ்க வாழ்கவே!
சூழும் தென்கடல் ஆழும் குமரி
தொடரும் வடபால் அடல்சேர் வங்கம்
ஆழும் கடல்கள் கிழக்கு மேற்காம்
அறிவும் திறனும் செறிந்த நாடு.

இது உன் நாடு; அதை வாழ்த்து என்று எடுத்துரைக்கின்றார்.

நமக்குச் சுதந்திரம் சும்மா வந்து விடாது என்கிறார் பாரதிதாசன்.

**சுதந்திரம்**

தித்திக்கும் பழம் தின்னக் கொடுப்பார்;
மதுரப் பருப்பு வழங்குவார் உனக்கும்;
பொன்னே மணியே. என்றுனைப் புகழ்வார்:
ஆயினும் பச்சைக்கிளியே அதோ பார்!
உன்னுடன் பிறந்த சின்ன அக்கா,
வான வீதியில் வந்து திரிந்து
தென்னங்கீற்றுப் பொன்னூசல் ஆடிச்
சோலை பயின்று சாலையில் மேய்ந்து
வானும் மண்ணுந்தன் வசத்திற் கொண்டாள்!
தச்சன் கூடுதான் உனக்குச் சதமோ?
அக்கா அக்கா என்று நீ அழைத்தாய்.
அக்கா வந்து கொடுக்கச்
சுக்கா மிளகா சுதந்திரம் கிளியே?

செவ்சென்கோவும் தாங்கள் வாழ்வது தங்களுடைய சொந்த நாடு; அல்லது சொந்த வீடு என்பனவற்றைக் கூட மக்களுக்கு நினைவுபடுத்திச் சொல்ல வேண்டிய அவல நிலை இருப்பதை எண்ணிக் குமைகிறார்.

அன்பிற்குரிய மக்களே!
சொந்த தேசத்தில்
சொந்த வீடுகளில்
பூட்டப்பட்டு நீங்கள் ஏன்
புதைந்து போகிறீர்கள்?

என்று கேட்கிறார். நாடு இப்படியே அடிமைக் காடாய்த்தான் கிடக்க வேண்டுமா? இல்லவே இல்லை. அச்சத்தை நீக்கி நிமிர்ந்

தால் அடிமைத்தளை அக்கணமே அறுபடும். அச்சமற்ற அத் தன்மையை உருவாக்குவதே கவிஞனின் வேலை எனச் செவ் சென்கோ சுட்டுகிறார்.

இந்த பூமி
புது யுகமாய்
புனர்சென்மம் எடுக்கும்
அப்பொழுது
பூமி எங்கும்
மனிதர்கள் வாழ்வார்கள்.

இது உக்ரேனிய மக்களை நினைத்து செவ்சென்கோ எழுதிய பாடல் என்றாலும் உலகில் அடிமைப்பட்ட மக்கள் எங்கெங்கிருக்கிறார்களோ அவர்களுக்கெல்லாம் பொருந்துவ தாகும். செவ்சென்கோவின் விடுதலை வேட்கைக்கு

நலங்குன்றி இங்கே நானில்லை எனினும்,
என்னுள் ஏதோ எட்டிப் பார்க்கின்றது;
இதயத்தில் ஏதோ முட்டிப் பார்க்கின்றது;
அன்னமே காணாத சின்னக் குழந்தையாய்,
அழுது, விம்மி, அரற்று கின்றது;
எதிரே வருகின்ற இன்னலை உணர்ந்தா?
சுதந்திரம் சோம்பித் தூங்குவ தாலா?...
ஜார் நிக்கோலன் தாலாட்டுப் பாடி,
சுதந்திர அன்னையைத் தூங்கப் பண்ணினான்.
சோம்பல் சுதந்திரம் சுரீலென விழிக்க,
எல்லோரும் கையில் ஏந்துக சுத்தியல்!
கூரிய கோடாரி கொண்டு வருக!
அனைவரும் ஒன்றாய் அணிதிரண் டிடுக!
தூங்கும் சுதந்திரத் துயில் எழுப்பிடுவோம்
இன்றேல்,
தீர்ப்பு நாள்வரை தீமைகள் நிலைக்கும்!
தூக்கும் தொடரும்; தொல்லைகள் படரும்.
எசமானர் யாரும் எழுப்ப மாட்டார்!
கூடுதல் அரண்மனை, கோயில் கட்டுவர்
குடிவெறி "சார்"மேல் புகழைக் கொட்டுவர்
"பைசாண்டியன்" பழமைச் சடங்கினைப் பற்றுவர்
பகுத்தறி விலாதவர், வேறெதைக் கற்றவர்

எனும் இப்பாடல் மிகச் சிறந்த சான்றாகும்.

தடைகளை உடைத்து அயராது பாடுபட வேண்டும் என்றும் செவ்சென்கோ வலியுறுத்தத் தவறவில்லை.

நசுக்கிக் கொண்டிருக்கும்
உணர்வுகளை
இரும்பு விலங்குகளை
தடையை உடைத்து
சுதந்திரப் பறவையாய்
சிறகு விரியுங்கள்!

இந்த உலக நோக்கைப் பாவேந்தரிடமும் காண முடிகிறது:

உன் வீடு—உனது பக்கத்து வீட்டின்
இடையில் வைத்த சுவரை இடித்து
வீதிகள் இடையில் திரையை விலக்கி
காட்டொடு நாட்டை இணைத்து மேலே
ஏறு! வானை இடிக்கும் மலைமேல்
அறிவை விரிவுசெய்! அகண்டமாக்கு!
விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை!
அணைத்துகொள்! உன்னைச் சங்கமமாக்கு.
மானிட சமுத்திரம் நானென்று கூவு!
பிரிவிலை எங்கும் பேதமில்லை
உலகம் உண்ணவன் உடுத்த உடுப்பாய்!
புகல்வேன் 'உடைமை மக்களுக்குப் பொது';
புவியை நடத்தும் பொதுவில் நடத்து!
வானைப்போல மக்களைத் தாவும்
வெள்ள அன்பால் இதனைக்
குள்ள மனிதர்க்கும் கூறடா தோழனே!

**காதரினா**

உருசிய வரலாற்றில் முதன் முதலில் ஆயுதமேந்திப் போரிட்ட உயரியப் புரட்சி இயக்க உறுப்பினர்கள் 'டிசம்பரிஸ்டுகள்' என அழைக்கப்பட்டனர். இக்கிளர்ச்சியின் நோக்கம் பண்ணை அடிமை முறையைத் தூக்கி எறிந்து ஒரு குடியரசை உருசியாவில் நிறுவ வேண்டுவமென்பதே. 1825 திசம்பரில் முதல் புரட்சி நடவடிக்கை வெடித்தது. 1825 திசம்பர் 14இல் மாசுகோ தலைநகரில் செனட்டின் முன் மூவாயிரம் புரட்சிப் படையினர் கூடி விட்டனர். ஆனால் திடமான நடவடிக்கை இல்லாததால் இன எழுச்சித் தலைவர்கள் கொல்லப்பட்டனர். இவ்வாறு கொடுமை நிறைந்த அச்சூழலில் மேற்குடியினர் 'மாசுகோ

வாழ்நர்' என்றழைக்கப்பட்டனர். இவர்கள் படைப்பிரிவுகளில் பெரும் பொறுப்புகளில் இருந்தனர். இவ்வாறு படையிலிருந்த ஒரு மாசுகோ வாழுநரால் வஞ்சிக்கப்பட்ட ஒரு கன்னிப் பெண்ணின் கதையே காதரினா.

கற்பினைக் காத்திடக் காதரினா அறியவில்லை
விற்பனைப் பண்டமாய் வாங்கியே போயினள்
சாகட்டும் இவளோ சண்டாளி என்றனர்
ஆகக்கூடி அவளும் அலைந்திட லாயினாள்
பெண்களே இதனைப் பார்த்துத் திருந்துவீர்
கண்ணினைக் கசக்கிக் கண்ணீர் விடாதீர்

ஒரு படைத்தலைவனிடம் மனம் பறி கொடுத்துக் கற்பிழந்த உக்ரேனிய அடிமைப்பெண் காதரினா, காதலன் வாராமையால் துயரமடைகிறாள். அவளுடைய தாய் தந்தையரோ, காதலனைத் தேடிச் சென்று அவனுடன் வாழுமாறு அவளை அனுப்பி விடுகின்றனர். பிறந்த குழந்தையுடன் காதலனைத் தேடி அலைந்து, அவனையும் கண்டுபிடித்தாள். ஆனால் அவனோ அவளை அறியாதவன் போலச் சென்று விடுகின்றான். குழந்தையை அனாதையாக விட்டு விட்டுக் காதரினா தற்கொலை செய்து கொள்கிறாள். வழியில் கிடந்த குழந்தையை வேடுவர் எடுத்து வளர்க்கின்றனர். பிச்சைக்காரனாய் அலைகிறான். அவன் வேறு மணம் செய்து கொண்டான். பன்னிரண்டு வயதுச் சிறுவனான அம்மகன் ஒரு நாள் தன் மாற்றாந் தாயிடமே பிச்சை கேட்கிறான். காசு போட்ட அவள், அவன் முகத்தை உற்றுப் பார்த்தாள். அருகில் உள்ள கணவன், அவன் தன் மகன்தான் என்பதை மறைக்கத் தடுமாறிப் போயினான். அவள் அச்சிறுவனின் பெயரைக் கேட்டாள். "இவான் தாயே" என்றனன்.

வழி நடந்து செல்லும்போது ஒரு படையாளியைப் பார்த்த அவள், ஒருவனிடம் தன் கணவன் பெயரைச் சொல்லி "கண்டீர் களா?" என்று கேட்டாள். அவனும், பட்டாள மொழியில் பரிகாசம் செய்தே,

கட்டான உடம்பு; கண்டிப்பாய் இவனைப்
பட்டாளத் தானும் பகட்டி இருப்பான்

என்று கூறினான். இப்படிச் சொன்ன இழிஞனை நோக்கி, மக்களா, மாக்களா என்றே சீறினாள். இங்கே பெண்மையின் பெருமையை செவ்சென்கோ அழகுபட எடுத்துரைக்கிறார்.

கவிஞர்களின் கனவுகள்

நாடு விடுதலை பெற்று மக்கள் நல்லாட்சியில் திளைக்க வேண்டும் என்ற எண்ணத்தைக் கனவு என்ற கவிதை வழி செவ்சென்கோ வெளிப்படுத்துகிறார். நாடு அடிமையில் உழல்வது அவரை எவ்வளவு உறுத்துகிறது என்பதை அக்கவிதை சுட்டுகிறது.

பண்ணை முதலாளி ஒருவனுடைய வயலில் அடிமைப்பெண் ஒருத்தி கோதுமை அறுத்துக் கொண்டிருக்கிறாள். அவளுடைய குழந்தை வைக்கோல் போருக்குப் பின்னே உறங்கிக் கொண்டிருக்கிறது. உழைத்துக் களைத்த அவள், கிடைத்த இடைவேளையில் குழந்தைக்குப் பால் கொடுக்கச் செல்கிறாள். குழந்தையைக் குனிந்தெடுத்து குளிர் முத்தமீந்து பாலூட்டித் தன் மடியில் படுக்க வைத்துத் தூங்கச் செய்கிறாள். களைப்பு அவள் கண்களை மயக்குகிறது; தூக்கம் அவளை ஆட்கொள்கிறது. அப்போது கனவொன்று விரிகிறது. அவளுடைய செல்ல மகன் 'இவான்' வளர்ந்து இளமை முறுக்கோடும் எழில் கொஞ்சும் செல்வச் செழிப் போடும் முழு மனிதனாய் நிற்கிறான். அவன் இப்போது அடிமை இல்லை; விடுதலை பெற்ற வீர இளைஞன்.

சுதந்திர மனிதனாய்த்
தன்னைப் போலவே
சுதந்திரமானவளை மணந்து
துணையோடும் குழந்தைகளோடும்
தன் சொந்த வயலில்
கடுமையாக உழைக்கிறான்.
இவள் அவனைப் பார்க்கும்போது
அரிவாளைக் கையிலேந்திப் புன்னகைக்கின்றான்!

எவ்வளவு இனிமையான கனவு! சொந்த நிலம்; தன்னுழைப்பு; மகிழ்ச்சியான மனைவி மக்கள்; தன் நிலத்தில் தான் உழைக்கும் பெருமையைத் தாயிடம் வெளிப்படுத்தும் புன்னகை. திடீரெனக் கனவு கலைகிறது! பழைய வைக்கோல்போரும் பால் குடித்துத் துயிலும் குழந்தையும் அவளை உண்மை நிலைக்குக் கொண்டு சேர்க்கின்றன.

வைத்தூற்றின் நிழலமர்ந்தே
மனநினைவைத் தான்கொணர்ந்தாள்;
கைத்தலத்துள் குழந்தை அழ
கடவுளே! ஆ! தன் துணியால்

இறுகணைத்துச் சுருட்டுகின்றாள்;
வெகுவேகம், அவ்சரமாய்;
அறுவடைதான் செய்வதற்கே
அம்மம்மா புறப்பட்டாள்...
அந்தோ ஆங்குள்ள
அக்கொடும் மேற்பார்வையாளன்
வெந்தழல்போல் சினமுடையான்
விழிஇவளைக் கண்டுவிட்டால்...

பாவம்! கனவு கூட நிலைத்து நிற்கவில்லை அவளிடம்! பண்ணையின் அடிமை மனத்திலும் விடுதலை வேட்கை படிந்திருக்கிறது என்பதைப் பக்குவமாய்ப் புலப்படுத்துகிறார் கவிஞர். இத்தகையோர் உணர்வுகளை ஒன்று திரட்டி எழுச்சியை உருவாக்கினால் விடுதலை நிச்சயம் என்ற நம்பிக்கையைக் கனவின் வழியே உருவாக்கிக் காட்டுகிறார்.

நாட்டு விடுதலையைக் கனவுக் காட்சியில் காட்டுகிறார் செவ்சென்கோ. பாவேந்தரோ தமிழ் வளர்ச்சி, தமிழர் ஒற்றுமை ஓங்க இதே உத்தியைக் கையாண்டு பாடியிருக்கிறார்.

தமிழ் நாடெங்கும் தடபுடல்! ஆண்களும் பெண்களும் பெருந் திரளாகப் பரந்த வெளியில் கூடியுள்ளனர். தமிழ் வளர்க்கக் கோடி கோடியாகப் பொற்காசு குவிகிறது. கூட்டத்தில் ஒருவர் ''தமிழ் உயிரல்லவா'' என்கிறார். அகிலமே கிழியும்படியாக 'ஆம் ஆம்' என்கின்றனர் அனைவரும். 'தமிழர் ஒற்றுமை' என்ற வினாக் குறியை ஒருவர் எழுப்புகிறார். அது நமக்குத் தேனல்லவா என்ற இனிப்பு மொழியை எங்கும் எதிரொலிக்கின்றனர். சிங்கப் புலவர்களை ஒன்று சேர்த்துச் சங்கம் அமைக்கின்றனர். தமிழ் மக்கள். கவிஞர்கள் கற்கண்டு மொழியில் வாழ்வியல் நூல்களையும் அறிவியல் நூல்களையும் வரைந்து குவிக்கின்றனர். காற்றில் தமிழ்! கச்சேரியில் தமிழ்! எங்கும் தமிழ்! எதிலும் தமிழ்! இன்பத்தில் திளைத்திருக்கும் இவ்வேளையிலா கனவு கலைய வேண்டும்?

காதல் ததும்பும் கண்ணாளன் தனைக்
கோதை ஒருத்தி கொச்சைத் தமிழால்
புகழ்ந்தா ளென்று பொறாமல் சோர்ந்து
வீழ்ந்தான்! உடனே திடுக்கென விழித்தேன்
அந்தோ! அந்தோ! பழைய
நைந்த தமிழ்நாடு நானிருந் தேனே!

தமிழர்கள் மொழியை உயிரென ஓம்ப வேண்டும்! தமிழ்ப் புலவர்கள் ஒன்றுபட்டுச் சங்கமமைத்து உலகியலின் அடங்கலுக்கும் துறைதோறும் நூற்களை உருவாக்கித் தர வேண்டும். எழுச்சியும் உணர்ச்சியும் மிக்க கவிதைகள் எழுதப்பட வேண்டும். கொச்சைத் தமிழில் பேசும் கொடுமை தொலைய வேண்டும் என்பன கவிஞரின் உள்ள உணர்வுகள். இவை கனவுகளாக இருக்கின்றனவே தவிர நனவாகவில்லை என்ற ஏக்கத்தை இக் கவிதை தாங்கி நிற்கிறது. கனவு கண்ட செவ்செங்கோவின் அடிமைப்பெண் விழித்ததும் பழைய வைக்கோற்போரையும், கடுகடுக்கும் கண்காணியையும் காணுகிறாள். பாவேந்தரோ கனவு கலைந்ததும் மொழியுணர்வை இழந்திருப்பதால் நைந்துள்ள தமிழ்நாட்டில் தான் இருக்கக் காணுகிறார்.

இருவருடைய கவிதைகளும் எழில்படக்காட்டி நனவைத் துன்பச் சுமையில் அழுத்துகின்றன. கவிஞர்கள் இக்கவிதை வழி நமக்குக் கூறுவனவோ இக் கனவுகள் நனவாக்கப்பட வேண்டுமென்பதே!

### இறை நம்பிக்கை

செவ்செங்கோ இறை நம்பிக்கை கொண்டவராக இருந்தார். கொடுமைகள் தீர இறைவன் துணை வேண்டும் என்பது அவர் எண்ணமாக இருக்கிறது. படைப்பில் இறைவன் ஏன் சோதனைகளையும் துயரங்களையும் இணைக்கவேண்டும் என ஏங்குகிறார். கடவுள்மீது பாய அன்றைய மனநிலை அவருக்கு இடந்தரவில்லை.

ஒரு பெண்புறா
நீலச்சிறகுகள் கொண்ட தன்இணையை
நினைத்துருகுவது தவறா?
ஆண்புறா
கழுகால் கொல்லப்பட்டது
அதன் குற்றமா?
வேதனையில் துவளும்
அந்தப் பெண்புறா
வீணாக காத்திருக்கிறது
தன் துணைக்காக
ஆண் புறாவை
அது தேடுகிறது...
அழைக்கிறது...
இங்குமங்கும்...

வருத்தத்தோடு பறக்கிறது...
ஆனாலும்...இறைவன் அதை
கருணையோடு நடத்துகிறான்.
நெடுநாட்களாக காணமுடியாத
வீழ்ந்துவிட்ட தன் துணையைத் தேடி...
அது வானத்தில் பறந்து செல்கிறது
உலகை உருவாக்கியவனின் இடத்திற்கு...

ஆண்டவன் எண்ணப்படிதான் எதுவும் நடக்கும் என்கின்ற நம்பிக்கையை மீறுகின்ற துணிவு செவ்சென்கோவுக்கு ஏற்படவில்லை. ஆனாலும், சொர்க்கம் என்பது விண்ணில் இல்லை, அது மண்ணில் மக்களை நேசிப்பதில் உண்டு என்று சொல்ல அவர் தயங்கவில்லை.

தொடக்கக் காலத்தில் இறை நம்பிக்கையுடன் 'எங்கெங்குக் காணினும் சக்தியடா—தம்பி ஏழுகடல் அவள் வண்ணமடா' என்று பாடிய பாரதிதாசன் பின்னாளில் நாத்திகராக மாறியது அனைவரும் அறிந்ததே.

## இறுதி ஆசை

செவ்சென்கோ தன் இறுதி ஆசையாக உக்ரேனிய மண் வயல்களையும், எல்லையற்ற ஸ்தப்பியையும், நீப்பர் ஆறு பாய்ந்தோடும் கரைகளையும் தன் கண் காண வேண்டுமென விழைகிறார். அந்த ஆற்றில் பேரிரைச்சலைக் காதுகள் கேட்கும் படியாக சமவெளியின் உயர்ந்த குன்றின் மீது தன்னைப் புதைக்குமாறு இறுதி வேண்டுகோளாக எழுதியுள்ளார்:

நான் மறையும் பொழுது
என் நேசத்துக்குரிய
உக்ரைன் மண்ணில்
என்னைப் புதையுங்கள்
உயர்ந்த மலைகளுக்கிடையில்
விரிந்த சமவெளியில்
விரைந்து பாய்கின்ற
நீப்பர் நதியின் கரையில்
என் கல்லறையைப் புதைத்து வையுங்கள்
ஏனெனில் அந்த நிலத்தில்
எல்லையற்ற மனித காலடிகள் பதிந்திருக்கும்
நதியின் கொந்தளிப்பை
என் கண்கள் காணக்கூடும்

என் செவிகள் அந்த ஓசையைக் கேட்கக் கூடும்
ஓ!......
என்னைப் புதைத்த பின்
எழுச்சியோடு எழுங்கள்
உங்களுடைய கனமான விலங்குகளை
உடைத்தெறியுங்கள்
நீங்கள் அடைந்த சுதந்திரத்துக்கு
அடக்குமுறையாளர்களின்
இரத்தத்தை ஊற்றுங்கள்
புதிய மிகப் பெரிய
சுதந்திர குடும்பத்தில்
அன்பான வார்த்தைகளை
மிருதுவாகப் பேசிக்கொண்டு
மனிதர்களே!
மீண்டும் வேண்டிக் கொள்கிறேன்
என்னை நினையுங்கள்

செவ்சென்கோவின் உடல் பீட்டர்சுபர்க்கில் அடக்கம் செய்யப்பட்டது. ஆனால் அவரது இறுதி வேண்டுகோளை நினைவு கூர்ந்து அவரது உடலை நீப்பர் குன்று ஒன்றில் புதைக்குமாறு கேட்டுக் கொண்டனர். இரண்டு திங்களுக்குப் பிறகு அவரது உடலடங்கிய பெட்டி எடுக்கப்பட்டு அவர் எங்கு தனக்கொரு வீடுகட்ட வேண்டுமென்று எண்ணினாரோ அதே இடத்திற்கு அருகில் நீப்பர் கரையையொட்டி, செவ்னேச்யா குன்றின் மீது உயரத்தில் அவர் உடல் அடக்கம் செய்யப்பட்டது. இப்போது அக் குன்றம் சோவியத் மக்களால் தாராசு குன்று என அழைக்கப்பட்டு வருகிறது.

போல்ஷிவிக்குகளால் நடத்தப்பட்ட பிராவ்தா நாளிதழ் தனது 18-2-1914 ஆம் தேதியிட்ட இதழில் பின்வருமாறு எழுதியது: "தனது கொப்சார் வாயிலாகத் தலைசிறந்த எழுத்தாளர்களின் வரிசைக்கு செவ்சென்கோ தன்னை 'உடனடியாக' உயர்த்திக் கொண்டார்." இந்தத் தொகுதி சோவியத் யூனியனில் மட்டுமே 110 முறை 46,56,500 பிரதிகள் அச்சிடப்பட்டிருக்கிறது.

செவ்சென்கோவின் உக்ரேனியன் கவிதைகள் அவர் காலத்திலேயே உருசிய, போலிசு, செக் மொழிகளில் பெயர்க்கப்பட்டன. பின்னைய காலங்களில் செருமனி, ஆங்கிலம், இத்தாலி போன்ற பல்வேறு மொழிகளில் பெயர்க்கப்பட்டுள்ளன. பாவேந்தருடைய கவிதைகள் ஆங்கிலத்திலும் பிரெஞ்சு மொழியிலும் குறைந்த எண்ணிக்கையிலேயே மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. தாராசின் கவிதைகளைப் போல பாவேந்தரின் பாடல்களும் உலக மொழிகளில் பெருமளவில் பெயர்க்கப்பட முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

# 9. Bharathidasan and Keats As Romantic Poets

K. CHELLAPPAN

Whether or not we accept the concept of Romanticism as "a forever recurring emotional condition", its supranational character is obvious, and Remak along with Praz, Wellek and Peckham chooses to study it as an European phenomenon because "the fact that within approximately the same period certain tendencies or to use Wellek's coinage, 'sets of norms' different from preceding and following ones, wither as such or in their evolutions, combinations, and accentuations, manage to assert themselves in several countries, points to a supranational literary condition regardless of the causes involved."[1] But if there are significant variations on the pattern even within Europe, and therefore even the concept of a coherent European romanticism is questionable, it is equally true that the Romantic movement has burst the Western boundaries and there have been similar movements in Asia, particularly India. In fact the Renaissance in India is largely due to India's creative encounter with the West and it took the shape of a Romantic resurgence, as there was a new flood of creativity.

According to literary theorists like C. M. Bowra[2] and Wellek,[3] romanticism is characterised by imagination, the glorification of the individual, the human heart and the common man as well as a concept of organic nature which is revealed through abundant nature imagery and the use of

---

1. Henry H. H. Remak, "West European Romanticism : Definition and Scope", in **Comparative Literature : Method and Perspective,** (ed.) Stallknecht and Frenz (Carbondale : Southern Illionois Press, 1971), p. 288.

2. C. M. Bowra, **The Romantic Imagination** (London: Oxford University Press, 1969).

3. Remak, p. 284.

symbol and myth as primary determinants of poetic style! Bharathidasan, the great revolutionary bard of the twentieth century Tamilnadu and the disciple of Bharathi who heralded the Romantic movement in Tamil can be called a romantic in view of his lyricism, glorification of the natural passions of simple folk as well as his use of the language of the common man. Though he does not see anything transcendental in the human reality he accepts the human reality as complete in itself, and in this as well as his naturalism, he is closer to the French Romantics. But he is also comparable to the British Romantics particulary in his use of nature imagery and symbols, and though he does not accept myth in the ordinary sense, he subverts them and some times creates a counter myth of Man based on rationalism and Tamil. He is comparable to Keats in his sensuous approach to love and beauty though he is closer to Shelley in his concept of nature as an embodiment of revolutionary principle and woman as a primary agent in bringing out the revolution. The purpose of this paper is to compare Bharathidasan as a Romantic with Keats.

Bharathidasan's very first poem Enkenku Kaninum Sakthi (Wherever you see is only Sakti) is a hymn to the principle of energy that dances through the cosmos and Earth :

> Wherever you see is only Sakthi--Hai Brother
> The seven seas embody her harmony of colour--there,
> See, myriad spheres bursting like balls
> From the hands of the Mother--in darkness
> Have you seen the seven clouds
> Assemble and roar—there
> The sound of the chuckling of the damsel--Her
> Gentle smile is flashing there!

The most interesting thing about the very first poem of Bharathidasan which is a nature poem is that he sees it completely in human terms. It has been said that to

Western Romantics nature is almost divine and takes the place of God and hence romanticism has been even called a substitute religion or split religion. And Bharathidasan simply intoxicated with the beauty of nature in this poem as well as other nature poems in his first anthology. He often contrasts the joy and harmony in the world of nature with that of Man. Even the first poem in the first anthology of his poems, which is a long narrative poem, Sanjeevi Parvathathin Saral (The slope of the Sanjeevi Hill), begins and ends with lively descriptions of the beauty of nature which provides the basis (Muthar Porul) for the natural love of Kuppan and Vanchi. It refers to the beauty of all the five senses enshrined in the kingdom of nature - the cooing of the Koel, the dance of the multicoloured Poacock, the moist fragrant breeze, the water springs, the fruit trees, the fragrant flowers and the humming bees searching for the honey in the flowers which symbolise the craving for human love. The end of the poem refers to the same but now explicitly relates to the union of the two lovers. The poem is an affirmation of the power of love based on reason for which nature is the reservoir and the Sanjeevi Hill and the herb are aspects of that way of life. We may compare or contrast this with Keats's love poem 'The Eve of St. Agnes'' which also begins and ends with the description of nature, and the middle speaks of the lovers' union and then leaving the palace which is hostile to the world of love. The poem begins :

St. Agnes' eve---ah, bitter chill it was !
The owl, for all his feathers, was a-cold ;
The hare limp'd trembling through the frozen grass,
And silent was the flock in woolly fold :
Numb were the Beadsman's fingers while he told
His rosary, and while his frosted breath.
Like pious incense from a censer old,
Seem'd taking flight for heaven without a death,

Past the sweet Virgin's picture, while his prayer he saith.

At the end, the poem refers to the lovers having fled

into the storm and concludes with the reference to the beadsman though in a modified way as in Bharathidasan :

.... Angela the old
Died palsy-twitch'd, with meagre face deform ;
The Beadsman, after thousand aves told,
For aye unsought-for slept among his ashes cold.

Whereas Bharathidasan's poem provides a congenial background for love, Keats creates a world of love surrounded by hostile men symbolised in hostile nature. But even in Keats, winter only enhances the need for love, because love alone seems to be real in the midst of death and hostility. The religious atmosphere is also contrasted with the passionate union of lovers. But even the sculptured dead seem to be alive, though they are freezing in purgatorial rails. The cold stands for death, but Madeline was praying, yearning for Porphyro's love and Porphyro was imploring saints to grant him the sight of Madeline. Angela provides comedy by obstructing him but he welcomes that and soon enters her chamber and embraces her :

Into her dream he melted, as the rose
Blended its odour with the violet,--
Solution sweet : meantime the frost wind blows
Like Love's alarum, pattering the sharp sleet
Against the window-panes; St. Agnes' moon hath set.

This is comparable to Bharathidasan's description of lovers' union in Kudumbavilaku (The Lamp of the Family):

In the peace of midnight the soft breeze
Entering the window so gently that even the little lamp does not shiver,
Will blow on the body to cool it softly.
And pour melodies in the ears without the aid of the harp

Time will pass, with all sweetness beyond words,
Flaming pairs of eyes; rows of flowerets
Will fold themselves in the lids; Night will pass quickly
Singing the welfare of those joyous souls forgetting themselves.

In all these poems, the emphasis is on the power of passionate love. Keats glorifies love as the moment of being in the infinity of death whereas Bharathidasan says that "love is real; the fruit like kiss is real." His hero is unwilling to make love, because of his fear whereas the heroine who seeks the hero symbolizes the principle of love and reason. The heroine's love is contrasted with the supersitious world of the hero and the mythical tale, which are ultimately unreal. The poem contrasts the supernatural events of the Ramayana with the natural passion of the lovers-he demythologises the Sanjeevi hill in order to glorify human love. The juxtaposition of the mythic tale of Hanuman's carrying the hill with the all too human hero walking up the hill for the herb superficially links the human with the mythical. He equates myth with fact, illusion with reality-which makes bo h comic. But finally the heroine shows the myth to be an illusion, and both return to reality, the reality of love. The poem thus ends up with the subversion of myth and its subordination to the human values of reason and love. Whereas Keats stills dwells on the mediaeval background and his treatment of love is rather romantic, Bharathidasan glorified human love with reference to the simple, average human beings who are not at all heroic. Both celebrate physical sensous love-in fact no other Tamil poem has referred to kissing so naturally and abundantly as this poem of Bharathidasan.

Bharathidasan's philosophy of beauty is more elaborately brought out in his "Alagin Cirippu" (The Laughter of Beauty) and this is comparable to Keats's vision of beauty in his odes. Bharathidasan drinks deeply the beauty of the entire world-

